# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்



தவத்திரு. ஸ்ரீலஸ்ரீ. அ.வே. சாந்திகுமார சுவாமிகள்

# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில்

# சைவசித்தாந்தக் கருத்துக்கள்

தவத்திரு. ஸ்ரீலஸ்ரீ அ.வே. சாந்திகுமார சுவாமிகள்



34, பலாமி வளாகம்
சாஸ்வத் இல்லங்கள், புதிய நத்தம் சாலை
மதுரை . 14.

First Edition : 17. December. 2006
Copyright : Author
Price : Rs. 90/-
Coipies : 1350

**MUTHUKUMARASWAMI PILLAI TAMILIL SAIVA SIDDHANTA KARUTHUKKAL**

By

THAVATHIRU. SRILASRI

**A.V. SHANTHIKUMARA SWAMIGAL**

This book is published with the financial assistance of
**TIRUMALA - TIRUPATHI DEVASTHANAMS**
under their scheme aid to publish Religious Books
**My sincere thanks to T.T.D.**
- AUTHOR

Published by :
THAVATHIRU SRILA SRI A.V. SHANTHIKUMARA SWAMIGAL
34, Palaami Enclave
Shaswath Homes
New Natham Road
MADURAI - 625 014.
Ph : 0452 - 2564268, 6503808



Printed by : Thirumagal Offset Printers, Madurai.
Mobile : 98941 45752



சிவத்தின் சாயி சீரடியில் இருக்கும் சாயி எமதுள்ளம்
சிறக்கும் சாயி சொரூபம் இது ஒளிகாண
செழிக்கும் சாயி பிறவியையொழிக்கும் சாயி பவமதை
தெறிக்கும் சாயி பக்தர்கள் மனமேவும்
தவத்தின் சாயி புரிபிழை பொறுக்கும் சாயி குடிநிலை
தரிக்கும் சாயி துன்பங்கள் பொடியாக
சிதைக்கும் சாயி எமைபணி விதிக்கும் சாயி சகல
தெய்வமென வரும் சாயிநாதனே!

## நன்றியுரை

மதுரை காமராசர் பல்கலைக் கழக, சைவ சித்தாந்தத் தத்துவத் துறையில், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் எனும் பொருள்பற்றி ஆய்வு செய்வதற்கு அனுமதி அளித்த *முன்னாள் சைவசித்தாந்தத் தத்துவத்துறைத் தலைவர்* ***பேராசிரியர் முனைவர் ச. கங்காதரன்*** அவர்களுக்கு *முதற்கண் என் மனமுவந்த நன்றி.*

இவ் ஆய்விற்கு எல்லா வகையிலும் எனக்குத் துணைபுரிந்து அவ்வப்போது எழும் ஐயங்களைத் தெளிவுபடுத்தி, மேற்பார்வையாளராக இருந்து, இவ் ஆய்வு செம்மையாக வெளிவர உறுதுணையாக நின்ற சைவசித்தாந்தத் தத்துவத்துறை **சிறப்புநிலை பேராசிரியர் முனைவர் ச.சாம்பசிவனார்** அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றி.

சந்திக்கும் பொழுதெல்லாம், நூல்கள் எழுதவேண்டும் என்று ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற தமிழியற்புலம் ஒப்பிலக்கியத் துறைத்தலைவர் **பேராசிரியர் முனைவர் இரா. மோகன்** அவர்களுக்கு எனது உளப்பூர்வமான நன்றி!

சைவசித்தாந்தத் தத்துவத்துறையில் என் ஆய்வுப் பணிக்கு பலவகையிலும் உதவி புரிந்து வரும் சைவசிந்தாந்தத் தத்துவத்துறை தலைவர் பொறுப்பு வகிக்கும், திருக்குறள் ஆய்வகத் தலைவர் **இணைப் பேராசிரியர் முனைவர் (திருமதி) ஜலஜா கோபிநாத்** அவர்களுக்கு என் மகிழ்வு கலந்த நன்றி.

இவ் ஆய்விற்கு நூல்கள் தந்து உதவிய, சைவசித்தாந்தத் தத்துவத்துறையில் உதவி ஆசிரியராகப் பணியாற்றும் **முனைவர் (திருமதி) எம். தேவகி இராசமாணிக்கம்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி!

இன்முகத்துடன் என்னை வரவேற்று, குமரகுருபர அடிகள் பற்றிய மலர்களையும் மற்றும் பல குறிப்புகளையும் தந்துதவிய திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ. காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் கலைக்கல்லூரி **முதல்வர் முனைவர் சொ. இரவி** அவர்களுக்கு என் அன்பார்ந்த நன்றி!

இந்நூல் வெளிவர நிதி உதவி அளித்த **திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தார்** அனைவருக்கும், நிர்வாக அலுவலர் – ஆசிரியர் அவர்கட்கும் என் நன்றியை காணிக்கையாக்குகிறேன்.

இந்நூலை நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்த மதுரை **திருமகள் ஆப்செட் பிரிண்டர்ஸ் நிறுவனர் திரு. க. வெங்கடேசன்** அவர்களுக்கு என் நன்றி.

இவ் ஆய்வு செய்வதற்கு மூலகாரணமாக இருந்து இவ் ஆய்வை என்னுள் தூண்டிய என் உடன் பிறந்த சகோதரிகள் **திருமதி. அ. பாலாமணி, திருமதி. அ. லோகநாயகி, திருமதி. அ. ஜெயலெட்சுமி, செல்வி. அ. பொன்மலர்** ஆகியோர்க்கு இந்நூலையும், நன்றியையும் சமர்ப்பிக்கிறேன்.

அனைத்திற்கும் மேலாக ஆன்மீக வழியில் என்னை வழிநடத்திச் செல்லும் **சற்குரு ஷீர்டி சாயிநாதனின் தாமரைத் திருவடி**களைப் பிரார்த்திக்கிறேன்.

நன்றியுடன்
**அ.வே. சாந்திகுமார சுவாமிகள்**
17 டிசம்பர் 2006
மதுரை – 14

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீடு

| | | |
|---|---|---|
| அ.அ. மன்றம் | – | அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம் |
| அ.ப.க. | – | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் |
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| உ.வே.சா. | – | உ.வே. சாமிநாத ஐயர் |
| க.ஆ | – | கட்டுரை ஆசிரியர் |
| கழகம் | – | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட் |
| சூத். | – | சூத்திரம் |
| செ.ப.க. | – | சென்னைப் பல்கலைக் கழகம் |
| த.ப.க. | – | தமிழ்ப் பல்கலைக் கழகம் |
| தி.உ. | – | திருநெறி உரை |
| தொ. ஆ | – | தொகுப்பு ஆசிரியர் |
| ப. | – | பக்கம் |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| பக். | – | பக்கங்கள் |
| பா.எண். | – | பாடல் எண் |
| ம.கா.ப. | – | மதுரை காமராசர் பல்கலைக் கழகம் |
| மு.கா.நூல் | – | முன்னர்க் காட்டிய நூல் |
| மு.கு.பி.த. | – | முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழ் |
| மேலது | – | மேலே காட்டிய நூல்/ஆசிரியர் |
| வி.உ. | – | விளக்கவுரை |
| p. | – | page |

## 1. முன்னுரை

ஆரா இன்ப அருங்கனி பிழிந்து சாரம் கொண்ட சைவ சித்தாந்தத் தேன் அமுதாகிய சிவநெறியாம் செம்மைநெறி சைவநெறியே. இச் சைவநெறியின் சித்தாந்தக் கொள்கைகளைப் பன்னிரு திருமுறைகள் மட்டுமன்றிச் சைவசமயச் சிற்றிலக்கியங்களும் ஆங்காங்கே எடுத்துரைக்கின்றன. இவ்வாய்வில் இத்தகைய கருத்துக்கள் இயம்பப்படுகின்றன.

### ஆய்வின் நோக்கம்

சைவ சித்தாந்தம், பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களைக் கூறும். இவை ஒன்றற்கொன்று தொடர்புடையன. இத் தொடர்புகள் குறித்து விளக்குவதோடு இவற்றால் தெரியலாகும் சைவசித்தாந்தக் கருத்துக்களைக் குமரகுருபரர் அருளிய 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்' வாயிலாக எடுத்துக்காட்டுவதே இவ்வாய்வின் அடிப்படை நோக்கமாகும்.

### ஆய்வு முன்னோடிகள்

சைவ சித்தாந்தக் கொள்கைகளை விளக்கும் நூல்கள் பலவாக உள்ளன. சைவ சித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்ட 'மெய்கண்ட சாத்திரம் என வழங்கும் சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்' குறிப்பிடத்தக்கது. குமாரசாமித் தம்பிரான் எழுதிய 'குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்களில் மெய்கண்ட சாத்திரக் கருத்துக்கள்' என்ற எம்.ஃபில்., ஆய்வேடும்; ந. மாணிக்கம் எழுதிய 'குமரகுருபரர் பாடல்கள் ஓர் ஆய்வு' என்ற முனைவர் பட்ட ஆய்வேடும்; ஆ. கந்தசாமி எழுதிய 'குமரகுருபரர் கற்பனை' என்ற நூலும்; திருப்பனந்தாள் காசித் திருமடமும் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையும் இணைந்து நடத்திய குமரகுருபரர் இலக்கிய ஆய்வு விழா வெளியீடான 'குமர குருபரர் ஆய்வுமாலை – 3 தொகுதிகள்' ஆகியனவும், பிறவும் இவ்வாய்விற்கு முன்னோடிகளாகக் கருதத்தக்கன.

### ஆய்வின் அடிப்படை

ஆய்வு அடிப்படை இருவகையாகும்: 1. முதன்மை ஆதாரம். 2. துணைமை ஆதாரம். உ.வே. சாமிநாத ஐயர் எழுதிய குறிப்புரை ஆராய்ச்சி

முதலியவற்றுடன் கூடிய 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு' (1961) என்ற நூலும்; அ. மாணிக்கம் உரை எழுதிய 'குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு' (2 தொகுதிகள், வர்த்தமானன் பதிப்பகம், பதிப்பு 2000) என்ற நூலும்; சைவ சித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்ட 'மெய்கண்ட சாத்திரம் என வழங்கும் சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்' என்ற நூலும் முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன. மூவர் அருளிய தேவாரமும், மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும், பிறவும் இவ்வாய்விற்குத் துணைமை ஆதாரங்களாகும்.

## ஆய்வு எல்லை

'முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்' சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. எனவே, அந்த அடிப்படையில் குமரகுருபரர் இந்நூலினை இயற்றியுள்ளார். எனவே, பிற சைவ இலக்கியங்களில் இடம்பெறும் அத்துணை சைவசித்தாந்தக் கருத்துக்களும் இந்நூலில் இடம்பெற வாய்ப்பில்லை. எனினும், குமரகுருபர அடிகள் ஆங்காங்கே சைவசித்தாந்தக் கருத்துக்களையும் கூறியுள்ளார். அவ்வகையில் இவ்வாய்வு எல்லை அமைகிறது.

பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருப்பதால் சில இடங்களில் 'கூறியது கூறல் தவிர்க்க இயலாததாகிறது.

## ஆய்வு அணுகுமுறை

இவ் ஆய்வு, பகுப்புமுறை (Analytical), விளக்க முறை (Descriptive), ஒப்பீட்டு முறை (Comparative) ஆகிய அணுகுமுறைகளை மேற்கொண்டது.

## மேற்கோள் விளக்கம்

முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழிலிருந்து கொடுக்கப்பட்ட மேற்கோள்கள் ஆய்வேட்டின் உடற்பகுதியிலேயே அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளன. பிற மேற்கோள்கள் அனைத்திற்கும் அடிக் குறிப்புகள் இடப்பட்டு அவை அந்தந்த இயலின் இறுதியில் 'அடிக்குறிப்புகள்' என்னும் பகுதியில் இடம் பெறுகின்றன.

## ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வு ஏழு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன:

1. முன்னுரை
2. குமரகுருபர அடிகள் வாழ்வும் வாக்கும்
3. பிள்ளைத்தமிழ் இலக்கணமும் இலக்கியமும்
4. வைத்தீசுவரன் கோயில் தலவரலாறு
5. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்:
   - 5.1 பதி இயல் கருத்துக்கள்
   - 5.2 பசு இயல் கருத்துக்கள்
   - 5.3 பாச இயல் கருத்துக்கள்
6. அடியார் பெருமை
7. முடிவுரை.

### முன்னுரை

'முன்னுரை'யாக அமையும் இவ்வியல் ஆய்வு நோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் அடிப்படை, ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, மேற்கோள் விளக்கம், ஆய்வுப் பகுப்பு, இயல்கள், இயல் செய்திகள், முடிவுரை, பின்னிணைப்புகள் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன.

### குமரகுருபர அடிகள் வாழ்வும் வாக்கும்

இவ் இயலில், குமரகுருபரர் வாழ்க்கை வரலாறும், அவர் அருளிய நூல்கள் குறித்தும் விளக்கப்படுகின்றன.

### பிள்ளைத்தமிழ் இலக்கணமும் இலக்கியமும்

சிற்றிலக்கிய வகைகளுள், ஒன்றான பிள்ளைத் தமிழுக்குரிய இலக்கணமும், அதையொட்டி அமைந்த முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழின் அமைப்பும் விளக்கப்படுகின்றன. மேலும், முருகு என்பது 'அழகு, மணம், இளமை, கடவுட்டன்மை' ஆகிய நான்கு பொருள்களைக் குறிக்கும்

ஒருசொல். இதன் வழியாக முருகனின் அழகு, மணம், இளமை, கடவுட்டன்மை கூறப்படுகின்றன.

**வைத்தீசுவரன் கோயில் தலவரலாறு**

இத்தலம், நாகை மாவட்டத்தில் சீர்காழி தாலுக்காவில் சீர்காழிக்கும் – மயிலாடுதுறைக்கும் இடையில் உள்ளது. சிவபெருமான் வைத்தியநாத சுவாமியாகி எழுந்தருளியுள்ள திருத்தலம். எனினும், முருகப் பெருமானுக்குத் தனிச் சந்நிதியும் சிறப்பும் உண்டு. இங்குதான் குமரகுருபரரால் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் பாடப்பெற்றது. இத்தலத்தைப் பற்றிய செய்திகள், இவை, முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில் இடம்பெற்றுள்ள தன்மை ஆகியன குறித்து விளக்கப்படுகின்றன.

**முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்**

இது, மூன்று உட்பிரிவுகளில் சொல்லப்படுகின்றது.

'பதி இயல் கருத்துக்கள்' என்ற பகுதியில் சிவனும், முருகனும் ஒன்று என்பது சுட்டப்படுகிறது. சைவ சித்தாந்த அடிப்படையில் இப்பிள்ளைத்தமிழில் 'பதி இயல் கருத்துக்கள்' இடம் பெற்றுள்ள பாங்கும் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றது.

'பசு இயல் கருத்துக்கள்' என்ற பகுதியில் ஆன்மாவைப் பற்றிய செய்திகள் குமரகுருபரரால் எவ்வாறெல்லாம் எடுத்துரைக்கப்பட்டுள்ளன என ஆராயப்படுகிறது.

'பாச இயல் கருத்துக்கள்' எனும் பகுதியில் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றும் இப்பிள்ளைத்தமிழில் இடம்பெற்றுள்ள தன்மை இயம்பப்படுகிறது.

**அடியார் பெருமை**

சைவ சித்தாந்தம் சொல்லும் நால்வகை நெறிகளில் ஒழுகும் அடியார்களும், அவர்தம் பெருமைகளும் பற்றிப் பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் எடுத்துக்காட்டும் திறன் இங்கு விளக்கப்படுகிறது.

**முடிவுரை**

இவ்வியலில் ஆய்வின் முடிபுகள் தொகுத்துக் கூறப்படுகின்றன. இவ்வாய்வினால் ஏற்படும் பயனும் மேலும் ஆராய்வதற்கு உரிய செய்திகளும் சுட்டப்படுகின்றன.

**பின்னிணைப்புகள்**

இதன்கண் பின்வரும் செய்திகள் இடம்பெறுகின்றன:

1. இவ்வாய்விற்குத் துணைபுரிந்த நூற்பட்டியல்.

2. 36 தத்துவங்கள் – அட்டவணை

3. பரநாதத்தொலி – படம்

## 2. குமரகுருபர அடிகளின் வாழ்வும் வாக்கும்

**முன்னுரை**

பதினேழாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கிய வானில் தோன்றிய ஞானப் பெருஞ்சுடர் குமரகுருபர அடிகள். சைவமும், வையமும் தழைக்க வளமார்ந்த இலக்கியங்களைப் படைத்தருளியவர்; திருச்செந்தூர் முருகப்பெருமானின் திருவருள் பெற்றவர்; தருமை ஆதீனம் மாசிலாமணி தேசிகரின் குருவருள் பெற்றவர்; குருவருள் சிறப்பும், திருவருள் பலமும், கவிஆற்றலும், கற்பனைத் திறமும் ஒருங்கே பெற்றவர்; திவ்வியம் பழுத்த சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகளை எளிமையாக்கி, அதை இலக்கிய வடிவில் தந்து, அனைவரையும் சித்தாந்தத் தேன் பருகச் செய்தவர்; அவர்தம் தமிழ்ப்பற்றும், தெய்வபக்தியும், சமயத் தொண்டும் சமூகத் தொண்டும் தலைசிறந்தவை.

குமரகுருபர அடிகளைப் பற்றியும், அவரருளிச் செய்த பக்திப் பனுவல்களைப் பற்றியும் ஒரு சிறிது ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**வரலாற்று மூலங்கள்**

திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, ''திருப்பனந்தாள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரம்'', (338 பாடல்கள்), சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர் செய்த, ''ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் புராணம்'' (1001 பாடல்கள்), தண்டபாணி சுவாமிகள் அருளிய 'புலவர் புராணத்தில்', 'குமரகுருபரசாமி சருக்கம்' (42 பாடல்கள்), பாரதிதாசன் எழுதிய 'எதிர்பாராத முத்தம்' ஆகிய நூல்களிலிருந்து குமரகுருபர அடிகளின் வரலாற்றைக் கவிதை வடிவில் அறிந்து கொள்ளலாம்.

'குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்' என்னும் நூலில், கா. சுப்பிரமணிய பிள்ளை, அடிகளின் வரலாறு மற்றும் நூல்களை ஆராய்ச்சி செய்துள்ளார்.

திருப்பனந்தாள் காசிமடத்து வெளியீடான ''ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டில்'', உ.வே. சா., அடிகளின் சரித்திரச் சுருக்கத்தை எழுதியுள்ளார். கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடான

'தமிழ்ப்பொழிலில்' 'குமரகுருபர அடிகளும் அவர் நூல்களும்' எனும் தொடர் கட்டுரையில், திருவையாறு கு. கோவிந்தசாமி பிள்ளை என்பார் அடிகளின் வரலாற்றுச் செய்திகளை ஆய்ந்துள்ளார்.

எழுத்தாளர் பாலகுமாரன், அடிகளின் வரலாற்றைச் 'சிம்மாசனம்' எனும் தலைப்பில், புதினமாகத் தந்துள்ளார்.

**குமரகுருபரர் வாழ்வு**

தாமிரபரணி நதிக்கரையில், சைவர்கள் திருக்கயிலையென்றும், வைணவர்கள் வைகுந்தமென்றும் அழைக்கும் பதியாகிய திருவைகுண்டம் என்னும் ஊரில்,[1] சைவ வேளாளர் குலத்தில், கவிராயர் பரம்பரையில், சண்முக சிகாமணிக் கவிராயர், சிவகாமசுந்தரியம்மை என்பாருக்கு அடிகள் முதற் பிள்ளையாய்த் தோன்றினார்.

அடிகளின் பிறந்தநாள், ஆண்டு முதலானவை பற்றிச் சரியான செய்திகள் கிடைக்கப் பெறவில்லை. குமரகுருபரர் பாடல்களை ஆய்வு செய்த ந. மாணிக்கம், அடிகளின் காலம் கி.பி. 1618க்கும் கி.பி. 1654க்கும் இடைப்பட்டது என்று கூறுவர்.[2] திருப்பனந்தாள் மடத்துத் திங்கள் வெளியீடான "ஸ்ரீகுமர குருபரர்" இதழில், செ. இராசு, அடிகளின் பிறந்தநாளையும் (24–06–1625) அடிகளின் பரிபூரண நாளையும் (08–05–1688), "குருவருளும், குமரகுருபரர் வரலாறும்' என்ற கட்டுரையில் குறிப்பிடுகிறார்.[3]

ஐந்து வயது வரை, அடிகள் பேச்சாற்றலின்றி இருந்ததால் வருந்திய பெற்றோர்கள் அவரைத் திருச்செந்தூர் அழைத்துச் சென்று முருகன் அருள் வேண்டி வழிபட்டு வந்தனர். திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளால் பேசும் திறன் பெற்று, அருட்பலமும், புலமை நலமும் கைவரப்பெற்றார். அதனால் 'குமரகுருபரர்' எனும் பெயரையும் பெற்றார்.

குமரகுருபரர், செந்தூர் முருகப் பெருமான் மீது "கந்தர்கலி வெண்பாவை" முதலில் பாடினார். அடிகள் பாடுவதற்கு முருகன், முதல்அடியெடுத்துக் கொடுத்ததைச் சேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் குறிக்கும்.[4] கந்தர்கலி வெண்பாவின் இறுதியில் 'கோடி விக்கினமும்

பல்பிணியும் வந்தாலும் அவற்றைப் பொடிபடுத்தி வரம்தந்து அருள வேண்டும்' என முருகனிடம் அடிகள் வேண்டுவதை, தம் பிணியை நீக்கிய அருட்செயலை நினைந்து பாடினார் எனக் கருதுவர் ஆ. கந்தசாமி.[5]

கந்தர்கலி வெண்பாவை அடுத்து, கைலாசபுரத்தில் எழுந்தருளியுள்ள கைலாசநாதரை வழிபட்டுக் 'கயிலைக் கலம்பகம்' எனும் செவ்விய காப்பியமொன்றை இயற்றினார்.

*". . . . திருக்கயிலை சார்ந்து*
*கன்னவில் சிலையினார்க்குக்*
*கலம்பகமொன்று பாடி"*

என்று குறிப்பிடுகின்றார் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.[6]

முருகன் அருளால், மருவுக்கு வாசனை வாய்த்தாற்போன்று பக்தி எனும் வைராக்கியங்கள் இவரிடத்தே உண்டாகி வளரத் தொடங்கின. சில நாட்கள் கழித்து, தம் தம்பி குமார சுவாமிக் கவிராயரை அழைத்துக் கொண்டு சிவத்தலங்களை வழிபடும் திருப்பயணம் மேற்கொண்டார்.

அடிகள், திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருச்சுழியல், திருக்கானப்பேர், திருவாடானை, திருப்புனவாயில், திருக்கொடுங்குன்றம், திருப்புவனம், திருப்பத்தூர், திருப்பெருந்துறை, திருராமேச்சுவரம், திருப்பரங்குன்றம் முதலிய தலங்களை வணங்கிக் கூடல் மாநகரமான மதுரையை வந்தடைந்தார்.[7] அங்கு அடியார்களின் வேண்டுகோளின்படி மதுரையில் எழுந்தருளியுள்ள அங்கயற்கண்ணியின்மேல் பிள்ளைத் தமிழொன்று பாடினார். அது 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்' எனப்படும். அந்நாளில், அப்போது மதுரையை ஆண்ட மன்னர் திருமலை நாயக்கர் கனவில் மீனாட்சியம்மை தோன்றி, அடிகள் எழுதிய நூலை அரங்கேற்றம் செய்விக்கும்படி கூற, அவரும் அவ்வாறே செய்தார். அந்நூல் அரங்கேற்றும் காலத்தில், மீனாட்சியம்மை சிறுமியாக மன்னர் மடியில் இருந்து கேட்டு உவந்தனள். வருகைப் பருவத்தில், "தொடுக்கும் கடவுட் பழம்பாடல்" எனும் திருப்பாடலைப் பாடியபோது, அரசர் கழுத்திலிருந்த முத்தாரத்தை எடுத்து அடிகளின் கழுத்திலிட்டு மறைந்தருளினாள்.

இக்காட்சியைப் பாரதிதாசன்,

*"பாட்டுக்குப் பொருளாய் நின்ற*
*பராபரச் சிறுமி, நெஞ்சக்*
*கூட்டுக்குக் கிளியாய்ப் போந்து*
*கொஞ்சினாள், அரங்கு தன்னில்*

என அழகுடன் வருணிக்கிறார்.

பின்னர், மன்னரின் வேண்டுகோளின்படி, மதுரைத் திருமடத்தில் தங்கியிருந்து மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை முதலிய பிரபந்தங்களைப் பாடியருளினார்.

'நீதிநெறிவிளக்கம்' என்னும் நூலியற்றியதற்காக இருபதினாயிரஞ் சிறுபொன் வருவாயுடைய 'அரிய நாயகிபுரம்' நன்கொடையாக அளிக்கப்பட்டது.[9] அம்மையைப் பாடினது போன்றே ஐயன்மீது 'மதுரைக் கலம்பகம்' பாடினார்.

வடதிசையை நோக்கிப் புறப்பட்ட அடிகள், திருச்சிராப்பள்ளியடைந்து அதன் சுற்றிலுமுள்ள திருப்பதிகளை வணங்கினார். அங்கு வைணவத் தொண்டர் ஒருவருடன் சமய வாதஞ் செய்து வென்றார். பின்னர், திருநெடுங்களம், திருப்பைஞ்ஞீலி, திருநெய்த்தானம், திருமழபாடி, திருஆமாத்தூர், திருவீழி, திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருப்பழனம், திருக்குடந்தை, திருவிடைமருதூர் முதலிய தலங்களை வணங்கித் திருவாவடுதுறை யடைந்தார்.

அப்பால் மயிலாடுதுறை இறைவனை வணங்கித் தருமபுர ஆதீனம் சென்று, திருக்கயிலாய பரம்பரை 4ஆம் பட்டத்தில் குருமூர்த்தியாக விளங்கிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை வணங்கினார். அங்கே உண்டான சில குறிப்புகளால் அப்பெரியாரே தமக்குரிய ஆசிரியர் என்பதை இவர் தேர்ந்தார். அப்பால் தேசிகர்பால் தீக்கை பெற்று மெய்யறிவு பெற விரும்பினார். தேசிகர் அடிகளைச் சிதம்பரயாத்திரை செய்து மீளும்படி கூறினார். ஞானாசிரியர் கட்டளைப்படி, சிதம்பரயாத்திரை மேற்கொண்ட அடிகள், தருமையாதீன முதல்

தலைவரின் பரமாசாரியார் வீற்றிருந்த திருவாரூர் சென்று இறைவனை வழிபட்டுத் 'திருவாரூர் நான்மணிமாலை' பாடினார். சமயவாதிகளோடு வாதாடி, சித்தாந்த உண்மையைத் தெளிவாக விளக்கினார்.

ஸ்ரீ வைத்தீசுவரன் கோயிலில் தங்கி, அங்கு மருந்தீசரையும், தையல் நாயகியையும், முத்துக்குமார சுவாமியையும் வழிபட்டு வணங்கினார். அப்போது, முருகவேள், 'நம்மைப் பாட மறந்தனையோ?' எனக் கேட்க, 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்' பாடி முருகனைப் போற்றினார்.



சிதம்பரம் அடைந்து அங்கு இறைவனின் திருநடனம் கண்டு, 'சிதம்பரச் செய்யுட்கோவை'யைப் பாடினார். 'அடிகள் யாப்பிலக்கணம் அறிந்தவரோ' என ஒரு ஐயத்தைப் போக்குவதற்காக இந்நூல் பாடப்பட்டதாகக் கூறப்படுகின்றது. யாப்பருங்கலக் காரிகையில் காணப்படும் உதாரணச் செய்யுள் பெரும்பாலும் சைனமதக் கொள்கை தழுவி இருப்பதால், 'சிதம்பரச் செய்யுட் கோவை' சைவம் தழுவியதாக அமைத்துப் பாடப்பட்டதாக உ.வே. சா. கூறுகிறார்.[10] 'சிவகாமியம்மை இரட்டை மணிமாலை'யையும் தில்லையிலே பாடியருளினார்.

குருநாதர் மாசிலாமணி தேசிகர், அடிகளின் பக்குவநிலையை அறிந்து துறவுக்குரிய ஆடை நல்கி 'சிவஞான உபதேசமும் அருளிச்' சொக்கலிங்க பூசையும் எழுந்தருளச் செய்தார். இங்ஙனம் ஞான உபதேசத்தால் குருவருள் பெற்ற அடிகள், குருவருளே திருவருளாக எண்ணி, தம் ஞானாசிரியரையே இறைவனாகக் கண்டு, 'பண்டார மும்மணிக்கோவை' பாடினார். தேசிகர், அடிகளைச் காசிக்குச் சென்று பல அறங்களையும் செய்து வருமாறு பணிக்க, திருவேகம்பம், திருக்காளத்தி வழியாகக் காசியைச் சென்றடைந்தார். அங்கு, 'துண்டி விநாயகர்ப் பதிகமும்', 'காசிக் கலம்பகமும்' பாடினார்.

"தமிழ் நாட்டுப் புலவர்களுள் வடநாட்டுக்குச் சென்று தங்கியிருந்து தமிழ் நூல்கள் பாடியவர் அவர் ஒருவரே" என மு. வ. கூறுவர்.[11]

காசியில் அப்பகுதியை ஆண்ட டில்லி மன்னரின் நட்பினைத் திருவருளால் பெற்றார். இந்து தானி மொழியைத் தமக்கு அருளும்படி கலைமகளை வேண்டி 'சகலகலா வல்லி மாலை' பாடி அம்மொழியில் பேசும் திறம் பெற்றார். அடிகளின் திருவருளை அறிந்த டில்லிமன்னர், அடிகளுக்கு மிகுந்த சிறப்புகள் செய்தார். அவரது சொல்வன்மையைக் கண்டு திருமடம் ஒன்று அமைத்துக் கொடுத்தார். அம்மடம் 'குமாரசாமிமடம்' என்று இன்றும் அழைக்கப் பெறுகிறது. அம்மடத்தில் இந்து தானி மொழியிலும் தமிழ்மொழியிலும் புராணச் சொற்பொழிவுகள் நடத்தினார். தமிழின் பெருமையினையும் சைவத்தின் சிறப்பையும் வடநாட்டில் வடமொழியில் எடுத்துரைத்துப் பெரும்புகழ் பெற்றார்.

கங்கைக்கரையில் மடத்திற்கு அருகிலிருந்து அழிந்துபோன கேதாரநாதர் கோயில் இருந்த இடத்தை அடையாளம் காட்டி, மீண்டும் அத்திருக்கோயிலை அடிகள் கட்டினார்.[12]

காசியில் பளுக்கக் காய்ச்சிய இரும்பை உள்ளங்கையில் ஏந்தியது; சிங்கத்தின் மேலேறி வந்தது; புலால் உணவை மரக்கறி உணவாக மாற்றியது போன்ற அற்புதச் செயல்களைச் செய்தார். தமது சமயத்தை நிலைநாட்டுதற்கு அற்புதச் செயல்களை மேற்கொண்டிருக்கலாம் எனக் கருதுவர் அறிஞர்.[13]

திருஞான சம்பந்தரைப் போன்று சிறுவயதிலேயே இறைவன் திருவருளைப் பெற்றமையாலும், அவரைப் போன்றே சிவிகை, சின்னம் முதலியவற்றோடு சென்றதையறிகின்றமையாலும் இவரைக் 'குட்டித் திருஞான சம்பந்தர்' என கா. சு. பிள்ளை குறிப்பிடுவர்.[14]

இந்து தானி மொழியில் இவர் ஆற்றிய கம்பராமாயணச் சொற்பொழிவுகளைக் கேட்ட துளசிதாசர், தமது இந்தி இராமாயணத்தில் கம்பரின் கருத்துக்களை அமைத்துக் கொண்டார் என்று கூறுவர். துளசிதாசருக்கும் இவருக்கும் கால இடைவெளி மிகுதியாய் இருப்பதால் இச்செய்தி உண்மையாய் இருக்க முடியாதென்று உ.வே. சா. கூறுவர்.[15]

காசிமடம் தவிர, இமயமலைச் சாரலில் ஒரு திருமடம் அமைக்க அடிகள் கருதினார். இதனை வாகீச முனிவர் எனும் தம்பிரானுக்கு அறிவிக்க, அவர் நேபாள நாடு சென்று, முகரங்கி எனுமிடத்தில் திருமடம் ஒன்றை நிறுவி அங்கிருந்து சைவர் யாவருக்கும் வேண்டும் சிவகண்மணிகளைக் காசிக்கும், தமிழகத்துக்கும் அனுப்பினார்.[16] முதல் கிளைமடமாக முகரங்கிமடம் அமைந்திருக்கலாம் என்பதைத் தவிர வேறு வரலாற்றுச் செய்திகள் அறியக்கூடவில்லை.

காசி சென்று சைவத் திருத்தொண்டுகள் பலவற்றை நிறைவேற்றிய குமரகுருபரர், மூன்று முறை தருமபுரம் வந்து, தம் ஞானாசிரியரை வணங்கி மீண்டும் காசிக்குச் சென்றார். காசியிலிருந்து மூன்றுமுறை தருமபுரம் வந்தார் என்று மு. அருணாசலமும், ஒருமுறை தருமபுரம் வந்தார் என்று உ.வே. சா.வும் குறிப்பிடுவர்.[17]

நான்காம்முறை தருமபுரம் வந்து ஞானாசிரியரை வணங்கிய போது, அடிகள், தருமபுரத்திலேயே தங்குவதற்கு வேண்டினார். அதற்கு, ஞானாசிரியர், 'எங்கிருந்தாலும் திருவாரூர் "ஞானப் பிரகாசர் அருளால் பிறவாநெறி கிட்டும்", என்பதைக் கூறி, சொக்கலிங்கரையும், மீனாட்சி அம்மையையும் எழுந்தருளிப் பண்ணிக் கொடுத்து, காசிக்குச் செல்ல விடை கொடுத்தனுப்பினர்.

காசிக்கு வந்த சில நாட்களில், தம் மாணவரான சொக்கநாத முனிவர் என்பாரிடத்தில் பொறுப்புக்களை ஒப்படைத்து, வைகாசித் திங்கள் மூன்றாம் நாளில் சிவப்பேறு எய்தினார். அடிகள் கங்கையுள் மறைந்தாரென்ற கதையும் சொல்லப்படுகின்றது.[18]

### குமரகுருபரர் வாக்கு (அருளிய நூல்கள்)

மொத்தம் பதினாறு பிரபந்தங்கள் பாடி, 'பிரபந்த மன்னர்' என்றழைக்கப்பட்ட அடிகள், தாம்பாடிய அனைத்துப் பிரபந்தங்களிலும் தாம் சார்ந்தொழுகிய சைவ சமயக் கொள்கை புலனாகும் வகையிலும், இறைவனை அறிந்து அருள்பெற்று இன்புற்றமை விளங்கும் வகையிலும் தம் மக்களினத்திற்கு அளித்துள்ளார். அது மட்டுமல்லாமல், அடியார்களின் பெருமைகளையும், வழிபாட்டு முறைகளையும் சமய வாழ்வை மலர்விக்கும் பிற ஒழுக்கங்களையும் புலப்படுத்தியுள்ளார்.

குமரகுருபர அடிகளின் பாடல்கள், கலிவெண்பா, பிள்ளைத்தமிழ், கலம்பகம், கோவை, மாலை, குறம், பதிகம், நீதிநூல் ஆகிய இலக்கிய வகைகளைச் சார்ந்தனவாகும்.

### கலிவெண்பா

### கந்தர் கலிவெண்பா

குமரகுருபர அடிகளால் பாடப்பெற்ற முதல்நூல் கந்தர் கலிவெண்பாவாகும். பிற்காலத்தில் இதைப் பின்பற்றிக் கலிவெண்பா நூல்கள் பல தோன்றியமையே இந்நூலின் சிறப்பை விளக்கும்.

இந்நூல் 122 கண்ணிகளை உடையது. முருகப்பெருமான் ஆறுமுகங்கள் கொண்ட விதத்தையும், அவனின் பல்வேறு ஆற்றல்களையும் விவரிக்கிறது.

இதில் சிவபெருமானின் இறைத்தத்துவம் முதற்கண் முருகப்பெருமானுக்கு எடுத்துரைக்கப் படுகின்றது. எழுத்து முதலாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப் புலமை பாலிக்கப் பெற்றவர் குமரகுருபரர் என்பதை இதனால் அறியலாம். மேலும் இந்நூலை ஒரு தோத்திர, சாத்திர, புராண, பாராயண நூலாகவும் கூறலாம்.[19]

**பிள்ளைத்தமிழ்**

தெய்வத்தையோ, அரசனையோ மற்றும் உயர்ந்தோரையோ குழந்தையாய்ப் பாவித்துக் 'காப்பு' செங்கீரை முதலிய பத்துப் பருவங்கள் பாடுவது பிள்ளைத்தமிழாகும்.

**1) மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்**

குமரகுருபரர் அருளிய 'பெண்பாற் பிள்ளைத்தமிழ்' 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழா'கும். இதில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, கழங்கு, அம்மானை, ஊசல் எனப் பத்துப் பருவங்களும், பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் வைத்துப் பாடப்பெற்றுள்ளது. அம்புலிப் பருவத்தில் சாம, பேத, தான, தண்டம் என்ற 4 உபாயங்களும் கையாளப்பட்டுள்ளன. விநாயகர் துதி உட்பட 102 பாடல்களைக் கொண்டது.

**2) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்**

குமரகுருபரர் அருளிய "ஆண்பாற் பிள்ளைத்தமிழ்" 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழா'கும். இதில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் எனப் பத்துப் பருவங்களும், பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் வைத்துப் பாடப் பெற்றுள்ளது. அம்புலிப் பருவத்தில் சாம, பேத, தான, தண்டம் என்ற 4 உபாயங்களும் கையாளப்பட்டுள்ளன. விநாயகர் துதி உட்பட 101 பாடல்களைக் கொண்டது.

இவ்விரண்டு பிள்ளைத்தமிழ்களிலும், ஆசிரிய விருத்தம், சந்த விருத்தம் ஆகிய பாவகைகள் அமைந்துள்ளன.

**கலம்பகம்**

பாவும் பாவினங்களும் பலவகைப்பட்ட அகப்பொருள் புறப்பொருள்களும் கலந்து வரப் பாடப்படுவதால் 'கலம்பகம்' எனப் பெயர் பெற்றது. கலம்பு + அகம் = கலம்பகம்.

கலம் – பன்னிரண்டு, பகம் என்பது அதில் பாதி. அதாவது ஆறு. இரண்டும் கூட்டப் பதினெட்டு உறுப்பு. எனவே, பதினெட்டு வகையுறுப்புகளைக்

கொண்டது. பதினெட்டு உறுப்பு என்பவை வருமாறு: (1) புயவகுப்பு (2) தவம் (3) தூது (4) அம்மானை (5) பாண் (6) மதங்கியார் (7) கைக்கிளை (8) சித்து (9) ஊசல் (10) களி (11) மடக்கு (12) ஊர் (13) மறம் (14) காலம் (15) தழை (16) தலைவி இரங்கல் (17) சம்பிரதம் (18) கார்[20].

**மதுரைக் கலம்பகம்**

'மதுரைக் கலம்பகம்' என்பது மதுரையைப் பற்றிய கலம்பகம். இரண்டன் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. மதுரைச் சொக்கநாதர் மீது இக்கலம்பகம் பாடப்பட்டது. காப்புச் செய்யுள் உட்பட 103 பாடல்களைக் கொண்டது.

**காசிக் கலம்பகம்**

காசி விசுவேசர் மீது பாடப்பட்ட கலம்பகமாகும். காப்புச் செய்யுள் உட்பட 101 பாடல்களை உடையது.

**கயிலைக் கலம்பகம்**

இது ஸ்ரீ வைகுண்டத்தில் உள்ள கைலாசநாதர் பெயரில் பாடப்பெற்றது. இந்நூல் முழுமையும் கிடைக்கவில்லை. 8 பாடல்களே கிடைத்துள்ளன.

**கோவை**

குமரகுருபர அடிகள் இரண்டு மும்மணிக்கோவை பாடியுள்ளார். 'மும்மணிக்கோவை' என்பது மூன்று மணிகளால் ஆன மாலையைப் போல் மூவகைப்பட்ட செய்யுட்களால் ஆன மாலை என்பது பொருள். மூன்று வகையான செய்யுட்களாவன: ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை என்பன. முதலில் நேரிசை ஆசிரியப்பாவும், இரண்டாவதாக நேரிசை வெண்பாவும், மூன்றாவதாகக் கட்டளைக் கலித்துறையுமாய் இந்நூலில் அமைந்துள்ளன. அந்தாதித் தொடையில் பாடவேண்டும் என்பது இலக்கணம்.

**(1) சிதம்பர மும்மணிக்கோவை**

தில்லை ஸ்ரீ நடராசப் பெருமான் பேரில் பாடப்பட்டது. காப்புச் செய்யுள் உட்பட 31 பாடல்களைக் கொண்டது.

**(2) பண்டார மும்மணிக்கோவை**

தருமையாதீனம் நான்காம் பட்டம் ஸ்ரீமாசிலாமணி தேசிகர் பற்றிப் பாடப்பட்டது. காப்புச் செய்யுள் உட்பட 34 பாடல்களைக் கொண்டதாகும்.

**(3) சிதம்பரச் செய்யுட்கோவை**

இது தில்லை நடராசப் பெருமான் மீது பாடப்பெற்றது. யாப்பிலக்கணச் செய்யுட்கு உதாரணப் பாடல்களாக அமைந்தது. இது 84 பாடல்களைக் கொண்டது.

**மாலை**

குமரகுருபர அடிகள் நான்மணிமாலை ஒன்றும், இரட்டை மணிமாலை இரண்டும், சகலகலா வல்லிமாலை ஒன்றும் பாடியுள்ளார்.

நான்மணிமாலை என்பது முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் என்ற நான்கு வகைப்பட்ட மணிகளால் ஆன மாலையைப் போன்று வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்ற நான்கு வகைப்பட்ட பாக்களை அந்தாதித் தொடையில் கொண்ட நாற்பது செய்யுட்களைக் கொண்டது.

இரட்டை மணிமாலை என்பது அந்தாதித் தொடையில் இருபது, வெண்பாவும் கலித்துறையுமாய் இயைந்து வருவது.

**(1) திருவாரூர் நான்மணி மாலை**

திருவாரூரில் வீற்றிருக்கின்ற தியாகராசர் மீது பாடப்பெற்ற நான்மணிமாலை எனப்படும். இது காப்புச் செய்யுள் உட்பட 41 பாடல்களைக் கொண்டது.

**(2) மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை**

மதுரை மீனாட்சியம்மை மீது பாடிய இப்பிரபந்தம், இருபது பாடல்களைக் கொண்டது.

**(3) தில்லை சிவகாமியம்மை இரட்டை மணிமாலை**

தில்லையில் உள்ள சிவகாமசுந்தரி அம்மையின் மீது பாடியது. இப்பிரபந்தம் இருபது பாடல்களைக் கொண்டது.

**(4) சகலகலாவல்லி மாலை**

குமரகுருபர சுவாமிகள் தாம் இந்து தானி மொழியைத் தெரியக் கலைமகளிடம் வேண்டிப் பாடியது. இது பத்துப்பாடல்களைக் கொண்டது. இது கட்டளைக் கலித்துறை என்னும் யாப்பு வடிவினது.

**குறம்**

'குறம்' என்பது இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலத்தில் நிகழ்ந்தனவற்றையும் அறிந்து கூறுமாறு பாடுவதாகும்.

தலைவன் உலாவருதல், அவனைக் காணத் தலைவி காமுறுதல், திங்கள் தென்றல் முதலியவற்றால் அவள் வருந்துதல், அப்போது குறத்தி ஒருத்தி தலைவிக்குக் குறி கூறுதல் முதலியன குறம் எனப்படும். இது 'குறத்திப்பாட்டு' எனவும், 'குறவஞ்சி' எனவும் உரைக்கப்படும்.

**மதுரை மீனாட்சியம்மை குறம்**

மதுரை மீனாட்சியம்மை மீது பாடியது. காப்புச் செய்யுள் உட்பட 52 பாடல்களைக் கொண்டது.

**நீதிநெறி விளக்கம்**

நீதிநெறிவிளக்கம் அறத்தைக் கூறுவதாகும். திருக்குறள் கருத்தை இந்நூலின்கண் விளக்கமாக ஆசிரியர் உரைத்துச் செல்கின்றார். காப்புச் செய்யுள் உட்பட 101 பாடல்களைக் கொண்டது. இந்நூல் வெண்பா யாப்பில் அமைந்தது.

**காசித்துண்டி விநாயகர் பதிகம்**

இந்நூல் கிடைக்கவில்லை.

**இவ்வியலின் வாயிலாக அறியத்தகும் முடிபுகள்**

1. குமரகுருபர அடிகள் திருவைகுண்டத்தில் தோன்றி, தம் ஐந்தாம் வயதில் திருச்செந்தூர் முருகப் பெருமான் திருவருளால் கந்தர் கலிவெண்பாப் பாடியது முதல், காசியில் கேதார்நாத் திருக்கோயில் கட்டி, காசியிலேயே சிவப்பேறு எய்தினர் என்பது வரை, வாழ்க்கைக் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

2. அடிகளின் அருள்ஞான குரு, மாசிலாமணி தேசிகர் ஆவர்.
3. அடிகள் முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழை, வைத்தீசுவரன் கோயிலில் பாடினார்.
4. அடிகள் மொத்தம் பதினாறு பிரபந்தங்கள் பாடியருளினார். அவர் பாடிய பாடல்கள் கலிவெண்பா, பிள்ளைத்தமிழ், கலம்பகம், கோவை, மாலை, குறம், நீதிநூல் முதலான வகைகளில் அடங்கும்.
5. அடிகள் செய்த 'கந்தர் கலிவெண்பா' ஓர் தோத்திர, சாத்திர, புராண, பாராயண நூலாகத் திகழ்கிறது.
6. பண்டார மும்மணிக்கோவையில் தம் ஞானகுரு மாசிலாமணி தேசிகரையே முழுமுதற் கடவுளாக எண்ணிக் குமரகுருபர அடிகள் பாடியுள்ளார்.
7. இந்து தானி மொழியைத் தனக்கு அருளும்படி, அடிகள் சகலகலாவல்லி மாலை பாடி, அம்மொழியில் பேசும் திறம் பெற்றார்.

**அடிக்குறிப்புகள்**

1. கா. சுப்பிரமணிய பிள்ளை, குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப. 2.
2. ந. மாணிக்கம், குமரகுருபரர் பாடல்கள் – ஓர் ஆய்வு (ஆய்வேடு), ப. 9
3. (அ) செ. இராசு, 'குருவருளும் குமரகுருபரர் வரலாறும்', ஸ்ரீ குமரகுருபரர், தொகுதி – 11, பகுதி–7. (சித்திரை) பக். 306–307.

   (ஆ) ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான், குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்களில் மெய்கண்ட சாத்திரக் கருத்துக்கள் (ஆய்வேடு), ப. 33.

   (இ) சு. இராமன் (க.ஆ)., ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாற்றுக்குறிப்பு, ஸ்ரீ கா. சு. சு. கலைக்கல்லூரி பொன்விழா மலர், பக். 2–4.
4. காஞ்சிபுரம் சிதம்பர முனிவர், ஸ்ரீ சுப்ரமண்யக் கடவுள் சேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ், முத்தப்பருவம். 10.

5. ஆ. கந்தசாமி, குமரகுருபரர் கற்பனை, ப. 14.
6. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, 'திருப்பனந்தாள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரம், பா. எண். 58.
7. கா. சுப்பிரமணிய பிள்ளை, மு. கா. நூல்., ப. 4.
8. பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், பா. எண். 29.
9. கா. சுப்பிரமணியப் பிள்ளை, மு. கா. நூல், ப. 6
10. உ. வே. சா., (தொ. ஆ)., ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ப. 21.
11. மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 210.
12. சு. இராமன், (க. ஆ.,)., மு. கா. நூல்., ப. 1.
13. (அ) கா. சுப்பிரமணிய பிள்ளை, மு. கா. நூல்.,ப. 22.
    (ஆ) ஆ. சிங்கார வேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 472.
14. கா. சுப்பிரமணியபிள்ளை, மு. கா. நூல்., ப. 17.
15. உ. வே. சா., (தொ. ஆ)., மு. கா. நூல்., ப. 22.
16. ஆ. கந்தசாமி, மு. கா. நூல்., ப. 17.
    "தமிழகத்துப் பல கோயில்களிலுள்ள உருத்திராக்க மண்டபத்திற்கு வேண்டிய கண்மணிகள் முகரங்கியிலிருந்து வரப்பட்டிருக்கலாம். வைத்தீசுவரன் கோயிலுள்ள உருத்திராக்க மண்டபம் நினைக்கத்தக்கது. தருமபுர ஆதீனத்தின் மேற்பார்வையில் உள்ள பதினாறு கோயில்களில் இவ்வகை மண்டபங்கள் உள்ளன".
17. சு. இராமன், (க.ஆ)., மு. கா. நூல், ப. 4.
18. ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான், மு. கா. நூல்., ப. 25.
19. மேலது, ப. 25.
20. அ. மாணிக்கம், (உ.ஆ)., குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு, ப. 256.

## 3. பிள்ளைத்தமிழ் - இலக்கணமும் இலக்கியமும்

**முன்னுரை**

வாழ்க்கையின் இலக்காக அமைவது இலக்கியம். வாழ்வின் இலக்கு எது என உணர்த்துவது; ஒவ்வொரு தனிமனிதனின் வாழ்வினையும் இலங்கும் இலக்கு ஆக்குவது இலக்கியம். இத்தகு இலட்சிய நோக்குடைய படைப்புக்கு இலக்கணம் கூறும் நூல்கள் ஒருபாலாக, இலக்கியங்களும், தாமே அவ் இலக்கண இயல்பு நிலைக்கு எடுத்துக்காட்டாய் அமைகின்றன.[1]

தமிழில் நெடும்பாடல்களாய் அமைந்த பிரபந்த வகைகளைச் "சிற்றிலக்கியம்" என்று குறிப்பிடுகிறோம்.[2] சிற்றிலக்கிய வகைகளுள் குறிப்பிடத்தக்கதும், பெருமளவு எண்ணிக்கை கொண்டதுமாகிய ஓர் இலக்கியவகை, பிள்ளைத்தமிழ் ஆகும்.

"பிள்ளைக்கவி முதல் புராணம் ஈறாக" எனப் பிரபந்த மரபியலும், 'பிள்ளைக்கவி அகத்திற்கோவை. . .' என சுவாமிநாதமும் பிள்ளைக்கவியை முதலாவதாக வைத்தே இலக்கிய வகைகளை எண்ணியுள்ளன.[3]

**பிள்ளைத்தமிழ் விளக்கம்**

'தமிழ்' எனும் சொல் பிள்ளைத்தமிழ் எனும் தொடரில் இணைந்திருப்பது பிள்ளைத்தமிழின் தனிச்சிறப்பு. தாம் பாடவிரும்பும் கடவுளையோ அல்லது பாட்டுடைத் தலைவனையோ, பிள்ளையாக்கி, உலகில் வாழும் பிள்ளைகளுக்குரிய இயல்பினை அப்பிள்ளைத்தன்மையின் மேல் ஏற்றி, 'இன்னின்ன, வகையில் அமைக, சிறக்க, பொலிக, விளையாடுக, வருக, விளங்குக' என்னும் முறையில் போற்றிப்பாடும் இலக்கியம் பிள்ளைத்தமிழாகும்.

இப்பிள்ளைத்தமிழ் இருவகைப்படும்.

(1) ஆண்பாற் பிள்ளைத்தமிழ்;

(2) பெண்பாற் பிள்ளைத்தமிழ்.

இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெறும் போது, சிவபெருமானைக் குழந்தையாக அதாவது பிள்ளைப் பருவத்தினனாக

உருவகித்து அவனைப் பாட்டுடைத் தலைவனாக வைத்துப் 'பிள்ளைத்தமிழ் இலக்கியம்' பாடப்பெறும் மரபு இல்லை. ஏனெனில் சிவபெருமானோ, "பிறவா யாக்கைப் பெரியோன்"[4].

**பிள்ளைத்தமிழ் இலக்கணம்**

"பாட்டுடைத் தலைமகன் மீது, அவனைப் பிள்ளைப் பருவமுடையானாக உருவகித்துக் காமப் பொருண்மையோடு பாடப்பெறுதல் உண்டு". இதனைத் தொல்காப்பியம்,

*"குழவி மருங்கினும் கிழவதாகும்"*[5]

என்று கூறும்.

"பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் பலதோன்றி வளர்வதற்கு வேராக அமைந்தது இந்நூற்பா என்பதை மறுத்தல் ஒண்ணாது" என்பர் அறிஞர்.[6]

'மருங்கு என்றதனால் மக்கட்குழவியாகிய ஒரு மருங்கே கொள்க. குழவிப்பருவம் கழிந்தோர் அது வேண்டியகாலும் அக்குழவிப்பருவமே கருதிப்பாடும் என்றற்குக் கிழவதாகும்' என்று நச்சினார்க்கினியர் உரை தருகிறார்.[7]

புறப்பொருள் வெண்பாமாலை,

*"இளமைந்தர் நலம் வேட்ட*
*வளமங்கையர் வகையுரைத்தன்று"*[8]

எனப் பிள்ளைத்தமிழ் பற்றிக் கூறுகிறது.

"குழவிப்பருவமுடைய சிறாரினது நலத்தைக் காமுற்ற, காமப்பகுதி நிறைந்த மகளிரினது தன்மையைச் சொல்வதாக" எனப் பொ. வே. சோமசுந்தரனார் இந்நூற்பாவிற்கு உரை விளக்கம் தருகிறார்.[9]

தொல்காப்பியத்திலும் புறப்பொருள் வெண்பாமாலையிலும் பிள்ளைத்தமிழுக்குரிய நூற்பாக்களை முன்னோடியாகக் கொண்டு பிள்ளைத்தமிழுக்குரிய இலக்கணத்தைப் பாட்டியல் நூல்கள் முழுமையாக எடுத்துரைக்கின்றன.

## பிள்ளைத்தமிழ் இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்கள்

இந்திர காளியப்பாட்டியல், பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப்பாட்டியல், பிரபந்த மரபியல், இலக்கண விளக்கப்பாட்டியல், தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், சுவாமிநாதம், பிரபந்த தீபிகை ஆகிய நூல்கள் பிள்ளைத்தமிழ் இலக்கணம் பற்றிக் கூறுகின்றன.

இப்பிள்ளைத்தமிழைப் "பிள்ளைப்பாட்டு" எனப் பன்னிருபாட்டியலும், இந்திர காளியமும், இலக்கணவிளக்கப் பாட்டியலும் குறிப்பிடுகின்றன.[10] "பிள்ளைக்கவி" யென முத்துவீரியமும், சுவாமிநாதமும், பிரபந்த தீபிகையும் குறிப்பிடுகின்றன.[11] கலைக்களஞ்சியத்தில் பிள்ளைத்தமிழ் "பிள்ளைத் திருநாமம்" எனக் குறிக்கப் பெறுகிறது.[12]

## பிள்ளைத்தமிழ் பாடப்பெறும் காலம்

குழந்தை பிறந்த மூன்றாம் மாதம் முதல் இருபத்தொரு மாதம் வரையுள்ள காலங்களில் பிள்ளைத்தமிழ் பாடப்பெறும். இருபத்தொரு மாதங்களில் ஒன்றித்த பத்து மாதங்களுக்கும் பத்துப் பருவம் உரியதாகப் பாடப்பெற வேண்டும்.

*"மூன்று முதல் மூவேழு திங்களின்*
*ஒற்றை பெற்ற முற்றுறு மதியின்*
*கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே"*[13]

எனவரும் இலக்கண விளக்கப் பாட்டியலின் கருத்தையே பன்னிரு பாட்டியலும், வெண்பாப் பாட்டியலும், நவநீதப் பாட்டியலும், சிதம்பரப் பாட்டியலும் கூறுகின்றன.[14]

இன்னும் ஐந்தாண்டு முதல் ஏழாண்டு வரையிலும் பிள்ளைக்கவி பாடலாம் என வெண்பாப்பாட்டியலும், நவநீதப் பாட்டியலும் கூறுகின்றன. இந்திரகாளியம் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்குப், பிறந்த காலம் தொடங்கிப் பதினாறு வருடம் வரையுள்ள காலத்தையும்; பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குப் பிறந்த காலம் தொடங்கிப் பூப்பு நிகழும் வரையுள்ள காலத்தையும் வரையறுக்கிறது.[15] பெண்பாற் பிள்ளைத்தமிழில் காமன் நோன்பு வேண்டும் பருவத்தைப்

பன்னிரண்டாக எண்ணிப் பாடப்பெறுதல் வேண்டும் எனப் பன்னிரு பாட்டியல் கூறுகிறது.

*"ஆண்டு ஈராறதில் எழிற்காமன் நோன்பொடு*
*வேண்டுதல் தானுள விளம்பினர் புலவர்"*[16]

**பிள்ளைத்தமிழின் யாப்பு**

*"அகவல் விருத்தமும் கட்டளை ஒலியும்*
*கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே"*[17]
*"பிள்ளைப்பாட்டே நெடுவெண்பாட்டு எனத்*
*தெள்ளிதில் செப்பும் புலவரும் உளரே"*[18]

எனவரும் நூற்பாக்களால், ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலி, கலிவிருத்தம், ஆகியவை பிள்ளைத்தமிழில் இடம்பெறும் யாப்புவகைகள் ஆகும் என்றறியலாம். பஃறொடை வெண்பாவும் சிறுபான்மை இடம்பெறும். இதனுடன் கொச்சகக் கலியும் இடம்பெறும் என்பதை இந்திரகாளியம் இயம்புகிறது.[19]

*"அழிவின் அகவலின் விருத்தத்து*
*அறைதல் பிள்ளைக் கவியாம்"*[20]

எனச் சுவாமிநாதமும்,

*"அகவல் விருத்தத்தாற் கிளையளவாம்"*[21]

என இலக்கண விளக்கப் பாட்டியலும், "ஆசிரிய விருத்தத்தை"யே குறிப்பிடுகின்றன.

பல்வேறு யாப்பு வகைகள் பிள்ளைத் தமிழுக்கு உரியனவாக இருந்தபோதிலும், பிள்ளைத் தமிழ் நூல்கள், ஆசிரிய விருத்தம் ஒன்றினாலேயே மிகுதியும் பாடப்பெற்றிருக்கின்றன.

**பாடல் எண்ணிக்கை**

ஒவ்வொரு பருவத்திற்கும் பத்துப்பாடல்கள் பாடுவதே பிள்ளைத்தமிழ் நூலுக்கு உரிய பொது மரபாகத் 'தொன்னூல் விளக்கம்' சொல்கிறது:

*"பத்து உறுப்பாய் ஒவ்வொன்றும் விருத்தம்*
*பப்பத்தாகப் பாடல் என்ப"*[22]

நவநீதப் பாட்டியல், பொதுவாக, ஐம்பது பாடல்களுக்குக் குறையாமல் பாடவேண்டும் என்கிறது.[23]

**பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள்**

பாட்டியல் நூல்கள் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்களாகக் "காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர்" என்ற பத்தினைக் கூறுகின்றன.

*"சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி*
*மாற்றரிய முத்தமே வாரானை - போற்றரிய*
*அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே*
*யம்பு சிறுதேரொடும் பத்து"*[24]

ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பத்துப் பருவங்களில் இறுதியாக அமையும் மூன்று பருவங்களுக்குப் பதிலாக "ஆடும் கழங்கு அம்மானை ஊசல்" என்பன பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கு அமையும் என இலக்கண விளக்கப் பாட்டியல் குறிப்பிடுவதை வேறு சில பாட்டியல் நூல்களும் சுட்டுகின்றன. எனினும் பன்னிரு பாட்டியல் 'சிற்றில் இழைத்தல், சிறுசோறாக்கல், காமன்நோன்பு' ஆகிய பருவங்களையும், பிங்கலநிகண்டு, 'நோன்புநீராடல், பாவையாடல், பந்தடித்தல்' முதலிய பருவங்களையும் பாடுவதற்குரிய பருவங்களாகக் குறிப்பிடுகின்றன.

**பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள்**

**1. காப்புப்பருவம்**

பிள்ளைத்தமிழின் முதற்பருவம் காப்புப்பருவம். பாட்டுடைத்தலைவன் அல்லது தலைமகளைக் காப்பாற்றியருளும்படியும், மேலும் அவர்கள் மேன்மையடையவும் திருமால் முதல் பல்வேறு தெய்வங்களையும் பரவிப் பாடப் பெறுவது.

திருமால் காப்புக் கடவுள் ஆதலின், காப்புப் பருவத்தில் முதற்கண் பாடவேண்டும் என்பது மரபு.

இதனை,

*"காப்பின் முதல் எடுக்கும் கடவுள்தானே*

*பூக்கமழ் துழாய்முடி புனைந்தோன் ஆகும்"*[25]

எனப் பன்னிரு பாட்டியல் கூறி, "திருமால்தான் காதல் கிழவன்; பூவின் கிழத்தியைப் புணர்ந்தவன்; முடி, கடகம், நூல், தார், குழை, மணிப்பூண் ஆகியவை அணிந்த செம்மல். ஆதலால், திருமால்தான் முன்னுற மொழிதற்கு உரியவன்" என்று காரணங்களையும் கூறுகிறது.[26] இதே கருத்தை நவநீதப் பாட்டியலும், இலக்கண விளக்கப் பாட்டியலும்[27] கூறுகின்றன.

மேலும், திருமால், சிவபெருமான், பிரம்மன், விநாயகன், முருகன், சூரியன், வடுகன், எழுவகை மங்கையர், இந்திரன், சாத்தன், குபேரன், நீலி, முப்பத்து மூன்று தேவர், திருமகள், கலைமகள், சந்திரன் ஆகிய இவர்களும் காப்புப் பருவத்தில் இடம் பெறும் கடவுள் ஆவர்.[28]

பாட்டுடைத் தலைவன் நோயின்றி வாழ, பிறகடவுளை வாழ்த்துவது காப்பாகும். இது குழந்தையின் மூன்றாம் திங்களில் நிகழ்வதாகும்.

**2. செங்கீரைப் பருவம்**

இது பிள்ளைத்தமிழின் இரண்டாம் பருவமாகும். 'ஙங, ஙங' என்று குழவி மகிழ்வோடு கூறக்கேட்டு இன்பம் கொள்ளும் பருவம் இது. இவ்வொலி மழலையிலும் இனியது. மழலை ஒரு வகையில் பொருள் கொளற்கு 'ஙங' எனும் இதுவோ, வெறும் ஒலி மாத்திரமாயிருக்கும். தொடையமைதி இல்லாதவற்றைச் 'செந்தொடை' என்று கூறுவது போலச் சொல்லிற்கு உரிய தன்மை இல்லாதவற்றை, "மேதகு செங்கீரை" என்பர் மேலோர்.[29]

"கீர்" என்றால் சொல். "செங்கீரை" என்பதற்கு "அழகிய கிளி" என்ற ஒரு பொருளும் உண்டு. ஒரு காலைப் பதித்து, ஒரு காலைத் தூக்கி, இருபுறத்தும் தலையசைத்துச் சாய்ந்து ஆடும் கிளிபோல், தவழும் போது ஒரு முழந்தாளை ஊன்றி, ஒரு முழந்தாளை மடித்துத் தூக்கி, இரு தோளிலும் ஒன்றும்படிப் பலதரம் சாய்ந்தாடும் குழந்தைப் பருவம் இது என்றும் கூறலாம். செங்கீரைத்தண்டு காற்றில் அசைந்து ஆடுதல் போல் ஆடும் பருவம் இது

என்று கூறுவோரும் உண்டு. இப்பருவம் குழந்தையின் ஐந்தாம் திங்களில் நிகழ்வதாகும்.

### 3. தாலப் பருவம்

இது பிள்ளைத்தமிழின் மூன்றாம் பருவமாகும். "தால்" என்பது நாக்கு. நாக்கை அசைத்துத் தாலாட்டுப் (தால் + ஆட்டு) பாடி குழந்தைகளைத் தூங்க வைப்பது இப்பருவமாகும். தாலாட்டு என்பது பின்னர் 'தால்' என மருவி வழங்குவதாகும். 'தாலே தாலேலோ' எனக் குழந்தைகளுக்குத் 'தாலாட்டு'ப் பாடும் பொழுது அக்குழந்தைகளின் முன்னைச் சிறப்புகளையெல்லாம் எடுத்துச் சொல்லிப் பாடுவது வழக்கம். 'ஓலுடன் ஆட்ட' எனவரும் இறையனார் களவியல் இரண்டாம் சூத்திர உரைக்குறிப்பைக் கொண்டு "ஓலாட்டுதலே" தாலாட்டல் ஆகும் என்பர்.[30]

இப்பருவம் குழந்தையின் ஏழாம் திங்களில் நிகழ்வதாகும்.

### 4. சப்பாணிப் பருவம்

இது பிள்ளைத்தமிழின் நான்காம் பருவமாகும். குழந்தை, கையுடன் கைசேர்த்துக் கொட்டும் பருவம் "சப்பாணி" எனப்படும். 'பாணி' என்றால் கை; 'சப்' என்ற ஒலி எழும்படியாகப் பாணியைத் தட்டுவதால் இது சப்பாணிப் பருவம் எனப்பட்டது.

இப்பருவம் குழந்தையின் ஒன்பதாம் திங்களில் நிகழ்வதாகும்.

### 5. முத்தப் பருவம்

இது பிள்ளைத்தமிழின் ஐந்தாம் பருவமாகும். பிள்ளைத்தமிழின் சிறந்த பருவமாகும். குழந்தையின் முத்தத்தை விரும்பாதவர்கள் யாருமில்லை. குழந்தையைப் போற்றி, 'முத்தம் கொடுக்க வருக' என்று பரிவோடு தாய், தந்தை முதலியோர் வேண்டிப் பாடுவதே முத்தப் பருவமாகும்.

இப்பருவம் குழந்தையின் பதினோராம் திங்களில் நிகழ்வதாகும்.

### 6. வருகைப் பருவம்

இது பிள்ளைத்தமிழின் ஆறாம் பருவமாகும். இப்பருவத்தை, 'வாரானைப் பருவம்' என்றும் கூறுவது வழக்கம். 'தத்தித் தத்தித்' தளர் நடையிட்டு வரும்

குழந்தையைப் பெரியோர்கள் 'அருகில் வருக! வருக!' என வாய் குளிர, மெய்மகிழ கனிவோடு அழைக்கும் பருவம் வருகைப் பருவமாகும்.

இப்பருவம் குழந்தையின் பதின்மூன்றாம் திங்களில் நிகழ்வதாகும்.

**7. அம்புலிப் பருவம்**

இது பிள்ளைத்தமிழின் ஏழாம் பருவமாகும். அம்புலி என்பது சந்திரன். மகவுடன் விளையாட வரும்படி மதியை அழைக்கும் பருவம் இது. இதுவும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் சிறந்த பருவமாகும்.

பிற பருவம் பாடுவது எளிது; அம்புலிப் பருவம் பாடுவது அரிது. "பிள்ளைக்கவிக்கு அம்புலிப் புலியாம்" என்பர் அறிஞர். அம்புலியை அழைக்குங்கால் 'சாம, பேத, தான, தண்டம்' எனும் நால்வகை வழிகள் அமையும்படிப் பாடுதல் மரபு. அம்புலிக்கும் பாட்டுடைத் தலைவனுக்கும் ஒப்புக்கூறுவது "சாமம்" எனப்படும். வேற்றுமை கூறுவது "பேதம்" எனப்படும். விளையாட வந்தால் அம்புலிக்கு உண்டாகும் நன்மைகளைக் கூறுவது. "தானம்" எனப்படும். வராவிடில் விளையும் இன்னல்களை இயம்புவது "தண்டம்" எனப்படும்[31].

இப்பருவம் குழந்தையின் பதினைந்தாம் திங்களில் நிகழ்வதாகும்.

**8. சிற்றில் பருவம்**

இது பிள்ளைத்தமிழின் எட்டாம் பருவமாகும். சிறுவீடு கட்டி விளையாடும் சிறுமியர், தாம் முயன்று கட்டிய சிறிய சிறிய வீட்டை (சிற்றிலை) சிதைக்க வரும் சிறுபருவச் சேயான சிறுவனைப் பார்த்து "சிதைக்க வேண்டாம்" என்றும் "அங்ஙனம் செய்ய வேண்டாம்" என்றும் வேண்டிக் கொள்ளும் பருவமாகும்.

இது குழந்தையின் பதினேழாம் திங்களில் நிகழ்வதாகும்.

**9. சிறுபறைப் பருவம்**

இது பிள்ளைத்தமிழின் ஒன்பதாம் பருவமாகும். ஒலி இன்பம் குழந்தையை மிகவும் ஈர்க்குமாதலின், குழந்தை "பறை" என்னும்

இசைக்கருவியைத் தட்டி ஓசை எழுப்புவது சிறுபறைப் பருவமாகும். இது "சிறு முரசுப் பருவம்" என்றும் கூறப்படும்.

இது குழந்தையின் பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வதாகும்.

### 10. சிறுதேர்ப் பருவம்

இது பிள்ளைத்தமிழின் பத்தாம் பருவமாகும். குழந்தையிடம் சிறுதேரினைக் கொடுத்து உருட்டுமாறு அன்னைமார் வேண்டிக் கொள்ளும் பருவமாகும்.

இது குழந்தையின் இருபத்தொன்றாம் திங்களில் நிகழ்வதாகும். எனினும், இத்திங்கட்கணக்கில் சிற்சில வேறுபாடும் உண்டு.[32]

### பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய மூன்று பருவங்கள்

பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய கடைசி மூன்று பருவங்கள்: அம்மானை, நீராடல், ஊசல் என்பனவாகும்.

### அம்மானைப் பருவம்

இது பெண்பாற் பிள்ளைத்தமிழின் எட்டாம் பருவமாகும். தலைவியைத் தோழிமார்கள் அம்மானைக் காய் கொண்டு ஆடியருளுமாறு வேண்டிப்பாடுவது அம்மானைப் பருவமாகும்.

இது குழந்தையின் பதினேழாம் திங்களில் நிகழ்வதாகும்.

### நீராடற் பருவம்

இது பெண்பாற்பிள்ளைத்தமிழின் ஒன்பதாம் பருவமாகும். தலைவியை நீராடுமாறு வேண்டிப்பாடுவது நீராடற் பருவமாகும். இது குழந்தையின் பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வதாகும்.

### ஊசல் பருவம்

இது பெண்பாற் பிள்ளைத்தமிழின் பத்தாம் பருவமாகும். தலைவியை ஊசலொன்றில் ஏறி விளையாடி மகிழுமாறு வேண்டிப்பாடுவது ஊசல் பருவமாகும்.

இது குழந்தையின் இருபத்தொன்றாம் திங்களின் நிகழ்வதாகும்.

## முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் நூல் அமைப்பு

பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள் பத்தும் அமையத் தனிநூலாகப் பாடப்பட்ட காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டாகும். மன்னன் குலோத்துங்கன் மீது ஒட்டக்கூத்தர் பாடிய "குலோத்துங்கன் பிள்ளைத் தமிழே" பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் முதல் நூலாகும்.[33] அதற்கு அடுத்தாற்போல், 13ஆம் நூற்றாண்டில் அரசன் காங்கேயன் மீது பெரியான் ஆதிச்ச தேவன் பாடிய "காங்கேயன் பிள்ளைத்தமிழும்", 15ஆம் நூற்றாண்டில் திருச்செந்தூர் முருகப் பெருமான் மீது பகழிக் கூத்தர் இயற்றிய "திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழும்", குறிப்பிடத்தகுந்தவைகளாகும்

பக்தி இலக்கியம் வளர்ச்சியடைந்த 17ஆம் நூற்றாண்டில் குமரகுருபரரின் படைப்பில், "மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழும்", "முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழும்" தோன்றின.

இவை இரண்டும் இறையுணர்வின் மகிமைகளையும், தமிழ்மொழியின் அருமைகளையும், போற்றியுரைப்பதோடு, இலக்கியச் சிறப்பும் ஒரு சேரப் பெற்றுள்ளன.

ஆதி வைத்தியநாதபுரி என்றழைக்கப்படும் வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளியுள்ள முத்துக்குமார சுவாமியைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு குமரகுருபரரால் அருளப்பட்டதே முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழாகும்.

இந்நூலின் பெயர், "முத்தையன் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்ச் சேனாதிபதிப் பெருமாள் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்க் குமாரதேவர் பிள்ளைக்கவி" எனவும் ஏட்டுப் பிரதிகளிற் காணப்படுவதாக" உ.வே. சா. குறிப்பிடுகின்றார்.[34]

ஒரு நூலைத் தொடங்கும் பொழுது மங்கலச் சொல்லைப் பெய்து தொடங்க வேண்டும் என்பது மரபு. அதன்படி "பொன் பூத்த" எனும் மங்கலச் சொல்லால் நூல் தொடங்குகிறது.

இந்நூலில் முதற்கண் விநாயகர் வணக்கம் உள்ளது. பின் 'காப்பு' முதல் அனைத்துப் பருவங்களும், அமைந்து, பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் நூறு பாடல்கள் காணப்படுகின்றன.

காப்புப் பருவத்தில் முதல் பாடலானது பாட்டியல் நூல்கள் கூறிய முறைப்படி திருமாலை வேண்டியே பாடப்பெற்றுள்ளது. அதனைத் தொடர்ந்து, வைத்தியநாதர், தையல்நாயகி அம்மை, கற்பக விநாயகக் கடவுள், பிரமதேவர், தேவேந்திரன், திருமகள், கலைமகள், சத்தமாதர்கள், முப்பத்துமுக்கோடி தேவர்கள் என காப்புக் கடவுளர்களும் அப்பருவத்தில் பாடப் பெற்றிருக்கின்றனர்.

அகவல் விருத்தத்து அறைதல் பிள்ளைக் கவியாம் என்பதற்கேற்ப ஆசிரிய விருத்தப் பாவாலும், சந்த விருத்தத்தாலும் பாடல்கள் பாடப் பெற்றுள்ளன.

**'முருகு' என்னும் சொல்**

முருகையுடையவன் முருகன். முருகு என்பது மணம், இளமை, அழகு, கடவுட்டன்மை ஆகிய நான்கு பொருளடங்கிய ஒரு சொல். இச்சொல்லால் பண்டைத் தமிழர்கள் முழுமுதற் பொருளான முருகனை அழைத்தனர்.[35]

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் முருகனை தெய்வக் குழந்தையாக, செல்வக் குழந்தையாக எண்ணிப் பேசவைத்தும், நடக்க வைத்தும், ஆட வைத்தும் மகிழ்கிறார். அழகுக் குழந்தையாகவும், அக் குழந்தை செய்யும் குறும்புகளை அதன் மணமாகவும், காண்கின்றார் குமரகுருபர அடிகள்.

முருகனின் அழகைப் 'பாதாதி கேசமாக' வருணிக்கும் பாடல்:

*"செம்பொற் கருங்குழல் அரிக்குரல் கிண்கிணி*
*சிலம்பொடு கலின்கலினெனத்*
*திருவரையில் அரைமணி கிணின்கிணின் எனப் பொலந்*
*திண்டோளின் வளைகலிப்ப*
*அம்பொன் பகட்டுமார் பில்சன்ன வீரமும்*
*ஆரமும் திருவில் வீச*

*அணிமகர குண்டலம் பருதிமண் டலமென்ன*
*அலர்கதிர்க் கற்றைசுற்றப்*
*பைம்பொன் சுடர்ச்சுட்டி கட்டுசூ ழியமுடன்*
*பட்டமொளி விட்டெறிப்பப்*
*பங்கய மலர்ந்ததிரு முகமண்ட லந்தொறும்*
*பனிமுறுவல் நிலவரும்பக்*
*கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக்*
*குமாரநா யகன்வருகவே!" (மு.கு.பி.த. வருகை.1)*

**முருகனின் அணிகலன்கள்**

திருவடியில் கிண்கிணிச் சிலம்பையும், இடையில் அரை ஞாணும், உடைமணி கட்டிய அரைவடத்தையும், முன்கையில் முதாரியும், தோள்வளையில் வயிரமணி வாகுவலயத்தையும், செச்சைமலர் மாலையையும், மார்பில் சன்னவீரமும் சூரமும், குரவமலர் மாலையையும், காதில் குழைக்கம்பியுடன் அணிந்த குண்டலத்தையும், நெற்றியில் பட்டமும், பொட்டு வைத்த வட்டச் சுட்டியும், தலை உச்சியில் ஒளிமுத்துடன் கூடிய சூழியையும் முருகப் பெருமான் தன் திருமேனியில் அணிந்துள்ள அணிகலன்களாக (மு.கு.பி.த. செங்கீரை. 6) குமரகுருபரர் பட்டியலிடுகிறார்.

**முருகனின் ஆடல்**

குழந்தைகளின் விளையாட்டு என்பது அதன் கற்பனையில் விளைந்த நுண்ணறிவுச் சிந்தனையும் அதன் மூலமாக அது பெறும் இன்பத்தையும் குறிக்கும்.

எல்லா அணிகலன்களையும் 'கேசாதிபாதமாக' அணிந்த முருகன் தனது சிறிய தொந்தியுடன் வயிறு சரிந்தாட ஆடுகின்றான். (மு.கு.பி.த. செங்கீரை. 6) மேலும், அன்னையின் மணிவயிறு குளிரும்படியாக எம்பிரான் மீது தாவி ஏறி இறைவன் மார்பில் குரவைக் கூத்து ஆடுகின்றான். அவ்வாறு ஆடியதால் சிவபெருமானின் செம்மேனியில் உள்ள திருவெண்ணீற்றுத் துகள் மேல்எழுந்து புழுதி எழும்பியது. அதன்பின் கங்கையில் கண்கள் சிவக்கும்படி நீரில்

விளையாடினான் (மு.கு.பி.த. வருகை. 2) என்று குமரகுருபர அடிகளும் குழந்தையாகி முருகனின் ஆடலை அநுபவித்திருக்கிறார்.

உடலின் வெப்பத்தைச் சரிபடுத்த நீராடல் முறை இருந்தாலும், நீரில் அதிகமாக நீராடினால் மீண்டும் உடலின் வெப்பம் ஏறி, கண்கள் சிவக்கும் என்னும் உட்குறிப்பையும் குமரகுருபரர் புலப்படுத்துகிறார்.

விம்முவதும், பொருமுவதும், கீழே விழுந்து அழுது அலறுவதும் அதனால் குரல் கம்முவதும், கண்ணீர்ப் பெருக்கால் கண்ணீர்மை கண்களில் இறங்கிக் கண்கள் சிவப்பதும், அக்கண்ணீர் உடல் முழுக்க நனைப்பதால் உடல் கருமையாதலும், தொட்டிலில் இட்டால் அத்தொட்டிலைச் சிறுகாலால் உதைப்பதும் குழந்தையின் செயல்கள் ஆகும். இத்தகைய செயல்களைச் செய்யாத குழந்தைகள் இல்லை. இச்செயல்களையெல்லாம் தம் மனக்காட்சியில் உருப்பெற வைத்துக் குமரகுருபரர் முருகனை 'செங்கீரையாடுக' (மு.கு.பி.த. செங்கீரை. 8) என்று சொல்லும் பொழுது 'இச்செயல்களைச் செய்ய வேண்டாம்' என்று தெய்வக் குழந்தையிடம் வேண்டுகிறார்.

**சிறுகுறும்பு செய்தல்**

முருகப்பெருமான், தன் தந்தை கையிலுள்ள உடுக்கையைச் சிறுபறைபோல் முழக்குகிறான். அவர் கையில் உள்ள நெருப்பை, அவர் தலையில் உள்ள கங்கை நீரைக் கொண்டு அணைக்கின்றான். பிறையைப் பாம்பின் வாயில் திணிக்கின்றான். தலையிலுள்ள அருகம்புல்லை மானிற்குக் கொடுக்கின்றான். (மு.கு.பி.த. வருகை 2). இவ்வாறு செய்வதுடன் வளர்த்த கைத்தாயரான கார்த்திகைப் பெண்களிடம் குறும்புகளைச் செய்ய அவர்கள் மென்மையான கோல் கொண்டு அடிப்பது போல் கை ஓங்க, அதனை அறிந்த முருகன் சிரிக்கின்றான். (மு.கு.பி.த. முத்தம். 2) "நீ சிற்றில் சிதைக்கும் பொழுது அதன் புழுதி நின் முடியினும் அடியினும் படியும். ஆனால் அது குறித்து நாங்கள் வருந்தவில்லை. அங்குள்ள மணியும் முத்தும் உன் தாயான உமாதேவியின் கண்ணில் பட்டு உறுத்துமே என்று வருத்தமடைகிறோம்" எனச் சிறுமியர் முருகனிடம் வேண்டுகிறார்கள். (மு.கு.பி.த. சிற்றில்.2)

இக்காட்சியில், குமரகுருபரர் முருகனை, "குறும்புகள் செய்யும் தமது செல்லக் குழந்தை"யாகவே படைத்துக் காட்டுகிறார்.

**அஞ்சி அழுதல்**

எம்பிரானின் கண்களை முருகன் மூட, உலகம் இருளில் மூழ்கியது. அதனால் அச்சமுற்ற முருகனை அம்மை எடுத்தணைத்து அவனது அச்சத்தைப் போக்கினாள். எனவே, தம் ஆறுமுகங்களாலும், தந்தையின் ஐந்து முகத்திற்கும், அம்மையின் ஒரு முகத்திற்கும் முத்தம் தந்து நின்றான். அப்பொழுது கங்கை தனக்கும் முத்தம் தர வேண்டுமென்று ஓடிவர, அஞ்சி அம்மையிடம் ஓடினான். அம்மை, தன் கரமலரால் முருகனின் கண்மலரிலிருந்து வழிந்த கண்ணீரைத் துடைத்து அணைத்துக் கொண்டாள். (மு.கு.பி.த. வருகை.5) தாயானவள் அழும் தன் குழந்தையின் கன்னத்தில் வழியும் கண்ணீரைத் துடைத்துவிட்டு, முகத்தோடு முகம் வைத்து முத்தம் கொடுத்து அணைக்கும் காட்சியைப் படிப்பவர்தம் கண்முன்னே படம்பிடிக்கிறார் குமரகுருபரர் எனலாம்.

**கண்ணேறு படுதல்**

குழந்தை முருகனின் அழகை அடியார்கள் தம் கண்களால் மொண்டு மொண்டு உண்டனர். முருகனின் பொன்புயத்தைப் பார்த்ததனால் அவனுக்குக் கண்ணேறு பட்டுவிட்டது. எனவே, 'நீ அடியார்களிடம் பகை கொள்ளாமல் இருக்க வேண்டும்' (மு.கு.பி.த. சிற்றில் 4) என்று குமரகுருபரர் முருகனின் அழகைச் சொல்லாமல் சொல்கிறார்.

"என் கண்ணேறுபடும் என எண்ணி, கனவிலேனும் உன் பாதமலர் அழகைக் காட்டுக என்று வேண்டினாலும் நீ காட்டாது விடுகின்றாய்" எனும் பொருளில்,

*"பண்ணேறு மொழியடியார் பரவி வாழ்த்தும்*
*பாதமல ரழகினை யிப்பாவி பார்க்கில்*
*கண்ணேறு படுமன்றோ கனவி லேனும்*
*காட்டென்றால் காட்டுகிலாய்"*[36]

எனவரும் வள்ளலார் பாடல் இங்கு ஒப்புநோக்கத்தகும்.

**முருகனின் இளமை**

முக்கண் கனியும் (மு.கு.பி.த. தால். 6) புண்ணியம் நாறுமோர் பெண்கனி கனியும் ஈந்த புனித நறுங்கனியான (மு.கு.பி.த. தால். 8) முருகன் அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனியாய் (மு.கு.பி.த. செங்கீரை. 7) என்றும் இளமையாய் இருக்கின்றான்.

முருகனின் இளமை என எண்ணும் பொழுது அவன் வள்ளியிடம் கொண்ட காதலும், தெய்வானைத் திருமணமும் நினைவிற்கு வருவது இயற்கையாகும்.

தெய்வானை திருமணத்தை,

*"மங்கல நாணை மணிக்களம் ஆர்த்து*
*நங்கை முடிக்கொர் நறுந்தொடை சூழ்ந்தான்"*[37]

எனக் கந்தபுராணம் கூறும். அங்ஙனம், நடைபெற்ற திருமணத்தின்போது, திருமண மேடையில் முருகனும் தெய்வானையும் முதன் முறையாகச் சந்தித்தார்களாம்.

முருகன் தன்னை நோக்கத் தெய்வானை நாணத்தால் கவிழ்ந்து நின்றாள். அப்பொழுது அவளது கடைக்கண் நோக்கில் இன்னமுதம் துளிர்த்தது (மு.கு.பி.த. சப்பாணி 2). அமுதம் பட்ட பயிர்கள் யாவும் தளிர்ப்பது போல அவர்களுக்குள் இன்பப்பயிர் தழைத்ததாகக் குமரகுருபரர் தெய்வானை திருமணக் காட்சியை விவரிக்கிறார். முருகனின் மனைவியராக வள்ளியும், தெய்வானையும் கூறப்பட்டாலும் முருகனின் மனைவியாக வள்ளிதான் முதன்முதலாகக் கூறப்படுகின்றாள். இரண்டு மனைவிகளில் வள்ளிதான் புகழ்மிக்க முக்கியமான மனைவியாக விளங்குகிறாள் என்பார் கமீல் சுவலபில்.[38]

வள்ளியின் இனிய பேச்சைக் கேட்பதற்கு விருப்பம் கொண்டு நிற்கின்றான் முருகன் (மு.கு.பி.த. செங்கீரை. 5). அதனால், அமுதத்தையும், தேவர் உணவான அவியுணவையும் வெறுத்து அவளின் மழலை ததும்பும் மொழியைக் கேட்டுக் களிப்புற்றான் (மு.கு.பி.த. முத்தம். 5). அவளது குறிப்பு உணர்ந்து அவளது அருகில் போய் 'உன் குற்றேவல் நான் செய்யும்படி ஏவுக'

என்று கூறி வேண்டி நின்றான் (மு.கு.பி.த. செங்கீரை. 5). 'என்னிடத்தில அருள் செய்வாயாக' என்று அவளுடைய இரண்டு அடிகளையும் வருடி அவளுக்கு முன் நின்று தலைமீது கை கூப்பி (மு.கு.பி. த. சிறுபறை. 9) அவளின் திருவடியை அவனின் திருமுடியில் வைத்துக் கொண்டான் (மு.கு.பி.த. சப்பாணி.10) என வள்ளியின் ஊடல் தீர்க்கும் பொருட்டு முருகன் செய்ததாகக் குமரகுருபரர் குறிப்பிடுகின்றார்.

"ஊடற்காலத்தில் தன் தலைவிகாலில் தலைவன் வீழ்ந்து பணியலாம்" என்பது தொல்காப்பிய விதி.

*"மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்*
*நினையுங் காலைப் புலவியுள் உரிய"*[39]

என்பது தொல்காப்பிய நூற்பா. மனைவியின் ஊடலைத் தணிக்க இத்தகு செயல் நிகழ்தல் உண்டு. எனவே, முருகனும் இவ்வாறே செய்தான்.

மேற்கண்ட தொல்காப்பிய நூற்பாவை எடுத்துக்காட்டி, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் இது போன்ற ஒரு காட்சியை விவரித்துக் காட்டுகிறார் ச. சாம்பசிவனார். அதுவருமாறு:

*". . . சிவபிரான்*
*மகுட கோடீரத் தடிச் சுவ டழுத்தியிடு*
*மரகதக் கொம்பு".*

எனவரும் வருகைப் பருவப் பாடலில்,

"இறைவன், அம்பிகையின் திருவடியை வணங்கும்போது, அம்பிகையின் திருவடியில் உள்ள செம்பஞ்சுக் குழம்பு பட்டு, இறைவனின் திருமுடியில் உள்ள பிறையும் கங்கையும் செந்நிறமடைந்து விட்டன என்கின்றார் அடிகள்".[40]

**முருகனின் தோற்றம்**

இருள் நீங்கும்படி ஒளிர்கின்ற முருகனின் திருவுருவிலிருந்து பரந்த ஒளிக்கதிர்களை இளஞ்சூரியனின் ஒளி என்று எண்ணி அரும்புகள் விரிந்து தாமரைக்காடு மலர்ந்தது (மு.கு.பி.த. வருகை. 3) எனக் கூறும் குமரகுருபர

அடிகள், இருள் நீக்கும் இளஞ்சூரியனைப் போல, ஆன்மாக்களின் இருள் நீகக வந்த இளம் சூரியன் முருகன் என அவனின் கடவுட்டன்மையைப் போற்றுகிறார்.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரரும்,

"*உலகம் உவப்ப வலன் ஏர்புதிரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல்கண்டு ஆஅங்கு*

எனக் கூறுவது இவண் ஒப்புநோக்கத்தக்கது.

## இவ்வியல் வாயிலாக அறியத்தகும் முடிபுகள்

1. பிள்ளைத்தமிழ், ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும். இவற்றில், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், முதல் வகையைச் சார்ந்தது.

2. பிள்ளைத் தமிழுக்குரிய இலக்கணத்தை, தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, பாட்டியல் நூல்கள் ஆகியன விரிவாக எடுத்துரைக்கின்றன.

3. பிள்ளைத்தமிழ், காப்பு முதலான பத்துப்பருவங்களை உடையது. பாடல்களின் எண்ணிக்கை பருவம் ஒன்றிற்கு, பத்துவீதம் நூறு பாடல்கள் இடம்பெறும். ஆசிரிய விருத்தம், கட்டளைக்கலி, கலிவிருத்தம் முதலான யாப்புகளால் பாடப்பெறும்.

4. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழுக்கு 'முத்தையன் பிள்ளைத் தமிழ்' முதலான பிறபெயர்களும் உண்டு.

5. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் முருகனைப் பற்றியது. ஆதலின் முருகு என்னும் சொல்லுக்குரிய அழகு, மணம், இளமை, கடவுட்டன்மை முதலியவை முருகனிடத்தில் ஏற்றிக் கூறப்படுகின்றன. மேலும், அவனின் தோற்றம், ஆடல் மற்றும் விளையாடல்கள் எடுத்துரைக்கப்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. ச. வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 5.
2. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 330.
3. ந. வீ. ஜெயராமன், பாட்டியலும் இலக்கிய வகைகளும், ப. 51.
4. சிலப்பதிகாரம், இந்திர விழவூரெடுத்த காதை, 169.
5. தொல்காப்பியம், புறத்திணையியல், 1030.
6. (அ) க. வெள்ளை வாரணர் (ப.ஆ)., தொல்காப்பியம் புறத்திணையியல் (உரைவளம்)., ப. 292.
   (ஆ) ந. வீ. ஜெயராமன், மு. கா. நூல்., ப. 51.
7. தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை.
8. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், சூத். 50.
9. பொ. வே. சோமசுந்தரனார், (வி.உ)., புறப்பொருள் வெண்பாமாலை, ப. 235.
10. (அ) பன்னிருபாட்டியல், 17.
    (ஆ) இந்திரகாளியம், 31.
    (இ) இலக்கண விளக்கப் பாட்டியல், 806.
11. (அ) முத்துவீரியம், 78.
    (ஆ) சுவாமிநாதம், 167.
    (இ) பிரபந்த தீபிகை, 5.
12. கலைக்களஞ்சியம், தொகுதி VII, ப. 369.
13. இலக்கண விளக்கப் பாட்டியல், 809.
14. (அ) பன்னிருபாட்டியல், 17.
    (ஆ) வெண்பாப்பாட்டியல், 7.
    (இ) நவநீதப் பாட்டியல், 5.
    (ஈ) சிதம்பரப் பாட்டியல், 1.
15. இந்திர காளியம், 29, 30.
16. பன்னிரு பாட்டியல், 21.
17. மேலது, 26.
18. மேலது, 27.

அடிகள், இருள் நீக்கும் இளஞ்சூரியனைப் போல, ஆன்மாக்களின் இருள் நீகக வந்த இளம் சூரியன் முருகன் என அவனின் கடவுட்டன்மையைப் போற்றுகிறார்.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரரும்,

*“ உலகம் உவப்ப வலன் ஏர்புதிரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல்கண்டு ஆஅங்கு*

எனக் கூறுவது இவண் ஒப்புநோக்கத்தக்கது.

## இவ்வியல் வாயிலாக அறியத்தகும் முடிபுகள்

1. பிள்ளைத்தமிழ், ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும். இவற்றில், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், முதல் வகையைச் சார்ந்தது.

2. பிள்ளைத் தமிழுக்குரிய இலக்கணத்தை, தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, பாட்டியல் நூல்கள் ஆகியன விரிவாக எடுத்துரைக்கின்றன.

3. பிள்ளைத்தமிழ், காப்பு முதலான பத்துப்பருவங்களை உடையது. பாடல்களின் எண்ணிக்கை பருவம் ஒன்றிற்கு, பத்துவீதம் நூறு பாடல்கள் இடம்பெறும். ஆசிரிய விருத்தம், கட்டளைக்கலி, கலிவிருத்தம் முதலான யாப்புகளால் பாடப்பெறும்.

4. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழுக்கு ‘முத்தையன் பிள்ளைத் தமிழ்’ முதலான பிறபெயர்களும் உண்டு.

5. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் முருகனைப் பற்றியது. ஆதலின் முருகு என்னும் சொல்லுக்குரிய அழகு, மணம், இளமை, கடவுட்டன்மை முதலியவை முருகனிடத்தில் ஏற்றிக் கூறப்படுகின்றன. மேலும், அவனின் தோற்றம், ஆடல் மற்றும் விளையாடல்கள் எடுத்துரைக்கப்படுகின்றன.

### அடிக்குறிப்புகள்

1. ச. வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 5.
2. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 330.
3. ந. வீ. ஜெயராமன், பாட்டியலும் இலக்கிய வகைகளும், ப. 51.
4. சிலப்பதிகாரம், இந்திர விழவூரெடுத்த காதை, 169.
5. தொல்காப்பியம், புறத்திணையியல், 1030.
6. (அ) க. வெள்ளை வாரணர் (ப.ஆ)., தொல்காப்பியம் புறத்திணையியல் (உரைவளம்)., ப. 292.
   (ஆ) ந. வீ. ஜெயராமன், மு. கா. நூல்., ப. 51.
7. தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை.
8. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், சூத். 50.
9. பொ. வே. சோமசுந்தரனார், (வி.உ)., புறப்பொருள் வெண்பாமாலை, ப. 235.
10. (அ) பன்னிருபாட்டியல், 17.
    (ஆ) இந்திரகாளியம், 31.
    (இ) இலக்கண விளக்கப் பாட்டியல், 806.
11. (அ) முத்துவீரியம், 78.
    (ஆ) சுவாமிநாதம், 167.
    (இ) பிரபந்த தீபிகை, 5.
12. கலைக்களஞ்சியம், தொகுதி VII, ப. 369.
13. இலக்கண விளக்கப் பாட்டியல், 809.
14. (அ) பன்னிருபாட்டியல், 17.
    (ஆ) வெண்பாப்பாட்டியல், 7.
    (இ) நவநீதப் பாட்டியல், 5.
    (ஈ) சிதம்பரப் பாட்டியல், 1.
15. இந்திர காளியம், 29, 30.
16. பன்னிரு பாட்டியல், 21.
17. மேலது, 26.
18. மேலது, 27.

19. இந்திரகாளியம், 31.
20. சுவாமிநாதம், 167.
21. இலக்கண விளக்கப் பாட்டியல், 807.
22. தொன்னூல் விளக்கம், 257.
23. நவநீதப் பாட்டியல், 6.
24. வெண்பாப் பாட்டியல், 8.
25. பன்னிரு பாட்டியல், 23.
26. மேலது, 24.
27. (அ) நவநீதப் பாட்டியல், 1.
(ஆ) இலக்கண விளக்கப் பாட்டியல், 808.
28. பன்னிருபாட்டியல், 22.
29. ச. சாம்பசிவனார், பத்தி நெறிப் பனுவல்கள், பக். 141, 142.
30. கு. முத்துராசன், பிள்ளைத்தமிழ் இலக்கியம், பக். 34, 35.
31. ச. சாம்பசிவனார், மு.கா.நூல். ப. 142.
32. மேலது, மு. கா. நூல், ப. 143.
33. கு. முத்துராசன், மு. கா. நூல், ப. 60.
34. உ. வே. சா., (தொ. ஆ)., ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு, ப. 257.
35. திரு. வி.கல்யாண சுந்தரனார், முருகன் அல்லது அழகு, ப. 11.
36. வள்ளலார், சீவசாட்சி மாலை, பா. எண். 1.
37. கந்தபுராணம், தேவகாண்டம், பா. எண். 8139: 3, 4.
38. Kamil V. Zvelebil, Tiru Murugan, p. 40. "Valli is the most important of all Tamil myths of the second marriage of a God".
39. தொல்காப்பியம், பொருளியல், 1173.
40. ச. சாம்பசிவனார், குமரகுருபரர் ஆய்வுமாலை, தொகுதி:3, ப. 1609.
41. திருமுருகாற்றுப்படை, 1,2.

# 4. வைத்தீசுவரன் கோயில் தலவரலாறு

**முன்னுரை**

'தலம்' என்னும் வடமொழிச் சொல்லுக்கு 'இடம்' என்று பொருள். எனவே இறைவன் திருக்கோயில் கொண்டு எழுந்தருளிய இடமும் 'திருத்தலம்' எனப்பட்டது.

ஒரு தலத்தின் பெருமையை அத்தலத்தைச் சிறப்பிப்பதனாலும், அங்குள்ள திருக்கோயில், தீர்த்தம், மூர்த்திகளைச் சிறப்பிப்பதனாலும் அறியலாம். பொதுவாக, தலவரலாற்றுச் செய்திகள், "சமயத்தை வெறும் தத்துவ வாய்பாடுகளாகக் கூறாது எடுத்துக்காட்டான வாழ்க்கை வரலாறு, சம்பவங்கள், புனைகதைகள் ஆகியவற்றின் வாயிலாகச் சாதாரண மக்களுக்கு விளக்க முனைந்தன"[1] எனலாம்.

குமரகுருபர அடிகள் பாடிய, 'முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்' பாடப்பெற்ற திருத்தலம் 'புள்ளிருக்கு வேளூர்' என்பதாகும். அது, இக்காலத்தில் 'வைத்தீசுவரன் கோயில்' என்று வழங்கப்படுகிறது.

இத் தலவரலாற்றுச் செய்திகள், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் இடம்பெற்றுள்ள பான்மை குறித்து ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**தலமும், தலப்பெயரும்**

'வைத்தீசுவரன் கோயில்' என்னும் திருத்தலம் காவிரி வடகரைத் தலங்கள் அறுபத்துமூன்றில் பதினாறாவது தலமாகும். தருமை ஆதீனத்திற்குச் சொந்தமான 27 திருக்கோயில்களுள் இதுவும் ஒன்று. சென்னை–திருச்சி புகைவண்டிப் பாதையில் சீர்காழிக்கும்–மயிலாடுதுறைக்கும் இடையில் உள்ளது.

புள் (சடாயு), இருக்கு (ரிக்வேதம்), வேள் (முருகன்), ஊர் (சூரியன்) என்ற நால்வரும் பூசித்தமையால் 'புள்ளிருக்கு வேளூர்' என்று பெயர் வந்ததாகத் தலபுராணம் கூறும். கல்வெட்டில், 'புள்இருக்கும் வேளூர்' என்று வருவதாலும் சம்பந்தர், "தள்ளாய அம்பாதி, சடாயுயென்பார் தாமிருவர்", எனப் புட்கள்

வணங்கியதாகப் பாடியதாலும் 'புள் இருக்கும் வேளூர்' என்பதே பொருத்தமாகும் என்பர் அறிஞர்.[2]

அம்பிகை பூசித்தமையால் அம்பிகாபுரம் எனவும் வழங்கப்படும். இக்கோயிலுக்கு 'வினைதீர்த்தான் கோயில்' என்ற பெயரும் உண்டு.

**கோயில் அமைப்பு**

ஆலயம் நகரின் நடுவே, மடவளாகங்களுக்கு மத்தியில் சுமார் 10.70 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. நான்கு கோபுரங்களோடு மேற்கு நோக்கிய சந்நிதி உள்ளது. அம்பாள் சந்நிதி, தெற்கு நோக்கி உள்ளது. ஆலயத்தின் நான்கு திசைகளிலும் காவல்புரியும் காவல்தெய்வங்கள் பற்றி,

*"தெற்கில் கணேசன் திகழ்மேற்கில் பைரவனும்*
*தொடக்க வடக்கில் தொடர்காளி– மிக்ககிழக்*
*குள்ளிருக்கும் வீரனையும் உற்றுப் பணிந்துய்ந்தோம்*
*புள்ளிருக்கு வேளூரிற் போய்."*

எனும் தனிப்பாடல் தெரிவிக்கிறது.

**பிரகாரங்கள்**

கீழைப் பிரகாரத்தின் கீழ்பால் வேம்பு தலவிருட்சம் உள்ளது. மேற்குப் பிரகாரத்தின் கீழ்ப்புறம் ஆறுமுகக் குமாரர் கர்ப்ப கிருகமும், தென்புறம் அலங்கார மண்டபமும் அமைந்துள்ளன. வடக்குப் பிரகாரத்தில் சுவாமி கோயிலை ஒட்டி ஆவுடையம்மன் கோயிலும், தெற்குமுகமாக அங்காரகன் கோயிலும் அமைக்கப்பட்டுள்ளன. தெற்குப் பிரகாரத்தில் தெற்குமுகமாகத் தட்சிணாமூர்த்தி இருக்கிறார். இதன் தெற்கில் அம்மன் சந்நிதியில் சித்தாமிர்தத் தீர்த்தக் குளம் அமைந்திருக்கிறது.

**மூர்த்திகள்**

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனின் திருப்பெயர் ஸ்ரீ வைத்தியநாதர். இவர் சுயம்புலிங்க வடிவில் உள்ளார். மருத்துவராக மட்டுமன்றிப் பிறவிப்பிணிக்கு மருந்தாகவும் திகழ்கிறார். 'தீராதவினைதீர்த்த தம்பிரனார்' என்று கல்வெட்டுக் குறிக்கிறது.[3]

தென்முகமாக எழுந்தருளியுள்ள இறைவியின் பெயர் தையல்நாயகி. இவரைத் திருக்காமக் கோட்டமுடைய பெரியநாச்சியார், வாலாம்பிகை என்று கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

வைத்தியநாதரின் சந்நிதியில் இத்தலத்தின் சிறப்புக்குரிய மூர்த்தியாக முத்துக்குமாரசுவாமி எழுந்தருளியிருக்கிறார். இவர் 'செல்வமுத்துக் குமாரன்' என்று அழைக்கப் பெறுகிறார்.

இங்கு நவக்கிரகங்கள் ஒரே வரிசையில் அமைந்துள்ளன. இது 'அங்காரகத் தலம்' எனவும் வழங்கப்படுவதால், அங்காரகனும் சிறப்புப் பெறுகிறார்.

**தீர்த்தங்கள்**

இத்தலத்தில் பதினெட்டுத் தீர்த்தங்கள் உள்ளன. சித்தாமிர்தத் தீர்த்தம், கோதண்ட தீர்த்தம், கௌதம தீர்த்தம், வில்வ தீர்த்தம், முனிவர் தீர்த்தம், அங்க சந்தான தீர்த்தம், ஆதி காவிரித் தீர்த்தம், கபில தீர்த்தம், சூரிய தீர்த்தம், சூல தீர்த்தம், சேடதீர்த்தம், சோம தீர்த்தம், தக்க தீர்த்தம், பராசர தீர்த்தம், பீம தீர்த்தம், மிருதசஞ்சீவன தீர்த்தம், வித்தியாதரதீர்த்தம் என்பவைகளாகும்.

**சித்தாமிர்தத் தீர்த்தம்**

இதுவே எல்லாத் தீர்த்தங்களிலும் முதன்மையானது. தையல்நாயகி சந்நிதியின் எதிரே உள்ளது.

கிருதயுகத்தில் காமதேனு தன்முலைப் பாலால், இறைவனின் திருமுடியில் அபிசேகம் செய்ய, பால்பெருகி இத்தீர்த்தத்தில் கலந்தமையால் 'கோக்ஷீர தீர்த்தம்' என்றும்,

திரேதாயுகத்தில் சிவனடியார் ஒருவருக்கு கருப்பஞ்சாறு போல் இனித்தமையால் 'இட்சுசாரதீர்த்தம்' என்றும்,

துவாபரயுகத்தில் சடாயு வழிபட்டதால் 'சடாயு தீர்த்தம்' என்றும், இக்கலியுகத்தில் சித்தர்கள் இறைவருக்கு அபிஷேகித்த தேவாமிர்தம் இத்தீர்த்தத்தில் கலந்தமையால் இது 'சித்தாமிர்தத் தீர்த்தம்'[4] எனவும் வழங்கப்படுகிறது.

சதானந்த முனிவர் இதில் நீராடித் தியானம் செய்யும் பொழுதில், பாம்பால் துரத்தப்பட்ட தவளை ஒன்று அவர்மீது விழுந்து தியானத்தைக் கலைத்ததால், எக்காலமும் பாம்பும், தவளையும் இத்தீர்த்ததில் இல்லாது ஒழியக்கடவன என சாபமிட்டார். இதனால் இன்றளவும் பாம்பும், தவளையும் இங்கு இல்லை.

அங்காரகனது செங்குட்டம் நீக்கிய பெருமையும், தக்கனுக்கு உடலும், தலையும் ஒன்று சேரும்படிச் செய்த பெருமையும் இத்தீர்த்தத்திற்கு உண்டு.

இதைச் சுற்றிலும் எட்டுத் திசைகளிலும் எட்டுத்தீர்த்தங்கள் உள்ளன.

**கோதண்ட தீர்த்தம்**

தென்மேற்கு மூலையில் உள்ளது. இராமர் தம் மூதாதையருக்கும் சடாயுவுக்கும் தருப்பணம் செய்தமையால் இது 'இராம தீர்த்தம்' எனவும் வழங்கப்படும்.

பங்குனி உத்திரத்தில் நடராசப் பெருமானே இங்குத் தீர்த்தம் கொடுப்பதாக ஐதீகம். இத்தீர்த்தத்தில் நீராடிய பின்னரே, சித்தாமிர்தத் தீர்த்தத்தில் நீராடவேண்டும் என்பது மரபாக உள்ளது.

**கௌதம தீர்த்தம்**

இராம தீர்த்தத்திற்கு அருகில் தென்கிழக்குத் திசையில் உள்ளது. கௌதம முனிவரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம். இதன் அதிதெய்வம் வாயு பகவான். காவற்கடவுள் சந்திரன். மாமரவிருட்சம் உள்ளது.

**வில்வ தீர்த்தம்**

ஆலயத்திற்கு வடக்கே, விசுவதேவர்களால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம். வில்வ மரங்களால் சூழப்பட்டமையால், 'இது வில்வதீர்த்தம்' என வழங்கப் பெறும். இதன் அதிதெய்வம் இந்திரன். காவற் கடவுள் தண்டபாணி.

**முனிவர் தீர்த்தம்**

இது, கீழைவீதிக்குக் கிழக்கே உள்ளது. தவமுனிவர்கள் எழுவரும் நீராடித் தவம் செய்தமையால் இப்பெயர் பெற்றது. வீரபத்திரர், தக்கன் தலையை அறுத்ததால் துன்புறுத்திய வீரகத்தியைப் போக்க, இதில் நீராடி இறைவனை

வணங்கி, சாபம் நீங்கப் பெற்றார். இதன் அதிதெய்வம் சந்திரசேகர். காவற்கடவுள் கருடன்.

**அங்கசந்தான தீர்த்தம்**

வடகீழ்த்திசையில் உள்ளது. தாரகனோடு போர் புரிந்து, மூர்ச்சித்த தேவர்களைக் காக்க, இறைவன் தன் சூலத்தால் இத்தீர்த்தத்தை உண்டாக்கி, தேவர்களின் சிதைந்த அங்கத்தை அத்தீர்த்த நீரில் நனைத்துப் பொருந்தச் செய்து உயிரூட்டினமையால் இது அங்கசந்தான தீர்த்தம் எனப் பெயர் பெற்றது. இதன் அதிதெய்வம் வைத்தியநாதர். காவற்கடவுள் அ திர தேவர்.

**சடாயு குண்டம்**

சடாயுவின் வேண்டுகோளின்படி, இராமபிரான் அதன் உடலைத் தகனம் செய்த இடம் என்று தலபுராணங்கள் கூறுகின்றன. இதில் உள்ள விபூதி, நோய்தீர்க்க வல்லது.

**தல விருட்சம்**

கீழைக் கோபுர வாயிலில் உள்ள வேம்புவே தலவிருட்சமாகும். இதனை 'வேம்பூமால்' என வழங்குவர். இது கிரேதாயுகத்தில் கதம்ப மரமாகவும், திரேதாயுகத்தில் வில்வமரமாகவும், துவாபரயுகத்தில் வகுளமரமாகவும் இருந்து இப்பொழுது கலியுகத்தில் வேப்பமரமாக விளங்குகிறது எனத் தலவரலாறு கூறும்.[5] இதன் அடியில் ஆதிவைத்தியநாதர் எழுந்தருளியிருக்கின்றார்.

**மண்டபங்கள்**

ஆஸ்தான மண்டபம், அலங்கார மண்டபம், சித்திர மண்டபம், வசந்த மண்டபம், தீர்த்தவாரி மண்டபம், களஞ்சிய மண்டபம் முதலிய மண்டபங்கள் இவ்வாலயத்தில் உள்ளன.

**கல்வெட்டுக்கள்**

இத்தலத்தில் எட்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. தஞ்சை மன்னனாகிய அச்சுதப்ப நாயக்கன் காலத்து ஒன்றும், துளசா மன்னனுடையன (கி.பி.1770) இரண்டும், விக்கிரம சோழனது (கி.பி. 1117) ஒன்றும், ஸ்ரீ சக்கோலோதேவ மகாராசனுடையது ஒன்றும், பெயர், காலம் தெரியாதன மூன்றும் ஆக எட்டுக்

கல்வெட்டுக்கள் உள்ளன. விக்கிரமசோழன் காலத்திய கல்வெட்டில் அவன் மெய்க்கீர்த்தி மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கோயிலுக்கு இறையிலி நிலங்கள் பல அளிக்கப்பட்டதும் திருப்பணிகள் செய்விக்கப் பெற்றதும் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளன [6]

**திருச்சாந்து உருண்டை**

நோய்களைத் தீர்ப்பதில் அன்று முதல் இன்று வரை இணையற்ற தலமாகத் திகழ்கிறது. இங்கு அளிக்கப்படும் நேத்திரப்பிடி சந்தனமும், சடாயுகுண்ட விபூதியும், திருச்சாந்துருண்டையும், சந்தனக்குழம்பும் தீராத நோய்களைத் தீர்த்து வைக்கும் தெய்வீக மருந்துகளாகக் கருதப்படுகின்றன.

ஸ்ரீ செல்வமுத்துக் குமாரருக்கு அர்த்தயாம பூசையில் சாத்தப்படும் நேத்திரபிடிச் சந்தனம், திருச்சாந்துருண்டை வைத்தியநாத சந்நிதியில் கிடைக்கும்.

சுக்கிலபட்சத்து நல்நாழிகையில் அங்க சந்தான தீர்த்தத்தில் நீராடி மண் எடுத்துவந்து, சித்தாமிர்தத் தீர்த்த நீரையும் சேர்த்துக் குழைத்து, ஐந்தெழுத்தை ஓதிக் கொண்டே முத்துக்குமாரர் சந்நிதியில் உள்ள குழியம்மியில் அரைத்து உளுந்தளவாக உருட்டி, அம்பாள் திருவடியில் வைத்து, அர்ச்சித்து, எடுத்து வைத்துக் கொண்டு தேவையானவர்கள் கேட்கும்போது அவை கொடுக்கப்படுகின்றன.[7]

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துச்சாமி தீட்சிதர் கண்பார்வை மங்கியபோது, முத்துக்குமரன் கனவில் அருளியபடி இங்கு வந்து கண்ணொளி பெற்று, 'முத்துக் குமாரய்யனே, பக்தர்க்கிரங்கும் மெய்யனே' எனப் பாடியதாக முருகையா தேசிகர் குறிப்பிடுகிறார்.[8]

**தினசரி பூசைகளும் திருவிழாக்களும்**

நாள்தோறும் காமிக ஆகம விதிப்படி ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன. பிரமோற்சவம் பங்குனித் திங்களில் நடைபெறும். ஐந்தாம் திருநாளன்று ஸ்ரீ செல்வமுத்துக் குமாரர் ஸ்ரீ வைத்தியநாதரைப் பூசித்துச் செண்டு பெறும் காட்சி சிறப்பானதாகும்.

தைத்திங்களில் ஸ்ரீ செல்வமுத்துக் குமார சுவாமிக்குத் திருவிழா நடைபெறும். கடைசிச் செவ்வாயன்று தீர்த்தத் திருவிழா கொண்டாடப்படும். அன்று மக்கள் சித்தாமிர்தத் தீர்த்தத்தில் நீராடி சுவாமி தரிசனம் செய்வர்.

திங்களில் வரும் கார்த்திகை நாட்கள், கந்த சஷ்டி போன்ற விசேடகாலங்களில் மட்டும் ஸ்ரீ செல்வமுத்துக் குமாரருக்கு அபிஷேகம் நடைபெறும். மற்றைய நாட்களில், ஸ்ரீ முத்துலிங்கத்திற்கு மட்டும்தான் அபிஷேகம்.

அர்த்தயாம காலத்தில் ஸ்ரீசெல்வமுத்துக் குமாரருக்குப் பிள்ளைத்தமிழ் பாடி, தாலாட்டுப் பாடி அவரைப் பள்ளி கொள்ளச் செய்து, வழிபாடு நடந்த பின்னர்த்தான் சுவாமிக்கு வழிபாடு நடைபெறும். இது பிள்ளையை உறங்கச் செய்தபின் தாய் தந்தையர் தாம் உறங்கச் செல்வதை ஒக்கும். இதற்குத்தான் 'புழுக்காப்பு' என்று பெயர். இத்தரிசனம், இத்தலத்தில் சிறப்பு மிக்கது. [9]

செவ்வாய்க்கிழமை தோறும் அங்காரகன் ஆட்டுக்கடா வாகனத்தில் எழுந்தருளுவார்.

**திருமுறைப் பாடல்கள்**

இத்தலத்தைப் பற்றித் திருஞானசம்பந்தர் ஒரு பதிகமும், திருநாவுக்கரசர் இரு பதிகங்களும் பாடியுள்ளனர். அருணகிரிநாதர் திருப்புகழ்ப் பாடல்களும் பாடியுள்ளார். குமரகுருபரர் அடிகள் அருளிச் செய்த முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் இத்தலத்திற்கு உரிய சிறப்பாக வைத்துப் போற்றப்படுகிறது. காத்தியாயனிருப்பு வடுகநாத தேசிகர் என்பவரால் இயற்றப்பட்ட 1133 விருத்தங்கள் கொண்ட தலபுராணம் இத்தலத்திற்கு உள்ளது. தருமை ஆதீனம் 10 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அருளிய செல்வமுத்துக் குமாரசுவாமி திருவருட்பாவும்; படிக்காசுத் தம்பிரான் பாடிய புள்ளிருக்கு வேளூர் கலம்பகமும் பெருமை பெற்றவை. காளமேகப் புலவர் தம் தனிப்பாடல்களில் இத்தலம் பற்றியும், சுவாமி பற்றியும், நகைச்சுவையாகப் பாடிச் சென்றுள்ளார். சிதம்பர முனிவர், சேக்ஷத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழில் ஒரு பாடலில் இத்தலத்தைப் பற்றிக்

குறிப்பிடுகிறார். [10] இராமலிங்க வள்ளலார் வைத்தியநாதர் பற்றியும், வைத்திய நாதனே நல்ல மருந்து எனவும் திருவருட்பா அருளிச் செய்துள்ளார்.

**முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில் தலச் செய்திகள்**

வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளியுள்ள வைத்தியநாதப் பெருமானை, சடாயுவும், சம்பாதியும் வழிபட்டதால் இத்தலத்தை, குமரகுருபர அடிகள்,

*"சடாயுபுரம்" (மு.கு.பி.த. காப்பு.5)*
*"சடாயுபுரி" (மு.கு.பி.த. செங்கீரை.5)*

என்னும் பெயர்களால் குறிப்பிடுகிறார்.

அன்னப் பறவையானது சிவபெருமானின் முடித்தலையினைக் காண இயலாமல் வெட்கிவர, கரியமேகம் போன்ற திருமாலுக்கு அரிதான சிவபெருமானின் அடியைக் கண்டதால், சடாயு, சம்பாதி என்ற இரு பறவைகளும் தம் கண்களில் களிப்புடன் இருந்தன.

*"கருமுகிலுக்கரிதாம் அடிவாரம்*
*கண்டிரு பறவைகள் தம்*
*கண்களி பொங்கவொர் பறவை முடித்தலை*
*காணா துட்குவர" (மு.கு.பி.த. தால்.7)*

எனவரும் பாடலில், இருவரும் சிவபெருமானைப் பக்தியுடன் வழிபட்டதைக் குமரகுருபர அடிகள் போற்றுகிறார்.

சம்பாதி, வைத்தீசுவரன் கோயில் தலத்திலுள்ள வெண்மணலையே சிவலிங்கமாகச் செய்து வேதமந்திரத்தால் வழிபட்டதை ஞானசம்பந்தர் பின்வருமாறு கூறுகிறார்:

*"கீதத்தை மிகப்பாடும்,*
*அடியார்கள் குடியாகப்*
*பாதத்தைத் தொழநின்ற*
*பரஞ்சோதி பயிலுமிடம்*
*வேதத்தின் மந்திரத்தால்*
*வெண்மணலே சிவமாகப்*

*போதத்தால் வழிபட்டான்*
*புள்ளிருக்கு வேளூரே"*[11]

இருக்கு வேதம் வழிபட்டமையால்,

*"வேதபுரி" (மு.கு.பி.த. காப்பு.6)*

*"கொழிதமிழ் வேதபுரி" (மு.கு.பி.த. சப்பாணி 7)*

என்றும்,

கந்தவேள் பூசித்த பெருமையுடையதால்,

*"கந்தபுரி" (மு.கு.பி.த. காப்பு.4)*

என்றும்,

சூரியன் வழிபாடு இயற்றி வணங்கியதால்,

*"தினகரபுரி" (மு.கு.பி.த. காப்பு.7)*

*"பருதிபுரி" (மு.கு.பி.த. காப்பு.9)*

என்றும்,

இத்தலத்தை வழிபட்டவர்கள் பெயர்களின் மேல் ஏற்றி

*"வேதபுரி கந்தபுரி புள்ளூரெனப் பொலியும்"*

*(மு.கு.பி.த. செங்கீரை.4)*

என முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் சிறப்பித்துக் கூறும்.

தலவிருட்சமான வேம்பின் அடியில் ஆதிவைத்தியநாதர் எழுந்தருளியிருக்கும் ஊர் என்பதால்

*"ஆதிவைத்திய நாதபுரி" (மு.கு.பி.த. செங்கீரை.7)*

என வரலாற்றுப் பெயரையும் குமரகுருபர அடிகள் பாடுகிறார்.

தேவருலகிலிருந்து தேனும், பாலும் பாய்ந்ததால் புள்ளிகளுக்கு வேளூரில் உள்ள வயல் முழுவதும் தெய்வ மணம் கமழ்ந்ததாக இத்தலத்தின் பெருமையினை விதந்தோதுகின்றார் குமரகுருபர அடிகள்.

*'இழுதுபடும் கழனியும் தெய்வமணநாற'*

*(மு.கு.பி.த. முத்தம்.6)*

என்பது இவர் கூற்று.

இக்கருத்தை,

"குன்றத்தூர் வயல்களில் சேறு மணந்ததால், அவ்வூர் மக்களின் நெற்றியில் நீறு (சைவம்) மணந்தது. கோயில்களில் சாறு (விழா) மணந்தது எனும் சேக்கிழார் பிள்ளைத்தமிழ்ப் பாடலை எடுத்துக் காட்டி, குமரகுருபரர், புள்ளிருக்கு வேளூர் வயலிலுள்ள சேறுகூட தெய்வமணம் மணந்தது எனக் கூறுதல் புதுமையாய் உள்ளது" என விளக்குவார் ஆ. கந்தசாமி. [12]

**சித்தாமிர்த தீர்த்தம்**

முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில், குமரகுருபரர்,

*"பானாறு செந்நெற் பசுங்கதிர் கறித்துமென்*
*பைங்குவளை வாய்குதட்டும்*
*பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம்*
*பாலாறு பங்கயச்செந்*
*தேனாறுடன் கடவுள் வானா றெனப் பெருகு*
*சித்தாமிர்தம்"* *(மு.கு.பி.த. காப்பு.7)*

என, பால், செந்தேன், ஆகாய கங்கை மூன்றும் கலந்து பெருகும் தீர்த்தம் சித்தாமிர்தம் என்று கூறுகிறார். வெம்மையுடைய செஞ்சுடர்க் கடவுளான சூரியன், குளிர்ச்சியுடைய சித்தாமிர்தத்தில் மூழ்கி நீராடிய பின் வெண்சுடர்க் கடவுளான சந்திரன் போலக் குளிர்ச்சியான, தெளிவான அமிர்தத்தைப் பொழிந்தது என்று,

*'சிறைபட்ட தண்டுறைச் சித்தாமிர் தப்பெருந்*
*தீர்த்தம் திளைத்தாடிய*
*செஞ்சுடர்க் கடவுளும் வெண்சுடர்க் கடவுளின்*
*தெள்ளமுத மயமாகலான்'* *(மு.கு.பி.த. காப்பு. 9)*

எனவரும் பாடலில் இத்தீர்த்தத்தின், பெருமையைப் புகழ்கிறார். மேலும், இத்தீர்த்தத்தின் புண்ணியத்தை விளக்குமுகமாக, எம்பிரானது சந்நிதிக்கு முன்பாகக் கொடுக்கப்படுகின்ற விபூதி மற்றும் திருச்சாந்து உருண்டையுடன், எக்காலத்தும் வடியாத சித்தாமிர்தம் என்ற பெருமையான இந்தத் தீர்த்தத்துறையின் சிறிய நீர்த்துளி ஒன்றினை அருந்தினாலே போதும், தீராத நோய்கள் நீங்கிச் சுகம் பெறலாம் எனும் கருத்தமைத்துக் குமரகுருபர அடிகள் பாடுவது வருமாறு:

*"......... எம்பிரான்*
*திருமுன்னர் அள்ளியிடு வெண்சாந்து மற்றைத்*
*திருச்சாந்து நிற்க வற்றாச்*
*சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக் குறும்*
*திவலையொன் றேஅமையுமால்"*

*(மு.கு.பி.த.அம்புலி .5)*

இவ்வாறு, இத்தலத்தில் உள்ள சித்தாமிர்த தீர்த்தத்தைச் சிறப்பித்து ஏற்றிக் கூறுகிறார்.

**தீராத வினை தீர்த்த தம்பிரான்**

இராமன், இலக்குவன், பெருந் தவமுனிவர்களான அத்திரி, ஆங்கீரசன், அகத்தியன், புலத்தியன், வசிட்டன், கோதமன், மரீசி ஆகிய எழுவர், வேதம், சூரியன், சம்பாதி, சடாயு ஆகிய அனைவருக்கும் தீராத வினைகளைத் தீர்த்தருள்வான் வைத்தியநாதன் என்று குமரகுருபரஅடிகள் வைத்தியநாத மூர்த்தியைப் பின்வரும் பாடலால் போற்றுகிறார்:

*"சுருதிக்கும் எரிசுடர் பருதிக்கும் இரவிகுல*
*தோன்றற்கும் இளவலுக்கும்*
*சம்பாதியொடு நற்சடாயுவுக்கும் பெருந்*
*தவமுனிவ ரெழுவருக்கும்*
*தண்ணளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த*
*தம்பிரான் ....."* *(மு.கு.பி.த. செங்கீரை.2)*

திருநாவுக்கரசர்,

*"மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித்*
*தீராத நோய் தீர்த்தருள வல்லான்"* [13]

என்றும்;

வள்ளலார், சுகத்தைத் தரும் வைத்தியநாதனாகிய மருந்தே நல்ல மருந்து அது,

*"அருள்வடிவான மருந்து–நம்முன்*
*அற்புதமாக அமர்ந்த மருந்து*
*இருளற வோங்கும் மருந்து– அன்பர்க்கு*
*இன்னுருவாக இருந்த மருந்து"* [14]

என்றும் வைத்தியநாத மூர்த்தியைச் சிறப்பித்துப் பாடுவர்.

*"மண்டலத்தில் நாளும் வயித்தியராத் தாமிருந்து*
*கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ–தொண்டர்*
*விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூரென் னாதர்*
*மருந்தைப்பார்த் தாற்சுத்த மண்"* [15]

*"வாதக்கா லாந்தமக்கு மைத்துனற்கு நீரிழிவாம்*
*போதப் பெருவயிறாம் பிள்ளைதனக் – கோதக்கேள்*
*வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரர்*
*எந்தவினை தீர்த்தா ரிவர்"* [16]

எனவரும் பாடல்களில்,

அங்க சந்தானத் தீர்த்தத்தில் எடுக்கப்பட்ட மண், சந்தனம், விபூதி சேர்த்துத் தயாரிக்கப்பட்ட திருச்சாந்து உருண்டையின் பெருமையையும், வரும் அடியார்கள் யாவருக்கும் வினைதீர்க்கும் வைத்தியநாதனையும் காளமேகப்புலவர், பழிப்பதுபோலப் புகழ்கிறார் (நிந்தா துதி).

சிவபுண்ணியத்தை, இம்மண்ணுலகில் அடியார்க்கருள் மூர்த்தியும், அஃதிருக்கின்ற புண்ணியத் தலமும், அத்தலத்துள்ள புண்ணிய தீர்த்தமும்

கொடுக்கக் கூடியன. அதுவும், ஈசனின் ஆணைப்படியே கொடுக்கின்றன.[17] அந்த சிவபுண்ணியம், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றினாலும் சிறந்து விளங்கும் வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளியிருக்கும் வைத்தியநாதப் பெருமானையும், தையல்நாயகியையும், அவர்களின் செல்வன் செல்வமுத்துக் குமார சுவாமியையும் வழிபடும் அடியார்களுக்குக் கிடைக்கும்.

**இவ்இயலின் வாயிலாக அறியத்தகும் முடிபுகள்:**

1. வைத்தீசுவரன் கோயிலின் வேறு பெயர் 'புள்ளிருக்கு வேளூர்'. என அழைக்கப்படும்.
2. இத்திருத்தலத்தில் அமைந்துள்ள கோயில் அமைப்பு, பிரகாரங்கள், மூர்த்திகள், தீர்த்தங்கள், தலவிருட்சம், மண்டபங்கள், ஆகியவை பற்றி விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.
3. இத்திருக்கோயிலில் நடைபெறும் தினசரி பூசைகளும், நடைபெறும் திருவிழாக்களும் பற்றிய செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.
4. முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில் இத்தலத்தைப் பற்றிய செய்திகள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன என்பதும் சுட்டப்பட்டுள்ளது.
5. இத்தலத்தில் உள்ள 'சித்தாமிர்த தீர்த்தம்' மிகவும் புகழும், புண்ணியமும் வாய்ந்தது.

**அடிக்குறிப்புகள்**

1. வே. கிருஷ்ணசாமி, தமிழில் தல புராண இலக்கியம், ப.112.
2. வை. சுந்தரேச வாண்டையார். ஆதாரம் : வைத்தீசுவரன் கோயில், ப.5.
3. வைத்தீசுவரன் கோயில், ப.6.
4. புள்ளிருக்கு வேளூர்த் தல வரலாறு, பக்.11,12.
5. மேலது, பக்.14,15.
6. திருப்புள்ளிருக்கு வேளூர்த் திருப்பதிகங்கள், ப.12.
7. மேலது, பக். 9,10.
8. வைத்தீசுவரன் கோயில், ப.11.

9. 1. புள்ளிக்கு வேளூர்த் தலவரலாறு, ப.17.
   2. வைத்தீசுவரன் கோயில், ப. 7.
10. 1. திருப்புள்ளிருக்கு வேளூர்த் திருப்பதிகங்கள், ப.11.
   2. புள்ளிருக்கு வேளூர்த் தலவரலாறு, ப.37.
11. திருஞான சம்பந்தர் தேவாரம், புள்ளிருக்கு வேளூர், பா. எண்.5.
12. ஆ.கந்தசாமி, குமரகுருபரர் கற்பனை, ப.133.
13. திருநாவுக்கரசர் தேவாரம், புள்ளிருக்கு வேளூர், பா.எண்.8.
14. வள்ளலார், திருவருட்பா 3ஆம் தொகுதி, ப.1502.
15. காளமேகப்புலவர் (தனிப்பாடல்கள்)
   ஆதாரம் : புள்ளிருக்கு வேளூர்த் தலவரலாறு, ப.63.
16. மேலது, ப. 63.
17. பாம்பன் சுவாமிகள், தகராலயரகசியம், ப. 183.

# 5. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் சைவசித்தாந்தக் கருத்துக்கள்

## 5.1 பதிஇயல் கருத்துக்கள்

### முன்னுரை

சைவ சித்தாந்தம் கூறும் உள்பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் எனப்படும். இம்மூன்றனுள், 'பதி' முதன்மைப் பொருளாகும். 'பதி' என்பது 'இறைவன்' அல்லது 'கடவுள்' ஆகும்.

குமரகுருபர அடிகள் அருளிய முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழில், 'பதியியற் கொள்கை' பற்றிச் சொல்லப்பட்ட கருத்துக்களை ஒரு சிறிது ஆராய்வதே இவ்வியலின் நோக்கம்.

### முப்பொருள்கள்

பதியாகிய கடவுள் என்று உண்டோ, அன்றே பசுவாகிய உயிரும், அவ்வுயிர்களைப் பிணித்துள்ள பாசமும் உண்டு. இவ்வாறு கூறுவதனால், இம் மூன்று பொருள்களும் சமமானவை எனல் தகாது. இறைவனே முதற்பொருள்; தகுதியால் வெவ்வேறு இயல்புடையன. இம் முப்பொருள்களுள் 'பதி'யே எஞ்சிய இரண்டின்மேல் ஆதிக்கமும் ஆணையும் கொண்டுள்ளது.[1]

### 'பதி' விளக்கம்

'பதி' என்பதற்குக் 'காக்கிறவன்' என்பது பொருள். பா–காத்தல், தி–வினைமுதற்பொருள் விகுதி.

> "பசுக்களைப் பாசத்திலிருந்து விடுவித்துக் காத்தல்பற்றி
> முதல்வன் பதி எனப்படுகின்றான்".[2]

'பதி' என்னும் வடசொல்லுக்கு 'இறை' என்பது தமிழ்ச்சொல். 'இறை' என்னும் சொல்லிலிருந்து, 'இறைவன்' என்னும் சொல் பெறப்பட்டுள்ளது. இச்சொல்லுக்கு மெய்யியல் அடிப்படையில்,

"உயிர்களையும் உலகையும் இடமாகக் கொள்ளுதலினால்
இறைவன் எனக் கூறப்படுகின்றான்".[3]

எனப் பொருள் தருகிறார் க. வச்சிரவேல் முதலியார். மேலும், 'கடவுள், இயவுள், அம்மையப்பர், முதல்வன், ஆதி, தலைவன்' என்னும் பெயர்களும் 'பதி'க்கு வழங்குவன என்பர் அறிஞர்.[4]

**சிவகுக தத்துவம்**

எல்லாம் வல்ல முழுமுதற் பரம்பொருளாக விளங்கும் சிவபெருமானே ஈடு இணையற்ற இறைவன் எனப்படுகின்றான். சிவனின் அருட்செல்வனான முருகன் சிவதத்துவங்கள் அனைத்தும் கொண்டுள்ளதால், சிவனும் முருகனும் ஒருவரே. சிவபெருமானது சக்தியின் வெளிப்பாடே முருகன். சிவபரம்பொருளின் தொன்மை வடிவு ஆறுமுக வடிவம். தொன்மையும் நன்மையும் உடைய இந்த ஆறுமுக வடிவு அநாதியானது.[5]

முருகப் பெருமானுக்குள்ள முகங்கள் ஆறும் அவருக்குச் சிவபெருமான் தந்தவை. சிவனின் ஐந்து திருமுகங்கள், ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்பனவாகும். இந்த ஐந்து முகங்களுடன் கீழ்நோக்கும் அதோமுகமும்சேர்ந்த ஆறுமுகமே முருகப் பெருமான்.

'அதோ முகம்' 'ஞானமே வடிவான' சிற்சித்தியை உணர்த்தி நிற்பது என்பதைத் திருமூலர்,

*" அதோ முகமாகிய அந்தமில்சத்தி*
*அதோ முகமாகி அமர்ந்திருந் தானே "*[6]

எனக் கூறுகிறார்.

தம்முடைய ஐந்து முகங்களோடு அதோமுகத்தையும் சிவபெருமான் முருகனுக்கு அளித்தார் என்பதை,

*"ஐந்து முகத்தோ டுஅதோமுகமும் தந்து "*[7]

என்று கந்தர் கலிவெண்பாவில் கூறும் குமரகுருபரர், சிவபெருமானின் இயல்புகள் அனைத்தையும் முருகன்மேல் ஏற்றிக் கூறுகிறார்.

சண்முகப் பெருமான் திருமுகங்கள் ஆறும், முருகன் பிரணவ வடிவுடையவர் என்பதையும், அவர் ஓங்காரத்தின் உட்பொருளாய் உள்ளவர் என்பதையும் உணர்த்தி நிற்பன. 'ஓம்' என்ற பிரணவத்திற்குப் பல்வேறு கலைகள் (கூறுகள்) சாத்திரங்களில் கூறப்பெறும். இவற்றுள் பஞ்சகலைப் பிரணவமும் ஒன்று. இப்பிரணவம் ஐந்து கூறுகளையுடையது. இவை, அகாரம்; உகாரம்; மகாரம்; விந்து; நாதம் என்ற ஐந்துமாம். ஐந்தும் சேர்ந்ததே 'ஓம்' என்ற பிரணவம். 'ஓம்' என்ற சமட்டிப் பிரணவமே அதோமுகம்.[8]

கந்த புராணத்தில்

*"நான்முகம் இருமூன்று உண்டால் நமக்கு அவைதாமே கந்தன்*
*தன் முக மாகியுற்ற; தாரகப் பிரம மாகி*
*முன்மொழி கின்ற நந்தம் மூவிரண்டு எழுத்தும் ஒன்றாய்*
*உன்மகன் நாமத்து ஓராறு எழுத்தென உற்ற அன்றே"*[9]

என்பதும்,

*"ஆதலின் நமது சத்தி அறுமுகன் அவனும் யாமும்*
*பேதகம் அன்றால் நம்போல் பிரிவிலன் யாண்டும் நின்றான்*
*ஏதமில் குழவி போல்வான் யாவையும் உணர்ந்தான் சீரும்*
*போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்கு அருள வல்லான்"*[10]

என்பதும், ஆகிய இவை சிவபெருமான் கூற்றாக வருவன. இதனால் முருகனே 'ஆறுமுகச் சிவன்' என்பது தெரியவரும்.

*"தனக்குத் தானேமக னாகிய தத்துவன்*
*தனக்குத்தா னேயொரு தாவருங் குருவுமாய்*
*தனக்குத்தா னேயருட் டத்துவங் கேட்டலும்"*[11]

என்பது தணிகைப் புராணம்.

"சிவபெருமானே முருகனாக அவதரித்தவன்; அம்முருகனே சிவபெருமானுக்குத் தத்துவ உபதேசம் செய்த குருவுமாவான்!" என்பது பொருள்.

இதனால் 'சிவனும் முருகனும் வேறல்லர்' என்பது தெளிவு. இதைக் குமரகுருபரர், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழில்,

"*வித்தும் முளையும் வேறன்றே*" (மு.கு.பி.த. சிற்றில்.8)

எனக் குறிப்பிடுகிறார்.

**பதி முதன்மை**

பதி ஒன்றே; தனக்கு மேல் ஒரு முதல் இல்லாத ஒப்பற்றவன்; காணப்படும் எவ்வகைப் பொருள்களுக்கும் முற்பட்ட பொருளாய, அவையெல்லாவற்றுக்கும் முடிந்த சார்பாய் நின்று, அவற்றைத் தொழிற்படுத்துவோன் ஆதல் பற்றி, 'முதல்வன்' என ஓதப்படுகின்றான்.

"*ஒன்று என்றது ஒன்றே காண்; ஒன்றே பதி;*"[12]

என, சிவஞான போதமும்,

"*முன்னை முதல் என்ன முதலில்லோன்*"[13]

எனப் போற்றிப் பஃறொடையும்,

"*. . . . . . . . மேல் ஒருவன்*
*இல்லாதான் எங்கள் இறை*"[14]

எனத் திருவருட்பயனும் கூறுவதை முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், குமரகுருபரர், பின்வருமாறு கூறுகின்றார்:

*'ஒருவன் நீ'* (மு.கு.பி.த. சிறுபறை. 1)
*'தனிமுதல்வன்'* (மு.கு.பி.த. காப்பு. 10)
*'முதற்றேவே'* (மு.கு.பி.த. சப்பாணி. 10)
*'முழுமுதலே'* (மு.கு.பி.த. தால்.6)

"*மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லால்புவியில் வேறில்லை*"
*(மு.கு.பி.த. அம்புலி.6)*

"பதியாகிய முருகன் ஒருவனே; முதல்வன்; ஒப்பற்றவன்" என்பது கருத்து.

**தெய்வங்களின் தலைவன்**

உயிர்களுக்கு, அவைகள் நன்மையின் பொருட்டு, அவற்றின் வினைக்கேற்பப் பலவகைப் பிறவிகளைக் கொடுப்பவன் 'பதி' ஆவான். அப்பிறவிகள் பொதுவாக ஏழுவகையினவாம். அவற்றுள் ஒருவகை 'தேவர்' அல்லது 'தெய்வம்' என்பது. இஃது ஏனைய பிறவிகளை விடச் சிறந்ததேயன்றிக் கடவுளாகாது. ஆகவே, 'கடவுள்வேறு'; தெய்வம் வேறு எனவும், 'கடவுள் ஒருவன் தான்; தெய்வங்கள் பல' எனவும் உணர்தல் வேண்டும்.[15]

தெய்வங்களும் ஏனைய பிறவிகளை அடைந்த உயிர்கள் போல் பிறக்கும், ஆயுட்காலம் வரையில் வாழ்ந்து பின்னர் இறந்து செல்லும் நிலையினவாம்.

*". . . . . . . மற்று அத்தெய்வங்கள்*
*வேதனைப் படும்; இறக்கும்; பிறக்கும் மேல் வினையும் செய்யும்;*
*ஆதலான் இவை இலாதான்"*[16]

என்றும்;

*"தோற்றம் நாசம் தனக்குஇலாநாதன்"*[17]

என்றும் சிவஞான சித்தியார் குறிக்கும் .

இக்கருத்துப் பற்றி சி. அருணைவடிவேலு முதலியார் கூறுவதாவது: கடவுளே உயிர்களுக்கு அருள்புரிதற்பொருட்டே தெய்வ நிலைக்கு இறங்கி வந்து நிற்றல் உண்டு. அந்நிலை 'சம்புபட்சம்' என்றும் பிறந்து வேதனைப்பட்டு இறப்பது 'அணுபட்சம்' என்றும் சைவசமயம் பிரித்துக் கூறும். சம்பு – சிவன்; அணு – ஆன்மா அல்லது உயிர்.

பிறவி எடுத்தவர்கள் இன்ப துன்பங்களை நுகர்ந்து, பின் இறந்தவர்கள் அணுபட்சத்தினர் எனப்படுவர். அவ்வாறின்றி எவையேனும் காரணம் பற்றி வருதல் போல் தெரியாதவாறு மின்னல் போல விரையத் தோன்றிச் சில சொற்கள் வழங்குதல் அல்லது சிலவற்றை இயற்றுதல் இவைகளைச் செய்து விரைய மறைதலோடு நிற்பவர்கள் சம்புபட்சத்தினர் என்று அறிந்து

கொள்ளப்படுவர். அதனால், ஒருவனாகிய பதி சிவபெருமானே; ஏனையோர் யாவரும் ஆன்ம வருக்கத்தினராகிய பசுக்களே என்பதாம்.[18]

எனவே, 'செத்துப் பிறக்கின்ற தெய்வங்களின் தலைவன் முருகன்' எனும் பொருளில் குமரகுருபர அடிகள்,

*"செத்துப்பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள"*

*(மு.கு.பி.த. செங்கீரை.1)*

என முருகனைப் போற்றுகிறார்.

அருணகிரிநாதரும்,

*"பெம்மான் முருகன் பிறவான் இறவான்"*[19]

என்று அருளிச் செய்வர்.

ஊழிதோறும், தான் ஒருவனாய்த் தனித்து நிலைபெற்ற பதியைத்தவிர, பிறரெல்லாம் ஒடுங்கி, பின் தோன்றும் பசுவர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர். அவர்களுக்குப் பாசப்பிணிப்பும் உண்டு என்பதாம்.

*"நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்*
*ஆறு கோடி நாராயணர் அங்ஙனே*
*ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்*
*ஈறு இலாதவன் ஈசன் ஒருவனே"*[20]

எனும் திருநாவுக்கரசர் வாக்கும்,

*"பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்*
*பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு"*[21]

எனும் திருமூலர் வாக்கும் இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

**முருகனும் வேதாகமங்களும்**

'ஓதி உணர்தற்கரிய வேதாகமங்கள், அரிய உயர்ந்த பொருளை எடுத்துரைப்பதனால், 'முதல்நூல்' எனப்படும். அவற்றை உயிர்கள் உய்யும் பொருட்டு இறைவன் அருளிச் செய்தான் என்பதை,

*"அருமறை ஆகமம் முதனூல் அனைத்தும் உரைக்கையினான்"*[22]

எனச் சித்தியார் கூறும்.

இங்ஙனம் யாவற்றுக்கும் மூலம் என்று கூறிக்கொள்கிற வேதங்கள், முருகனின் பெருமை தமக்கு எட்டாததால் அவனிடம் ஓலமிட்டு அரற்றின. இதனை,

*"மூல மெனக்குல நான்மறை ஓலிடு" (மு.கு.பி.த. தால்.6)*
*"அங்கண்மறை ஓலிட்டரற்ற" (மு.கு.பி.த. அம்புலி.3)*

எனவரும்தொடர்களால் குமரகுருபர அடிகள் குறிப்பிடுவர். யாவரும் வழிபடுவதற்குரிய முதலும், இறுதியும் இல்லாத வெட்டவெளியைத் தாண்டி வேதத்தின் உச்சியில் நிறைந்து நின்ற செல்வம் உடையவன்; பழமையான வேதங்களுக்கு முதல்வன்; செறிவான வேதப் பொருளாகவும் இருப்பவன் முருகனே என்றும் குமரகுருபரர் பின்வருமாறு அருளிச் செய்கிறார்.

*". . . . வெளிகடந்து மறை*
*முடிவினின்று நிறை செல்வனை"(மு.கு.பி.த. காப்பு. 4)*
*"பழமறைகட்கொரு முதல்வன்" (மு.கு.பி.த. சிறுபறை.10)*
*"ஆயிரம் மறைக்குமொரு பொருளாயிருப்பவன்"*
*(மு.கு.பி.த. அம்புலி. 4)*

'வேதங்களின் செறிந்த பொருளாக இருப்பவன் நான்தான்' எனும் செருக்கினால் மார்தட்டிக் கொள்கிறான் முருகன் என்பதை,

*"நாலந்த வேதத்தின் பொருளோனே*
*நானென்று மார்தட்டும் பெருமாளே"*[23]

என அருணகிரி நாதர் அருளிச் செய்தது போலக் குமரகுருபரரும், முருகனை

*"செழுநான்மறையின் பெருஞ்செல்வச் செருக்கே"*
*(மு.கு.பி.த. சிற்றில். 2)*

என்று ஏற்றிப் போற்றுகிறார்.

**மகாசங்கார காரணன்**

பிரமன், மால், உருத்திரன் ஆகிய மூவரையும் மும்மூர்த்திகள் என்பர். அவர்கள் தங்கள் புண்ணியச் சிறப்பினால், ஒப்பற்ற முதல்வனின் ஆணைவழி

நின்று முறையே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களை ஓர் எல்லையளவில் செய்வர். இதனை,

*"புரைத்தஅதி காரசத்தி புண்ணியம் நண்ண லாலே"*[24]

எனச் சித்தியார் சுட்டும்.

அவர்களுள் உருத்திரன், தான் செய்த புண்ணியம் மிகுதியால் சிவனுக்குரிய உருவத்தையும், தொழிலையும், உருத்திரன் என்னும் பெயரையும் பெற்று, அவனது சங்காரத் தொழிலை ஒரு பகுதியளவில் மட்டும் செய்வான். அவன் செய்வது 'ஏகதேச சங்காரம்' எனப்படும். அம்மூவரும் ஒவ்வொரு தொழிலுக்கே உரியவராக, சிவபெருமான் ஒருவனே முத்தொழிலுக்கும், முதல்வனாய் நின்று இறுதிக்காலத்தில் எல்லாவற்றையும் எஞ்சாமல் ஒடுக்குகின்ற முற்றழிப்பைச் செய்வான். முற்றழிப்பு 'மகாசங்காரம்' எனப்படும். அதனைச் செய்பவன் 'மகா சங்கார காரணன்' எனப்படுகின்றான்.[25]

எனவே, மகா சங்காரம் ஆகிய முற்றழிப்பைச் செய்யும் சிவபெருமான் முதற்கடவுள் ஆவார்!

முற்றழிப்பைச் செய்யும் 'மகாசங்கார' காலமான ஊழிக்காலத்தில், சிவபெருமான் ஊழிக் கூத்தாடி, எல்லாப் பொருள்களையும் அழித்துத் தனி ஒருவனாய் நிற்கும் ஒப்பற்றவன் ஆவான்.

"ஐந்து பூதங்களும் மற்றும் எல்லாம் அழியும் ஊழிக் கடைமுடிவில் தனி ஒருவனாய் ஊழிக் கூத்தாடுபவன் சிவபெருமானே" எனும் பொருளில், கம்பர் கூறுவது வருமாறு:

*"பாழிப் புயம் உயர் திக்கிடை அடையப் புடைபடர*
*சூழிச் சடைமுடி விண்தொட அயல்வெண்மதி தொத்த*
*ஆழிப் புனல்எரி கால்நிலம் ஆகாயமும் அழியும்*
*ஊழிக் கடைமுடிவில் தனி உமைகேள்வன்"*[26]

இத்தகைய ஊழி பற்றிய மகா சங்கார காலத்தை,

*"சகதண்ட மண்டல மடுக்கழியு நாள்" (மு.கு.பி.த. அம்புலி.10)*

என்றும்;

ஊழிப் பெருவெள்ளத்தை

*"விளைக்கும் பெரும்புவன மொக்கக் கரைத்தகடை*
*வெள்ளம்"* *(மு.கு.பி.த. சிறுபறை.2)*

என்றும்;

ஊழிக்காற்றை, *"கடைக்கால்"* *(மு.கு.பி.த. சிறுதேர். 4)*

என்றும்;ஊழித்தீயை,

*"கடைக்கனல்"* *(மு.கு.பி.த. சிறுதேர். 2)*

என்றும் குமரகுருபரர் குறித்திடுவர்.

ஊழிக் காலத்தில் உலகங்களை அழிக்கும் மகாசங்கர காரணனான பரமனே மீண்டும் உலகங்களைப் படைத்தளிப்பான். இக்கருத்தை,

*"தாங்கரும் காலம் தவிர வந்திருவர்*
*தம்மொடுங் கூடினார் அங்கம்*
*பாங்கினால் தரித்துப் பண்டுபோல் எல்லாம்*
*பண்ணிய கண்ணுதற் பரமர்"*[27]

எனச் சம்பந்தர் கூறுவர்.

சிவஞான போதமும்,

"ஒடுங்கிய உலகம், தான் ஒடுங்குவதற்கு இடமாய் நின்ற சங்கார காரணனிடத்தே மீளத் தோன்றும்" எனும் பொருளில்

*"இலயித்த தன்னில் இலயித்தது ஆம்"*[28]

என்று எடுத்துக் காட்டும்.

ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றுவிப்பதன் காரணம், உயிர்களைப் பற்றியுள்ள ஆணவமலம் நீங்கும் நிலையை அடைதல் பொருட்டாம்.[29]

ஊழி முதல்வனாக உள்ள ஈசனே ஆதியாகவும் இருக்கின்றான். உலகத் தோற்றம் முதலானவற்றிற்கு 'ஆதி'யாகவுள்ள பரமன், தனக்கு ஓர் ஆதியோ, அந்தமோ இல்லாதவன் என்பது எண்ணத்தக்கது.[30]

கார்மேகம் போன்ற நிறத்தினையும், உந்திச் சுழியிலிருந்து தோன்றுகின்ற தாமரை மலரையும் உடைய திருமால், நான்கு முகங்களையும் பொற்றாமரை மாலை தாங்கிய மார்பினை உடைய பிரமன் முதலானோர்க்கும் முதல்வன் சிவபெருமானே, அவனின் அடிமுடி தேடிக் காண முடியாது இருவரும் நின்றனர் எனும் கருத்தை,

*"பூமேவும் உந்திப் புயல்வண்ணன் பொற்பதுமத்*
*தார் மேவும் மார்பன் சதுமுகத்தோன் - தாம் மேவிப்*
*பன்றியும் அன்னமுமாய்ப் பார்இடந்தும் வான்பறந்தும்*
*என்றும் அறியா இயல்பினான்"*[31]

என்று நெஞ்சுவிடு தூது கூறும்.

முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில் குமரகுருபரர்,

*"அமரர் குழுவும் அகில மறையும்*
*அரியும் அயனு முற்றுநின்*
*முடியும் அடியும் உணர அரிய*
*முதல்வ"* *(மு.கு.பி.த. முத்தம்.10)*

என முருகனைக் குறிப்பிடுகிறார்.

**நிமித்த காரணன்**

காரியப் பொருளுக்கு மூன்று காரணங்கள் இன்றியமையாதன. ஒரு குடம் வனையப்படுவதற்கு மண் முதற்காரணம் (Material Cause). அதனை வனைவதற்கு உதவியாக இருக்கிற சக்கரம் போன்றன துணைக்காரணம் (Instrumental Cause). குடத்தை வனைபவனே நிமித்த காரணன் (Efficient Cause).

உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களையும் தோற்றுவிப்பதற்கு உரிய முதற்காரணம் மாயை ஆகும். எனவே, அது மண் போன்றது. உலகத்தைப் படைப்பதற்குத் துணைக்காரணங்களாக இருப்பன வினையும், இறைவனது சத்தியும் சக்கரம் போன்றவை. சிவபெருமான் குயவனைப் போன்று நிமித்தகாரணன் ஆவான் எனச் சித்தியார் பின்வருமாறு கூறும்:

*"காரிய காரணங்கள் முதல் துணைநிமித்தம் கண்டாம் –*
*பாரின்மண் திரிகை பண்ணுமவன் முதல் துணை நிமித்தம்;*
*தேரின் மண்மாயை ஆக திரிகைதன் சத்தி ஆக*
*ஆரியன் குலாலனாய் நின்று ஆக்குவன் – அகிலம் எல்லாம்"*[32]

முதல்வனே உலகத்திற்கு நிமித்த காரணன் என்பதை,

*"கும்பாதி காரிய மெனத்தமை நிமித்தமாகக்*
*கொண்டவகி லாண்டங்களின்*
*குழுவுக்கு மற்றுத்த மிருவர்குறி யும்தலைக்*
*கூடினும் . . . ."* *(மு.கு.பி.த. செங்கீரை.2)*

*என்று குமரகுருபர அடிகள் சுட்டிக் காட்டுவர்.*

**இன்ப காரணன்**

பிறவியாகிய வெயிலில் அலைந்து வருந்தும் உயிர், இறைவன் திருவருளாகிய திருவடி நிழல் என்னும் குளிர்ந்த நிழலை அடைந்து இன்புறும். அப்போது, தற்போதம் அற்று வீடுபேறான முக்தி நிலையில் பேரின்பத்தை அநுபவிப்பதே அதன் பிறவிப் பயனாகும்.

இந்த முக்திப் பேரின்பத்தை அளிப்பதற்குக் காரணமானவன் முருகன்.

*"தனி முத்திக் கொரு வித்தே" (மு.கு.பி.த. தால். 6)*

*"எவ்வுயிரும் திளைத் தின்பமாரச் செயாய்"*
*(மு.கு.பி.த. அம்புலி. 4)*

*"பொழியாத புயல்தங்கு புவனமும் திசைமுகப்*
*புத்தேள் பெரும்புவனமும்*
*பொன்னுலகும் மண்ணுலகும் எவ்வுலகு வேண்டினும்*
*பொருளன்று இவற்கு மற்ற*
*அழியாத வீடும் தரக் கடவன்" (மு.கு.பி.த. அம்புலி.6)*

எனவரும் தொடர்களால் குமரகுருபரர், 'முருகனை இன்ப காரணன்' என்று கூறுகிறார்.

### இறை இயல்புகள்

ஒரு பொருளுக்குச் 'சிறப்பு இயல்பு' என்றும், 'பொது இயல்பு' என்றும் இரண்டு இயல்புகள் உண்டு. 'இயல்பு' என்றாலும் 'இலக்கணம்' என்றாலும் ஒன்றுதான்.

*"..... பொது உண்மை எனக் கருதியானும்*
*அருத்தி மிக உரைப்பன்"*[33]

எனக் கூறுவர் உமாபதி சிவாசாரியார்.

ஒரு பொருளுக்கு அதன் தன்மையில் இயல்பாக என்றும் உள்ள இயல்பு 'சிறப்பு இயல்பு' எனப்படும். (உ-ம்) தண்ணீர் தன்மையாகிய குளிர்ச்சி இதற்கு இயற்கையான குணமாகும். இத்தன்மை, பொருளை விட்டு நீங்குவதில்லை.

வேறொரு பொருளின் சார்பு காரணமாக ஒரு பொருளின்கண் உண்டாகி அச்சார்பு நீங்கிய போது, உடன் நீங்கும் இயல்பு 'பொது இயல்பு' எனப்படும். (உ-ம்) நெருப்பின் சேர்க்கையாலே நீர் சூடாக்கப்படுவது. இத்தன்மை நிலையானதன்று.

'சிறப்பு இயல்பை'ச் 'சொரூப இலக்கணம்' என்றும்; 'பொது இயல்பை'த் 'தடத்த இலக்கணம்' என்றும் சைவசித்தாந்தம் கூறும். (சொரூபம் – தன் இயல்பு; தடத்தம் – அயலிலுள்ள பொருட்கண் இருப்பது)[34]

### சிறப்பு இயல்பு (சொரூப லக்கணம்)

பிறிதொரு பொருளின் சார்பினால் மாறுபடாத தன்னையே தான் நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகளே[35] பதியின் 'சிறப்பு இயல்பு' என்னும் "சொரூபலக்கண"மாகும்.

பரம்பொருளாகிய இறைவன் அரு, அருவுரு, உரு போன்ற வடிவங்கள் இல்லாதவனாய், குணங்கள், அடையாளங்கள் அற்றவனாய் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனாய், என்றும் உள்ள பொருளாய், எண்ணற்ற உயிர்களின் அறிவுக்கு அறிவாய், அசைவற்றதாய், மற்ற பொருள்களினின்றும் துண்டிக்கப்படாததாய், இன்ப வடிவினனாய், அன்பினால் அன்றி எய்துவதற்கு

அரியவனாய், மெய்யுணர்வு உடையவர்க்கு எய்துவதற்குரிய வீடுபேறாய், சிறிய பொருளினும் சிறிய பொருளாய், பெரியதினும் பெரியதாய் விளங்குகின்றான். அதனையே, மேலான சிவம் என்று தெளிந்தவர் உரைப்பர்.[36]

*"குலமு நாமமுங் குறிகு ணங்களுங்*
*குறிக்கொ ணாவதி சூக்கமாய்ப்*
*புலர்தன் மாறுதல் வருத லேகுதல்*
*புதுமை தொன்மை யிலாததாய்*
*மலமி லாதந லமல மாயொளி*
*மயம தாம்வெளி மயமதாய்*
*இலகு மேசொன வினிய சிற்சுக*
*மென்று முள்ள குகேசனே"*[37]

எனும் பாம்பன் சுவாமிகள் பாடல், குகேசனுடைய சொரூப இலக்கணத்தைக் குறிக்கிறது. எதிலும் தோய்வின்றித் தானே சோதி மயமாயும் உயிர்களின் அறிவுக்கு அறிவான தூய அறிவாகியும் எங்கும் நிறைந்திருக்கின்ற பெருமானை எதனாலும், எவராலும் அறிய முடியாது என்பதை,

*"தன்மை பிறரா லறியாத்*
*தலைவா . . . . . ."*[38]
*" . . . . . சேர்ந்தறியாக்*
*கையானை யெங்கும் செறிந்தானை"*[39]

என்பதால் குறிப்பிடுவர் மாணிக்க வாசகர்.

இதனைக் குமர குருபரர்,

*"அறிவுளறிவை அறியும் எவரும் அறிய அரிய பிரமமே"*
*(மு.கு.பி.த. வருகை. 9)*

என முருகனின் சிறப்பியல்பை விளக்குவார்.

**சத்து, சித்து, ஆனந்தம்**

'பதி' ஏனையவற்றை விடப் பேராற்றல் வாய்ந்தது; சுதந்திரம் உடையது. எந்தப் பொருளினும் சார்பினாலும் மாறுபடாமல், என்றும் ஒரே பெற்றியதாய்

இருப்பது. இது பற்றியே பதியை வடமொழியில் ‘சித்’ என்றும், அருந்தமிழில் ‘மெய்ப்பொருள்’, ‘செம்பொருள்’ என்றும் வழங்குவர். ‘சத்’ என்பதை உள்ளது என்று மொழிபெயர்த்துப் பேசுவர் சித்தாந்திகள். ‘உள்ளது’ என்பது என்றும் ஒரு பெற்றியதாய் உள்ளது.[40]

சத் – என்றும் மாறாமல் உள்ள பொருள்.

சித் – தானே அறிகின்ற அறிவுப் பொருள்.

எனவே, சிவம் சித்தாயும், சத்தாயும் நிற்றலே பதியின் சிறப்பு இயல்பாகிய ‘சொரூப இலக்கணம்’ ஆகும்.

சத்தும் சித்தும் ஆகிய இவற்றோடு ஆனந்தத்தையும் கூட்டி இறைமைக் குணங்களை மூன்றாகக் கூறுதல் உபநிடதங்களிற் காணும் வழக்கு. அவற்றை எட்டாக விரித்துக் கூறல் சிவநெறி வழக்காகும்.[41]

இறை முதல் பொருளாம் ‘பதி’யின் எண்குணங்களாவன:

1) தன் வயத்தன் ஆதல்;

2) தூய உடம்பினன் ஆதல்;

3) இயற்கை உணர்வினன் ஆதல்;

4) முற்றும் உணர்தல்;

5) இயல்பாகவே பாசங்கள் இன்மை;

6) முடிவிலா ஆற்றல் உடைமை;

7) பேரருள் உடைமை;

8) வரம்பிலா இன்பம் உடைமை.

**(1) தன் வயத்தன் ஆதல்**

எவ்விடத்தும் தலைவனாய் இருப்பவனே, பிறரால் வழிபடத் தகுந்தவன். அப்போதுதான் அவன், தாம் விரும்பியவாறு செய்தல் கூடும். முதல்வனாகிய பதி, இத்தகைய தலைமைத் தன்மையுடையவன். இது வடமொழியில்

'சுதந்திரத்துவம்' எனப்படும்.[42]

குமரகுருபரர், பின்வரும் தொடர்களால் பதியின் தலைமைத் தன்மையைச் சுட்டுகிறார்:

*"ஆதிப் பிரானென்று மும்முதல் கடவுளும்*
*அடித்தொழும் பாற்ற"* *(மு.கு.பி.த. செங்கீரை. 5)*
*"ஒருவ னிருவ ரொடுகை தொழுநல் உபய சரணன்"*
*(மு.கு.பி.த. வருகை.10)*
*"நெடியவன் முதல்தேவர் குறுகி நிற்ப"*
*(மு.கு.பி.த. அம்புலி. 4)*

**(2) தூய உடம்பினன் ஆதல்**

இறைவன் தன்வயத்தால் செய்யும் செயல்கள் யாவற்றையும் உடம்பினின்றிச் செய்யக் கூடுமாயினும், பிறர் பொருட்டுச் சிலவற்றை உடம்போடு செய்ய வேண்டியவனாகின்றான். உடம்புடையவனாக நிற்பது இறைவனுக்குத் தடத்தலக்கணம் ஆயினும், அந்த உடம்பு, உயிர்களின் உடம்பு அவற்றின் வேறாதல் போல, அவனின் வேறாதலின்றி ஒன்றேயாகும் என்பது கருத்தாதலின், சொரூப இலக்கணமாயிற்று. இது வடமொழியில் 'விசுத்த தேகம்' எனப்படும்.[43]

இதனைக் குமரகுருபரர்,

*"அருளா னந்தக் கடல்பிறந்த*
*அமுதே"* *(மு.கு.பி.த. வருகை. 6)*
*"வடிவி னழகும் எழுத அரிய*
*புயமு நறிய செச்சையும்*
*மருமம் வரவு குரவு மரையின்*
*மணியும் மணிகொள் கச்சையும்*
*கடவு மயிலும் அயிலும் மொழுகு*
*கருணை வதன பற்பமும்*
*கமல விழியும் . . . . . ."* *(மு.கு.பி.த. முத்தம்.10)*

*"இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியன்"*

*(மு.கு.பி.த. வருகை.10)*

என வரும் தொடர்களால் இறைவனின் தூய திருமேனி பற்றிக் குறிப்பிடுவதை அறியலாம்.

**(3) இயற்கை உணர்வினன் ஆதல்**

தன் வயத்தனாயும், தூய உடம்பினனாயும் ஆகிய இறைவனது அறிவு இயற்கையாகவே விளங்கி நிற்றலோடு அனைத்துப் பொருள்களையும் ஒரு காலத்தில் அறிந்து நிற்கும். அனைத்தையும் தன் ஞான உருவில், தன் சங்கற்பத்தினாலே செய்பவன் இறைவன். எனவே, இயற்கை உணர்வினனாகச் செயல்படுகின்றான் என்பதாம். இது வடமொழியில் 'அநாதிபோதம்' எனப்படும்.

அன்புடையவர்க்கு இன்பத்தை உதவும் உண்மையான 'ஞான அறிவமுதமே' எனும் பொருளில்,

*". . . . . அன்பாளர்க்கு*
*இன்பம் அளிக்கும் மெய்ஞ்ஞான மருந்தே"*

*(மு.கு.பி.த. செங்கீரை.10)*

என்று குமரகுருபரர், பதியின் ஞான வடிவைக் கூறுகிறார்.

**(4) முற்றும் உணர்தல்**

இறைவன், அனைத்தையும் ஒரே நேரத்தில் தானாகவே ஒருங்குணர்ந்து நிற்றல். நூல்களாலும் உணரப்படா உணர்வுடையவன் என்பதாம். இது வடமொழியில் 'சர்வஞ்ஞுருத' எனப்படும்.

*"முழுமதிக்கடவுளென"* *(மு.கு.பி.த. அம்புலி.1)*

என்று குமரகுருபரர் சுட்டுவர்.

**(5) இயல்பாகவே பாசங்கள் இன்மை**

பிற பொருள் வயப்படாத தன்வயம் உடைமையால் பதி, பாசத்துள் அகப்படுமாறு இல்லை. ஆகவே, நீங்கக் கூடிய பாசத்தினின்றும் பதி தன்னியல்பிலே தான் நீங்கி நிற்பதாகிறது. இஃது இயற்கையாகவே

பாசத்துட்படும் உயிரியல்பினின்றும் வேறுபடுகின்ற பதியின் சிறப்பு இயல்பு. ஆதலின், இதனை இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் என வேறு ஒரு தன்மையாகச் சைவாகமங்கள் கூறும்.[44]

எனவே, பாசப்பற்றையே அடியோடு அறுக்கும் இறைவனிடத்துப் 'பாசம்' பொருந்துதல் யாண்டும் இல்லை. இது வடமொழியில் 'நிராமயம்' எனப்படும்.

*". . . தீராத வினை தீர்த்த*
*தம்பிரான் . . ."* *(மு.கு.பி.த. செங்கீரை.2)*

என உயிர்களின் பாசவினைகளைத் தீர்ப்பவன் இறைவன் என்று குமரகுருபரர் சுட்டுவார்.

**(6) முடிவிலா ஆற்றல் உடைமை**

பேராற்றல் உடையவனே பெருஞ்செயல்களைச் செய்ய வல்லான். பதியினது அறிவு, பேரறிவு. எனவே, அது எச்செயலையும் எக்காலத்தும் சலிப்பின்றிச் செய்யவல்ல பேராற்றலால் நிற்கும் என்பது விளங்கும்.[45] அதாவது இறைவன் ஆற்றல் அளவற்றது; எல்லையற்றது என்பதாம். இது வடமொழியில் 'அநந்தசக்தி' எனப்படும்.

*"அலகில் புவனம் முடியும் வெளியி லளியு மொளியி னிலயமே"*
*(மு.கு.பி.த. வருகை.9)*

எனப் பதியின் ஆற்றலைக் குமரகுருபரர் குறிக்கின்றார்.

**(7) பேரருள் உடைமை**

இறைவன் பேரருள் உடைமையால், எல்லா உயிர்களிடத்தும் எஞ்ஞான்றும் குறையாத கைம்மாறற்ற பெருங்கருணைத்திறம் அவன்பால் உண்டு என்பதாம். இது வடமொழியில் 'அலுப்தசத்தி' எனப்படும்.

இறைவனின் அருட்திறத்தைப் பின்வரும் தொடர்களால் குமரகுருபரர் புலப்படுத்துவார்:

*"புண்டரி கங்கள் மலர்ந்த விழிக்கடை*
*பொழியருள் கரை புரள"* *(மு.கு.பி.த செங்கீரை.7)*

*". . . பருவ*

*மழையி னு கைத்தலம்"* *(மு.கு.பி.த முத்தம்.9)*

*"கருவீற்றிருந்த பெருங்கருணை*

*கடைக்கண் பொழிய வீற்றிருக்கும்*

*கடவுள்"* *(மு.கு.பி.த. சிற்றில்.10)*

*"உருகுமுள நள் பெருகி உவட்டெழு சலநிதியே"*

*(மு.கு.பி. சிறுபறை. 10)*

இறைவன் பேரருள் உடையவனாதலால், 'அனைத்து உயிர்களிடத்தும் அன்பாய் இருக்க வேண்டும்' என்பதே இதன் கருத்தாகும்.

**(8) வரம்பிலா இன்பம் உடைமை**

உயிர்களிடத்தே தோன்றி அழியும் சிற்றின்பம் போலல்லாமல் நிறைந்த பேரின்பமே தன் தன்மையாம் உடைமை.[46] இறைவன் எவ்வாற்றானும் யாதொரு குறையும் இல்லாதவன். இது வடமொழியில் 'திருப்தி' எனப்படும். இதனை,

*"எங்களு ளத்தமு தூறுக ரும்பே" (மு.கு.பி.த. செங்கீரை. 10)*

எனும் குமரகுருபரர் வாக்கால் அறியலாம்.

இவற்றுள், 'இயல்பாகவே பாசங்கள் இன்மை' என்பது 'இயற்கை உணர்வினன் ஆதல்' என்பதில் அடங்கும். 'தூய உடம்பினன் ஆதல்' என்பது 'பேரருள் உடைமை' என்பதில் அடங்கும். ஆகவே, எண்குணங்கள் என்று கூறினும் ஆறாகவும் வைத்துக் காட்டுதல் மரபாகும்.

இறைவன் எண்குணங்களை உடையவன் ஆதலால் அவனே எல்லாப் பொருளினும் 'பெரும்பொருள்' ஆனான். இங்ஙனம், இறைவன் தன் சொரூபலக்கணமான 'சிறப்பு இயல்பில்',

*"வாக்காலும், மிக்க மனத்தாலும் எக்காலும்*

*தாக்காது உணர்வு அரிய தன்மையன்"*[47]

ஆக விளங்குவான் என்று கொடிக்கவி கூறும்.

**பொது இயல்பு (தடத்தலக்கணம்)**

பதி உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகள் தடத்த இலக்கணமாகும். உயிர்களும் 'உலகம்' என்பதனுள் அடங்கும்.[48] அப்போது இறைவன் மூவகைத் திருமேனிகளைக் கொள்ளுதலும் ஐந்தொழில் செய்தலுமாம்.

**ஐந்தொழில்கள்**

பொது இயல்பான தடத்த நிலையில் இறைவன் செய்யும் ஐந்தொழில்கள் "படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்" என்பன.

*"போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்*
*போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்*
*போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்*
*போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்*
*போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்*
*போற்றியாம் மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய்"*[49]

என்னும் மாணிக்கவாசகரின் திருவெம்பாவைப் பாடலில் இறைவனின் ஐந்தொழில்களும் சுட்டப்பட்டுள்ளன. 'தோற்றமாம்' என்பது 'படைத்தல்'; 'போகமாம்' என்பது 'காத்தல்'; 'ஈறாம்' என்பது 'அழித்தல்'; 'காணாத' என்பது 'மறைத்தல்'; 'அருளும்' என்பது 'அருளல்'.

இறைவனுக்குரிய ஐந்தொழில்களில் 'அருளல்' நீங்கலாக ஏனைய நான்கும் உருவத் திருமேனி கொண்டே இயற்றுகின்றான். இவ்வுருவ நிலையில் இறைவன் தன் சத்தியோடு இணைந்திருந்தே செயல்படுவான்.

**படைத்தல்**

உயிர்கள் ஒரு காலத்தில் தோற்றுவிக்கப்பட்டவை அல்ல. படைத்தல் என்பது உயிர்களைப் படைத்தல் அல்ல. நிலையான உயிர்களுக்கு அவற்றின் அறிவு வளர்ச்சிக்கு வேண்டிய உடம்பு, கருவிகள், உலகு, நுகர்பொருள்கள் ஆகியவற்றை 'மாயை' எனும் மூலப்பொருளில் இருந்து இறைவன் உண்டாக்கித் தருகிறான். சடமாகிய உடம்பு முதலியவற்றை உண்டாக்கி, சித்தாகிய உயிரொடு பொருத்துதலே 'படைத்தல்' எனப்படும்.

*"பெரும்புவனம்*
*நிறுவுமொரு நின் பெருந்தன்மை"* *(மு.கு.பி.த. முத்தம்.2)*
*"உலகனைத்தினையும்*
*ஒக்கப் படைத்தானை"* *(மு.கு.பி.த. காப்பு. 11)*
*"கடவுள் நீயே பகிரண்டம்*
*கண்டாய்"* *(மு.கு.பி.த. சிற்றல். 10)*

எனவரும் தொடர்களால் "படைத்தலை"க் கூறுவர் குமரகுருபர அடிகள்.

**காத்தல்**

இறைவன், உயிர்கள் தத்தம் வினைப்பயன்களை நுகர்தல் வேண்டி, அவற்றிற்குக் கொடுக்கப்பட்ட உடம்பு முதலியவற்றை, குறித்த கால அளவுவரை நிற்கும்படி செய்கிறான். இதுவே 'காத்தல்' ஆகும். 'காத்தல்' தொழிலை 'நிலைநிறுத்துதல்' என்பர். இது குறித்து அருள்நந்தி சிவாச்சாரியார்,

*"ஞாலம் ஏழினையும் தந்து நிறுத்திப்பின் நாசம் பண்ணும்*
*காலமே போலக் கொள்நீ நிலைசெயல் கடவுட் கண்ணே"*[50]

எனக்கூறுகிறார்.

"உலகம் ஏழினையும் தோற்றுவித்து, நிலைநிறுத்திப் பின்னர் அழித்திடுவதே காலம் என்பதாகும். அக்காலத்துக்கு எதுவும் பற்றுக்கோடு இல்லை. ஆனால் காலம் எல்லாச் செயல்களுக்கும் பற்றுக்கோடு ஆகும்" என்பது இதன் பொருளாகும்.

இறைவன் இவ்வுலகத்தைச் செயற்படுத்தும்போது தான் யாவற்றுக்கும் பற்றுக்கோடாகவும் தனக்கு ஒரு பற்றுக்கோடு இல்லாதவனாகவும் நின்று தன் சக்தியினால் யாவற்றையும் செய்வான்.[51] அஃதாவது, உயிர்கள் அவ்வவற்றின் வினைக்கேற்பவே காலத்தால் கட்டுப்பட்டு நிலைநிறுத்தப் பெறுகின்றன. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில்,

*"இவன் எவ்வுயிரும் வாழச் செய்தான்"*
*(மு.கு.பி.த. அம்புலி. 3)*

*“மும்முதல் கடவுளும் இளைப்பாற*
*உலகெலாம் தலையளித்துப்*
*போற்றும் திறத்தினன்”* *(மு.கு.பி.த. சிறுபறை.1)*

எனும் வரும் தொடர்கள் ‘காத்தல்’ பற்றியன.

**அழித்தல்**

வினைப்பயன்களாகிய இன்பதுன்பங்களை மீண்டும் மீண்டும் நுகர்ந்த உயிர்கள் கொள்ளும் இளைப்பினை நீக்குதற்பொருட்டு இறைவன், உடம்பு முதலியற்றை உயிர்களிடமிருந்து வாங்கி மாயையில் அவற்றை ஒடுங்கும்படி செய்கின்றான். இதுவே, ‘அழித்தல்’ எனப்படும். முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில்,

*“பகிரண்ட மணல் சிற்றிலையோர் கணத்தின்கண் மட்டித்தாடும்”*
*(மு.கு.பி.த. சிற்றில். 8)*

எனவரும் தொடரில், ‘அழித்தல்’ சொல்லப்பட்டது.

**மறைத்தல்**

ஐம்பொறி முதலிய மாயா கருவிகளால் உயிருக்குச் சிற்றறிவாகிய புலன் உணர்வை விளைவிக்கின்றான் இறைவன். இப் புலன் உணர்வு, உயிரை உலகப்பொருள்களோடு பிணித்து, அப்பொருள்களையே மேலும் மேலும் பெற்றுத் துய்க்கும்படியான நாட்டத்தைச் செய்கிறது. அது, அருளையும், இறைவனையும் உணரவொட்டாது செய்கிறது. இதனால், உயிர்கள் இறைவனை நோக்காது உலகையே நோக்கி நிற்கும். எனவே, இஃது ஒருவகையில் ‘மறைத்தல்’ எனப்படும்.

இம் மறைத்தல் தொழில்மூலம் இறைவன் உயிர்களிடத்திலிருந்து தன்னை மறைக்கின்றான். இதனையும் அவன் தான் செய்வதில்லை. பாசத்தின் வழியே செய்கின்றான். ஆணவம் அறியாமையே வடிவாய் இருப்பதால் ஆணவத்தின் சக்தியைத் தூண்டிவிடுபவனும் இறைவனே ஆவான். எனவேதான், மறைத்தல் இறைவனுடைய செயலாகச் சொல்லப்படுகிறது.

“ஆணவத்தின் சக்தி மெலிவடைய மெலிவடைய, உயிர்களின் அறிவு, மறைப்பு நீங்கி விளக்கம் பெற்று, இறைவனை அறிதற்கு உரியதாகும். ஆகவே, அந்நன்மை கருதியே மறைத்தல் தொழிலை இறைவன் செய்கின்றான். அதனால் அதுவும் உயிர்களின் நன்மையின் பொருட்டே ஆகிறது” [52]

முதல்வனது சக்தி மறைப்பாற்றலால் நின்று, உயிர்களது அறிவை ஒருகாலைக் ஒருகால் ஆக்கமாகிய முறையில் வேறுபடுத்தி வளர்த்துவரும் என்பது தெளிவாகும்.[53]

**அருளல்**

உயிரைப் பிறப்பு இறப்புகளில் செலுத்தி உழலச் செய்வதாகிய மறைத்தல் தொழிலின் பயனாய் அதனைப் பிணித்திருக்கும் ஆணவமலத்தின் சக்தி மெலிந்து பிணிக்கும் வலிமையிழந்து நிற்கும். அத்தகைய உயிரை ஆட்கொண்டு திருவடியாகிய பேரின்பத்தை அளித்தலே ‘அருளல்’ எனப்படும். ‘வீடு’ என்பதும் இதுவேயாகும்.[54]

‘மறைத்தற்’ பொருட்டு அறிவையும், ‘அருளுதற்’ பொருட்டு முத்தியும் முருகன் தருவதை,

*“புத்தியும் முத்தியும் அளித்தான்” (மு.கு.பி.த. அம்புலி.3)*

எனக் குமரகுருபரர் அருளிச்செய்வர். ஆன்மா, முற்பிறப்புகளில் செய்துவந்த சிவவழிபாடாகிய தவத்தின் பயனாய், இதுவரை உயிர்க்குயிராய் மறைந்து நின்று, அறிவைத் தந்த முதல்வன், பின்பு நேரே எழுந்தருளி வந்து வீடுபேற்றைத் தந்து அருள்புரிவான்.

வீடுபேறு என்பது உயிரானது சிவானந்த ஞான வடிவாகிய சிவபிரான் திருவடியை அணைந்து எல்லையற்ற இன்பத்தில் திளைத்திருத்தலேயாகும். இதுவே, சித்தாந்தத்தின் முக்தியிலக்கணமாகும்.

இதனை,

*“சிவன் அடியைச்சேரும் முத்தி செப்புவது இங்கு யாமே”*[55]

என அருள்நந்தி சிவாசாரியார் உரைப்பார்.

இப்பெரும்பேறாகிய திருவடிப்பேறு குமரகுருபர அடிகளுக்குக் கிடைத்தது.

*"திருவடித் துணையென் முடிபதித்தவடு*
*ஆறாத மெய்ப் புகழாளியை"* *(மு.கு.பி.த. காப்பு. 3)*
*"பவக்கடல் உழக்கும் எனை முத்தித்*
*தடங்கரை விடுப்பவன்"* *(மு.கு.பி.த. அம்புலி.9)*

எனத்தமக்கு முருகன் திருவடிப்பேறும், முக்திப்பேரின்பமும் நல்கியதைக் குமரகுருபரர் விதந்து ஓதுகிறார்.

இத்தகைய பெருநிலை வாய்க்கப்பெற்ற குமரகுருபர அடிகள், தன் தலையில் முருகன் திருவடிகளை வைத்தமையால் அவன் திருவடிகளில் ஆறாதவடு ஏற்பட்டதாகக் கூறுவது அவர்தம் அருட் சிறப்பைப் புலப்படுத்துகிறது.

இதுவரை சொல்லப்பட்ட இறைவன் ஐந்தொழில்களும் தூல ஐந்தொழில் என்பதாம். இதுதவிர சூக்கும ஐந்தொழில் அதி சூக்கும ஐந்தொழில் என இரண்டு உண்டு.

**சூக்கும ஐந்தொழில்**

உலகம் முழுவதையும் அழித்துப் பின்னர், மீளவும் தோற்றுவிக்கும் செயற்பாடு 'சூக்கும ஐந்தொழில்' ஆகும். 'நள்ளிரவில் நட்டம் பயின்றாடும் நாதனே' எனும் திருவாசக அடியில் சூக்கும ஐந்தொழில் சொல்லப்பட்டுள்ளது. 'நள்ளிருள்' என்பது முற்றழிப்புக் காலத்தைக் குறிக்கும். இங்கு நடனம் என்றது சூக்கும ஐந்தொழிலேயாகும்.[56]

**அதி சூக்கும ஐந்தொழில்**

உயிரானது புருவநடுவில் நின்று, கருவிகளோடு கூடிப் பொருள்களை அறிந்து வருவதாகிய விழிப்பு நிலையிலேயே ஐந்தவத்தைகளை அடையும். அந்நிலையில் உயிருக்கு அறிவை நிகழ்விக்கும் இறைவனது செயல் அதிசூக்கும ஐந்தொழில் எனப்படும். இது உயிர்க்கு உலக அறிவைத்தரும். இவ்வதிசூக்கும ஐந்தொழில் 'பரநடனம்' எனப்படும்.[57]

புருவ நடுவில் நிகழ்வதாகிய இந்நடனம் இல்லையேல் உயிர்களுக்கு அறிவு இல்லை; செயல் இல்லை. இறைவன், உயிர்க்குயிராய் உள்நின்று உணர்த்தும் முறைமையே 'அதிசூக்கும ஐந்தொழில்' எனப்படும்.

ஆடல் வல்லானின் திருநடனம் தூல, சூக்கும, அதிசூக்கும ஆகிய இம்மூன்று ஐந்தொழில்களை உணர்த்துவதாக உள்ளது.

துடியேந்திய கை படைத்தலையும், அபயகரம் காத்தலையும், நெருப்பேந்திய கரம் அழித்தலையும், முயலகன் மேல் ஊன்றிய கால் மறைத்தலையும், தூக்கிய திருவடி அருளையும் உணர்த்தும். உண்மை விளக்கத்தில், மனவாசகங் கடந்தார்,

*"தோற்றம் துடிஅதனில் தோயும் திதிஅமைப்பில்*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் – ஊற்றமா*
*ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோதம் முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு"*[58]

என ஆடவல்லானின் நடனத்தைக் குறிப்பிடுவார்.

குமரகுருபரர்,

*"சூக்கும வெளியினில் பரமநட நவிற்றும்"*
*(மு.கு.பி.த. காப்பு.3)*

என இறைவன் நடனத்தைச் சொல்லிடுவார்.

மேலும்,

*"பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்*
*நாமநீர் வரைப்பின் நானில வளாகமும்*
*ஏனைப் புவனமும் எண் நீங்கு உயிரும்*
*தானே வகுத்ததுஉன் தமருகக் கரமே. . ."*[59]

எனவரும் சிதம்பர மும்மணிக் கோவையில் இந்நடனம் பற்றிக் குமரகுருபரர் விரிவாகக் கூறுவது இவண் ஒப்புநோக்கத்தக்கது.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களை முத்தொழில்களாக அடக்கிக் காட்டுவதும் உண்டு.

மறைத்தல்' தொழில், 'காத்தல்' தொழிலில் அடங்கும். 'அருளல்' தொழில், அழித்தல்' தொழிலில் அடங்கும். எனவே, படைத்தல், காத்தல், அழித்தல் என மூன்றாகத் திருவருட்பயன் பின்வருமாறு கூறும்

*"ஆக்கி எவையும் அளித்து ஆசுடன் அடங்கப்*
*போக்கும்அவன் போகாப்புகல்"*[60]

இதில் 'ஆக்கி' என்பது படைத்தலையும், 'அளித்து' என்பது 'காத்தலையும்', 'போக்கும்' என்பது அழித்தலையும் குறிக்கும்.

**மூவகைத் திருமேனிகள்**

தனது சிறப்பு இயல்பாகிய சொரூப நிலையில் தனக்கென ஓர் உருவும், பெயரும், தொழிலும் இல்லாத இறைவன், உலகை நோக்கித் தடத்த நிலையில் உயிர்களின் பொருட்டுப் பலப்பல உருவும் பெயரும் தொழிலும் உடையவனாகின்றான்.

இறைவன்தான் நினைத்த வடிவை நினைத்தபோதே கொள்ளும் ஆற்றல் உடையவன். உயிர்கள் தன்னை அறிந்து கண்டும், கருதியும் வாழ்த்தியும், வணங்கியும் உய்தற்பொருட்டே உருவம் கொள்கின்றான்.

இதனை,

*". . . . . அப்பொருள்*
*சகளமாய் வந்தது என்று உந்தீபற*
*தானாகத் தந்தது என்று உந்தீபற"*[61]

எனத் திருவுந்தியார் கூறும்.

இவ்வாறு உயிர்களின் பொருட்டுக் கொள்கின்ற திருமேனிகள் 'அருவம், அருவுருவம், உருவம்' என மூன்று சொல்லப்படும் மாயையினால் ஆகிய உயிர்களுடைய கருமேனியைக் கழிக்க வந்த கருணையின் வடிவமே இறைவனின் திருமேனியாகும்.

*". . . . . செப்பியமூன்றும் நந்தம்*
*கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே"*[62]

என்று சித்தியார் விளக்கும்.

இம்மூவகைத் திருமேனிகளை,

*"அருவான் உருவான் அருவுருவு மில்லான்"*[63]

என்று நெஞ்சுவிடுதூதும்,

*"அருவுமாகுவன் உருவமும் ஆகுவன் அருவும்*
*உருவும் இல்லதோர் தன்மையும் ஆகுவன்"*[64]

என்று கந்த புராணமும் கூறுவதைக் குமரகுருபர அடிகள்,

*"அருவென்ன உருவென்ன அன்றென்ன நின்றவன்"*
*(மு.கு.பி.த. அம்புலி.5)*

என்று அருளிச் செய்வர்.

'அருவம்' என்பது கண்ணுக்குப் புலப்படாதது. நுண்ணிய மொழி வடிவாய் இறைவன் நிற்பான். 'ஓம்' எனும் மூலமந்திரம் அருவ நிலையில் உள்ளது. இது 'அதி சூக்குமம்' என்றும் சொல்லப்படும்.

*"பழமறையை*
*வடித்துத் தெளித்த வார்த்தையொன்று"*
*(மு.கு.பி.த. முத்தம்.3)*

எனவரும் தொடர், 'ஓம்' எனும் சமட்டிப் பிரணவத்தைக் குறித்துச் சொல்லப்பட்டது.

'அருவுருவம்' என்பது 'அருவம்', 'உருவம்' என்ற இரண்டிற்கும் இடைப்பட்டது. இவ் அருவுருவ வடிவில் அனற்பிழம்பு வடிவினனாகக் காட்சியளிப்பான். திருக்கோயில் கருவறைகளில் எழுந்தருளியிருக்கும் இலிங்கத் திருமேனி அருவுருவ வடிவமாகும். இது 'சூக்குமம்' என்றும் சொல்லப்படும்.

*"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்*
*சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி"*[65]

எனும் திருப்பாசுரத்தில் 'சுடர்விட்டுளன் எங்கள் சோதி' எனும் தொடரை விளக்க வந்த ச. கங்காதரன்,

"சோதி என்பது முதற்பொருளினது எங்கும் நிறைந்த உண்மை அறிவு இன்ப நிலையைக் குறிப்பது. 'சுடர்' என்பது அவன் குறிப்பிட்ட இடத்தில் அணுக்கமாய்த் தன்னியல்பைக் காட்டி நிற்கும் நிலை. இவற்றில் 'சுடர்' எனப்பட்ட அணுக்க நிலையே சிவலிங்கம் எனப்படுவது"[66]

என்பர். இறைவனின் 'அருவுருவ'த் திருமேனியை,

*"அழலவிர் சோதி"* *(மு.கு.பி.த. சிறுபறை.6)*

எனக் குமரகுருபர அடிகள் குறிப்பிடுவர்.

'உருவம்' என்பது கண்ணுக்குப் புலப்படக் கூடியது; கை, கால் முகம் முதலிய உறுப்புகளுடன் விளங்குவது. ஆயினும் இவ்வுருவம் பக்குவமில்லாத நம்மவர் கண்ணிற்குப் புலப்படாது; தவத்தோர் கண்ணிற்கே புலப்படுவதாகும். அடியார் பலர்க்கும் பல சமயங்களில் தோன்றி அருள்புரிந்த திருமேனிகள் எல்லாம் உருவத் திருமேனிகளே.[67] உமாமகேசுவரர், இடபாரூடர் எல்லாம் உருவத் திருமேனிகளே. இது 'தூலம்' என்று சொல்லப்படும்.

*"சோதி மணிமிடற்றுச் சுந்தரமும் – பாதியாம்*
*பச்சையிடமும் பவளத் திருச்சடைமேல்*
*வைச்ச நதியும் மதிக்கொழுந்தும் – அச்சம் அற*
*ஆடும் அரவும் அடிகளார் திருநுதல் மேல் . . . . . ."*[68]

எனவரும் போற்றிப் பஃறொடைப் பாடலில், உமாபதி சிவாசாரியார், தம் ஆசிரியரை இறைவனாகப் போற்றுமிடத்தில், இறைவனின் உருவ வருனணையைக் குறிப்பிடுகின்றார்.

*'அற்பொதி களத்தவன்' (மு.கு.பி.த. அம்புலி.2)*

என்று இறைவனின் உருவ வடிவைக் குமரகுருபரர் கூறுகிறார்.

உருவத் திருமேனியை வேகவடிவம், யோகவடிவம், போக வடிவம் என மூன்றாகப் பிரித்துச் சைவசித்தாந்தம் கூறும்.

இவற்றுள், வேக வடிவம் என்பது அட்ட வீரட்ட மூர்த்தங்களும், உக்கிர மூர்த்தங்களும் ஆகும்.[69]

*"களிறொடு களிறெதிர் மோதத் திசைத்திசை*
*கடுநடை யுளதக ரேறுஞ் சமர்த்தனை"*

*(மு.கு.பி.த. காப்பு. 10)*

*" . . . மாதிரம் ஓர் எட்டையும்*
*இறைப்பொழுதினில் பொடிபடுத்தருள் கொடுக்கவல*
*சத்திக் கரத்தானை"* *(மு.கு.பி.த. காப்பு.11)*

என்பதால், "முருகனின் வேகவடிவத்தை"க் குமாரகுருபர அடிகள் சொல்லிடுவர்.

யோகவடிவம் என்பது தட்சிணாமூர்த்தங்கள், வியாக்யான, ஞான, யோக, வீணாதார என்ற சிறப்புகளுடன் கூடிய யோக மூர்த்தங்களாகும்.[70]

முருகப்பெருமானை 'மௌனதேசிகன்' என்றும், தன் தந்தையான சிவபெருமானுக்கு உபதேசம் செய்தவன் என்றும், முருகனின் 'யோக வடிவ நிலை'யினைப் பின்வரும் தொடர்களால் குமரகுருபரர் புலப்படுத்துவர்:

*"ஓதாது உணர்த்திடு போதா"* *(மு.கு.பி.த. தால். 10)*
*"முக்கண் திருத்தாதை யார்பணி குருக்களை"*

*(மு.கு.பி.த. காப்பு.11)*

போக வடிவம் என்பது அம்மையும் அப்பனுமாய்க் கோலங் கொள்ளுதலாகும். சோமா கந்த மூர்த்தம், உமாசம்கிதமூர்த்தம், சுகாசன மூர்த்தம், உமாமகேசுவா மூர்த்தம் ஆகிய சிவமூர்த்தங்கள் போக வடிவமாகும்.[71]

*". . . . புனத்தின்கண் மிக நுடங்கும்*
*சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன்"*

*(மு.கு.பி.த. சிறுதேர். 6)*

*"தெய்வப் பிடிக்குக் கிடைத்ததொரு மழகளிறு"*

*(மு.கு.பி.த. சிறுதேர். 5)*

என முருகனின் போக வடிவத்தைக் குமரகுருபரர் இயம்புகின்றார்.

இறைவன் திருமேனி கொள்ளும்போது, போகவடிவம் மேற்கொண்டு உயிர்களுக்கு இன்ப வாழ்க்கையை அருளுவான். யோக வடிவத்தில்

அறியாமையாகிய ஆணவத்தை நீக்கி வீடுபேற்றை அருளுவான். வேக வடிவம் தாங்கி மறத்தைத அழித்து அறத்தை நிலைநிறுத்துவான்.[72]

**அருளே வடிவம்**

சிவபெருமானின் திருமேனி அருளாகும். மாயா காரியமாகிய உடம்பிற்கு உள்ள குற்றங்கள் அவனது திருமேனிக்கு இல்லை.

சிவனின் ஐந்தொழில்களும், எண் குணங்களும் அருளாகும். அவன் திருவுருவில் காட்சி தருகின்ற தீக்கை, திருவடி முதலிய உறுப்புக்களும், அத்திருவுருவம் ஏந்தியுள்ள மான், மழு, மூவிலைச்சூலம் ஆகியனவும் அருளே வடிவானவை ஆகும். அவன் உடுத்தியுள்ள ஆடையும் புனைந்துள்ள மாலையும் போன்றனவும் அருளின் வடிவே ஆகும்.[73] மேலும், அவனது திருமேனி பேரொளிப் பிழம்பாகும்.[74]

இத்தகைய வடிவம் பற்றிச் சிந்திக்கப்படுவன் ஆயினும் அவன் சிந்தனைக்கு எட்டாதவன் ஆவான்.

இறைவன் வடிவம் கொண்டு நின்றபோது, மனம், மொழி, மெய்களால் எண்ணவும், வணங்கவும் உரியன் எனினும் அவன் வடிவம் உலகினைக் கடந்தது (விசுவாதிகன்), உலகம் அவன் திருவுருவில் தோன்றி ஒடுங்கும் (விசுவகாரணன்), உலகத்துக்கு உள்ளே நிறைந்தவன் (விசுவஅந்தர்யாமி), உலக வடிவாகவும் (விசுவரூபி) நிற்பன் என்று வேதங்கள் கூறுகின்றன.

**உலகினைக் கடந்தவன் (விசுவாதிகன்)**

உலகினைக் கடந்து நின்றவன். திருமாலும் பிரமனும் அடிமுடி காணமுடியாதபடி இறைவன் உலகினைக் கடந்து நின்றது. இக்காட்சியைக் குமரகுருபரர்,

*"கருமுகி லுக்கரிதாம் அடி வாரம்*
*. . . . . . . . . . . . . .*
*. . . . . . . ஓர் பறவை முடித்தலை*
*காணாதுட்குவர"* (மு.கு.பி.த. தால்.7)

எனவரும் தொடரால் குறிப்பிடுவர்.

இதனை,

*"உலகினை இறந்து நின்றது அரன்உரு"*[75]

எனச் சித்தியாரும் கூறும்.

**உலகத்துக்கு உயிராய் விளங்குபவன் (விசுவ அந்தர்யாமி)**

உலகத்து உயிர்க்கு, உயிராக விளங்குபவன். அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதற்கேற்ப அனைத்தையும் உள்நின்று இயக்குபவன். இதனை,

*"உலகினுக்கு உயிரும் ஆகி"*[76]

என்று அருணந்தி சிவாசாரியார் சுட்டுவதை,

குமரகுருபர அடிகளும்,

*"ஒழியாத புவனத் துயிர்க்குயி ரதாய் நிற்பது*
*ஒரு தெய்வ முண்டென"க் (மு.கு.பி.த. அம்புலி.6)*

குறித்தார்.

**உலகமாக நிற்பவன் (விசுவரூபி)**

உலகைத் தன்வடிவாகக் கொண்டவன். உலகப் பொருட்களில் நிறைந்து நிற்றலால் அவனை "விசுவரூபி" என்பர். இவ்வடிவத்தை "உலகுமாய் நின்றது"[77] எனச் சித்தியார் காட்டும்.

*"கதிரு மதியும் மொளிர வொளிரும்*
*ஒளிய" (மு.கு.பி.த. முத்தம்.9)*

எனவரும் தொடரில், "கதிரவனும், சந்திரனும் ஒளி செய்ய விளங்கும் ஒளியையுடையவனே" எனும் பொருளில் குமரகுருபரர் எடுத்துரைப்பர். விசுவரூபியான சிவனின் இரு கண்களையும் இறைவி தனது இரு கரங்களால் மூடிய போது, உலகு எங்கும் இருள் பரந்து மூடியது. இவ்வரலாற்றை,

*"நாயகன் கண்நயப்பால் நாயகி புதைப்ப, எங்கும்*
*பாய் இருள் ஆகி மூட"*[78]

என சித்தியாரில், அருள் நந்தி சிவாசாரியார் கூறுவர்.

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில்,

"தன் சின்னஞ்சிறு கைகொண்டு முருகப்பெருமான் உமையின் கண்களை மூட இயலவில்லை. ஆனால் சிவபெருமானின் திருவிழிகளை மூடவும் இருள் எங்கும் மூடியது" எனும் கருத்தில்,

*"அங்கைத் தலத்தம்மை செங்கண் புதைத்தற்கு*
*அடங்காமையால் எம்பிரான்*
*அலர்விழிகள் பொத்தலும் இருட்படல மூட"*

*(மு.கு.பி.த. வருகை.5)*

என்று குமரகுருபர அடிகள் இயம்புகிறார்.

**சிவமும் சத்தியும்**

தன்னையே நோக்கி நிற்கும் 'பரசிவம்' சொரூபலக்கணமான சிறப்பு இயல்பினின்றும் நீங்கி, உலகத்தை நோக்குங்கால் தனது பெருங்கருணை காரணமாக, உயிர்களின் பொருட்டுத் தானே தன் விருப்பத்தால் தன் ஆற்றலைக் (சத்தியைக்)கொண்டு, பல்வேறு நிலைகளைக் கொள்ளும். இந்நிலைகளே, 'பதி'யின் 'தடத்தநிலைகள்' (பொது இயல்பு) எனப்படும். எனவே, சொரூபநிலையில் பதி 'சிவம்' என்றும், தடத்தநிலையில் 'சத்தி' என்றும் சொல்லப்படும்.[79]

உயிர்களைப் பிணித்துள்ள பாசக்கட்டினை நீக்கிப் பேரின்பத்தை வழங்க வேண்டும் என்ற இரக்கம் இறைவனுக்கு என்றும் உள்ளது. அவ் இரக்கமே 'சத்தி' எனப்படும்.

*"அருளது சத்தி ஆகும், அரன் தனக்கு; அருளை இன்றித்*
*தெருள் சிவம் இல்லை; அந்தச் சிவம் இன்றி சத்தி இல்லை;"*

எனும் சித்தியார் வாக்குப்படி, அருளாகிய சத்தியும் அவனின்றி தனித்தில்லை. அவனும் அச்சத்தியினின்று தனித்து நிற்றல் இல்லை. சூரியன் தன் ஒளியோடு வேற்றுமையின்றி இயைந்து நிற்றல் போல, இறைவனும் தன் அருளோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பான். ஞானக் கண்ணைப் பெற்றவர்க்கு இது விளங்கும்.[80]

சூரியன்–குணி; ஒளி – குணம் என்பது போல, இறைவன் – குணி; சத்தி (திருவருள்) – குணம்.

*"முதல்வன் தனது சத்தியினின்றும் நீக்கமின்றி நிற்பன்"*[81]

என்பது சிவஞானபோதம்.

முதல்வனாகிய இறைவனும் அவனது சத்தியும் பொருளால் ஒன்றேயாம்; செயற்பாட்டில் இருதிறப்பட்டு நிற்கும். தடத்த நிலையில் சிவமும் சத்தியும் உடனியைந்து செயல்களை இயற்றி நிற்றலால் சிவமும் சத்தியும் – அம்மையப்பனாய் – உமைபாகனாய்த் தோற்றம் அளிக்கும். இவ்வாறு விளங்கும் இத்திருக்கோலத்தை 'ஒன்றில் இரண்டு' என்று குறிப்பர் அறிஞர்.[82]

**அம்மையப்பர்**

அம்மையைத் தனியே இடப்பாகத்தில் கொண்ட வடிவம் அம்மையப்பர் வடிவம் எனப்படும். இவ்வடிவப் பொலிவினைத் திருவிடை மருதூர் மும்மணிக் கோவை விரிவாக விளக்கும்.

*". . . . செஞ்சுடரின்*
*இடமருங்குடைய தையலைப் போற்றுதும்"*
*(மு.கு.பி.த. காப்பு. 4)*

எனவரும் தொடரில் இத்திருவேடத்தைக் குமரகுருபர அடிகள் குறித்தார். 'உமையொரு பாகராகிய சிவபெருமானே இவ்வுலகிற்குத் தாயும் தந்தையும் ஆவார்' எனும் கருத்தில்

*"அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்"*[83]

என்று திருக்களிற்றுப்படியார் கூறுவதை,

*"பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும்*
*பெருமானார்க்கும் உலகேழும்*
*பெற்ற தாய்க்கு நீயருமைப்*
*பிள்ளை"* *(மு.கு.பி.த. சிற்றில். 7)*

என்று குமரகுருபர அடிகள் எடுத்தோதுகிறார்.

**அர்த்த நாரீசுவரர்**

அம்மையைத் தனியே இடப்பக்கத்தில் கொள்ளாமல் தன் உடம்பில் ஒரு பாதியாகக் கொண்ட இறைவனின் வடிவம்

அர்த்தநாரீசுவரர் வடிவம் ஆகும்.

*". . . . முதல் உருப்பாதி மாதர்*
*ஆவதும் உணரார். . ."*[84]

என்பது சித்தியார்.

அர்த்த நாரீசுவரர் என்பதற்குப் 'பாதிமாதுடைய பரமன்' என்று பொருளாகும். அர்த்தம் – பாதி; நாரி – மாது (பெண்மணி).

"சிவபெருமானின் திருமேனியில் சரிபாதியைப் பகிர்ந்து கொண்ட தையல்நாயகி" என்று

*"தம்பிரான் றிருமேனியில்*
*செம்பாதியும் கொண்ட தையல் நாயகி"*
*(மு.கு.பி.த. செங்கீரை.2)*

எனவரும் தொடரால் விளக்குவர் குமரகுருபர அடிகள்.

இறைவனின் இத்திருக்கோலத்தை,

*"தொன்மைக் கோலம்"*[85]

எனத் திருவாசகம் கூறும்.

இதனை,

*"இரண்டுருவாய் ஈரணி பெற்ற எழில்"*[86]

எனப் பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்தும் கூறுகிறது.

**அர்த்தநாரீசுவரர் - வெம்மையும் தண்மையும்**

*". . . . . தம்பிரான்*
*தழலுருவி லொருபாதி குளிரவொரு புறநின்ற*
*தையனா யகியும் வைத்து"* *(மு.கு.பி.த. சிறுதேர். 10)*

எனக் குமரகுருபரர் கூறும் மாதொரு பாகன் வடிவத்தை விளக்க வந்த குமாரசாமித் தம்பிரான்,

"அம்மை, தண்மைப் பண்புடன் உயிர்களுக்குக் கருணைமழை பொழிந்து குளிர்விக்கிறாள். பரம்பொருள் வெம்மைப் பண்போடு உயிர்களை

உடலிலிருந்து பிரித்துப் புதுப்பிக்கிறான். இங்ஙனம் அம்மையப்பர் வெப்பமும் தட்பமும் ஆகி உயிர்கட்கு அருள்பாலிக்கின்றனர்"[87]

என்று கூறுகிறார்.

**அர்த்த நாரீசுவரர் - நிறம்**

உமையொரு பாகம் கொண்ட அம்மையப்பர் திருவடிவத்தில், இடப்பாகத்தில் உள்ள அம்மையின் நிறம் மரகதப் பச்சைநிறமாகக் காட்சியளிக்கிறதாம்.

இக்கருத்தை,

*"பாதியாம் பச்சையிடம்"*[88]

என்று "போற்றிப் பஃறொடையும்",

*"பாதித் திருவுரு பச்சென் றவர்க்கு"*[89]

என்று 'கந்தர் அலங்காரமும்' கூறுகின்றன.

இதனைக் குமரகுருபரர்,

*"ஒரு புறத்து மர கதமிமைப்ப வொளிர்*
*மாமேரு"* *(மு.கு.பி.த. காப்பு. 3)*

என்றருளிச் செய்வார்.

திருமூலரும்,

*"மாணிக்கத்துள்ளே மரகதச்சோதியாய்*
*மாணிக்கத்துள்ளே மரகதமாடமாய்"*[90]

என அப்பனுக்குச் செம்மைநிறத்தையும், அம்மைக்குப் பச்சை நிறத்தையும் கூறுவது ஈண்டு நோக்கத்தக்கது.

**பதியை அறியும் முறை**

பதியாகிய முதற்பொருள், ஒருவகையிலும் உணரப்படாத பொருளும் அன்று; உலகம் போல் உணரப்படும் பொருளும் அன்று; அதனால் அது சிவமாகிய சத்தாய் உள்ளது.

'ஒருவகையால் உணரப்படாமை' என்பது 'பாசஞானம்', 'பசுஞானம்' இவற்றால் உரைப்படாமை என்று பொருள். 'உணரப்படும் பொருள்' என்பது 'பதிஞானத்தால்' மட்டுமே உணரப்படுவது என்பதாகும்.[91]

இதனை

*"பாசஞானத் தாலும் பசு ஞானத்தாலும்*
*பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே*
*நேசமொடு உள்ளத்தே நாடி"*[92]

என சித்தியார் கூறும்.

பாசஞானம் என்பது உலகத்துப் பொருள்களைப் பற்றிய அறிவு. அது உயிரினிடத்தே நிகழும். பசுஞானம் என்பது உயிர்க்கருவிகளின் வாயிலாகத் தெளிவுற அறிந்த பொருள்களை நுகர்ந்திடும் தனி அறிவாகும்.

இக்கருத்தை,

*"பாச ஐம்புலன் தேசுற உணர்த்தப்*
*பசுத் தனிஞானம் பொசித்திடும்"*[93]

என சங்கற்ப நிராகரணம் விளக்கும்.

உயிர், பாசங்களைச் சடப்பொருள் என்றறிந்தும், தாம் அறிவதற்கு உதவிய கருவிகள், தாம் அல்ல என்றறிந்தவுடன் இவ்விரண்டையும் விட்டு நீங்கி, தன்னைத்தான் அறியும் நிலை உண்டாகிறது. அது எங்ஙனம் என ஊன்றி நோக்கும் போது, தன் அறிவுக்கு அறிவாய் நிற்கும் பதிப்பொருளின் அறிவு என்பது புலனாகும். இதுவே 'பதிஞானம்' என்று சொல்லப்படும்.[94] இப்பதிஞானத்தால் இறைவனை அறிவதையே சைவசமய அருளாளர்கள், 'அருட்கண்ணால் காணுதல்' என்பர்.

அருளே கண்ணாகக் காணின் காணலாகும். அக்கண் இல்லாதவர்க்கு எவ்வகையிலும் காட்டொணாது. இதனை

*"அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்"*[95]

என திருநாவுக்கரசரும்,

*"அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள் தோன்றா*

*அருட்கண்ணு ளோர்க்கெதிர் தோன்றும் அரனே"*[96]

என திருமூலரும் காட்டுவர்.

புறக்கண்ணும், அகக்கண்ணும் பெற்ற உயிர்களுக்கு இறைவன் 'விழியாக முன்னின்று' அருள் சுரந்து அவர்கள் விரும்பிய வரங்களைத் தந்தருள்வான் எனும் கருத்தில்,

*"விழியாக முன்னின்று தண்ணளி சுரந்து அவர்கள்*

*வேண்டிய வரம் கொடுப்பான்" (மு.கு.பி.த. அம்புலி.6)*

எனவரும் பாடலில் இறைவனின் 'பேரருட் திறத்தை' விளக்குவார் குமரகுருபரர்.

*"சிவனவன்என் சிந்தையுள் நின்ற அதனால்*

*அவனருளாலே அவன்தாள் வணங்கி"*[97]

என மாணிக்கவாசகர் கூறுவதைப்போல, தமக்கு முருகப்பெருமான் "மெய்ஞ்ஞானம்" தந்து, தம் உள்ளத்தில் உள் நின்று விளங்குதலை,

*"உலகுகுளிர எமது மதியிலொழுகு மமுத கிரணமே"*

*(மு.கு.பி.த. வருகை.9)*

என்பதால் குமரகுருபரர் சுட்டுவர்.

தமக்கு மட்டுமன்று, தன்னை வழிபடும் அடியார்களின் உள்ள உணர்வினின்றும் அருள்புரிகின்றான் முருகன். இதனை,

*"உருகு மடிய ரிதய நெகிழ உணர்வி லெழுந் லுதயமே"*

*(மு.கு.பி.த. வருகை.9)*

என்பதால் குறிப்பர்.

**அத்துவிதம்**

சைவ சித்தாந்தத்தின் தனித்தன்மையும், சைவ சித்தாந்தத்திற்கே உரிய சிறப்பும் பெற்ற கொள்கை 'அத்துவிதம்' ஆகும்.

முதல்வனுக்கும் உலகிற்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு 'அத்துவிதம்' என்ற சொல்லால் குறிக்கப்பெறும். 'அத்துவிதம்' என்ற சொல் பிரிவின்மையை

(அந்நிய நாத்தியை) உணர்த்தும்.[98] 'பிரிவின்மை' என்று கூறுவதால் 'பொருள் இரண்டு' என்பதும், 'இரண்டாயினும் வேறுவேறாய் நில்லாது ஒன்றிலே நிற்கும்' என்பதும் பெறப்படும்.[99] எனவே, இத்தன்மையை 'இருமையில் ஒருமை' என்பர் அறிஞர்.[100]

இதனை,

*"ஒன்றாகாமல், இரண்டாகாமல்*
*ஒன்றுமிரண்டு மின்றாகாமல்"*[101]

என அருள்நந்தி சிவாசாரியார் விளக்கிக் காட்டுவர்.

'இறைவன் கல்லாலடியிலிருந்து காட்டிய மோன முத்திரையில், சீவபரமான்மாக்களின் அநாதி சம்பந்த அத்துவிதஞ் சித்திப்பான் நிற்கும் நிலையுணர்த்தப்படும்' எனும் பொருள்பட வருவது பின்வரும் பாடல்:

*"ஒன்றெனற்குச் சுட்டு விரலினையு மோரிரண்*
*டென்றிடற்கஃ தோடென் றினையுமிரண் – டொன்றுமென*
*வாட்டியொன் றாக்குதலுங் காட்டாம லத்துவிதங்*
*காட்டியதே கல்லாலிற் கை"*[102]

இப்பாடலில், இறைவன் யோகநிலையில் உயிர்களுக்கு உணர்த்திடும் அத்வைத நிலையினைப் பாம்பன் சுவாமிகள் எடுத்துக் காட்டுவர்.

கடவுளும், உயிரும் பிரிப்பின்றி நிற்கும் நிலையினை மெய்கண்டார்,

*"அவையே தானே யாய்"*[103]

எனும் நூற்பாத் தொடரால் உணர்த்துவர்.

இத் தொடரை, மூன்று வகையாகப் பிரித்துப் பொருள் உணர்த்துவர்.

1. 'அவையேயாய்'
2. 'தானேயாய்'
3. 'அவையே தானேயாய்'

இதனை, ஒன்றாதல், வேறாதல், உடனாதல் எனக் காட்டுவர்.

*". . . . உடல் உயிர் கண் அருக்கன்*

*அறிவொளி போல் பிறிவரும் அத்துவிதம் ஆகும்"*[104]

எனவரும் பாடலில்,

ஒன்றாதலுக்கு, 'உடலும் உயிரும்', வேறாதலுக்குக் 'கண்ணொளியும் கதிரவன் ஒளியும்', உடனாதலுக்கு, 'கண்ணொளியும் ஆன்மபோதமும்' உவமைகளாகச் சிவப்பிரகாசம் காட்டும்.

**ஒன்றாதல்**

உயிர் தனக்கு வேறாகிய உடலிற் பொருந்தி, அவ்வேற்றுமை சிறிதும் தோன்றாமல் அவ்வுடலே என்னும்படி ஒற்றுமைப்பட்டு நிற்கிறது. இதுபோன்றே, இறைவன், உயிர் உலகம் ஆகியவற்றால் கலந்து 'அவையேயாய்' நிற்கின் றான். உயிரின் கலப்பு இல்லாமல் உடல் தனித்து நிற்றல் இயலாது. அதுபோல, இறைவனது கலப்பு இல்லாமல் எவ்வகைப் பொருளுக்கும் இருப்பு என்பது கிடையாது.

ஒரு பொருள் நிலைபெறுதற்கு அதனோடு இறைவன் ஒன்றாய்க் கலந்து நின்றால் தான் அப்பொருள் நிலைபெறுதல் இயலும். எனவே, 'ஒன்றாய்'க் கலந்து நிற்றல் இன்றியமையாதது.

**வேறாதல்**

கண்ணொளி தானே உருவத்தைக் காட்டக்கூடிய ஆற்றல் உடையதன்று. அதனோடு கதிரொளி கலந்து காட்டுகிறபோது கண்ணொளி காணும் ஆற்றல் பெறுகிறது. கதிரொளியும் கண்ணொளியும் இணைகிறபோதுதான் காட்சி புலப்படுகிறது. பொருளைக் காண்பது கண்ணொளியே அன்றிக் கதிரொளி அன்று. எனவே, கதிரொளி பொருளைக் கண்ணிற்குக் காட்டுகிறது. இவ்வாறே உயிர் ஒரு பொருளை அறிகிற போது, இறைவனும் உயிரும் பிரித்தறியாது நிற்பனவாம். உயிர் பொருளை அறிவதற்கு இறைவன் அதற்கு அறிவிப்பவனாய் இருப்பான். இத்தன்மையால், அவன் 'தானேயாய்' நிற்கின்றான்.

உயிரின் அறிவை விளக்குதற்கும், பிற பொருள்களை இயக்குவதற்கும் இறைவன் 'வேறாய்' நிற்றல் இன்றியமையாததாகிறது.

**உடனாதல்**

கண்ணொளி பொருளைக் காண்பதற்கு உயிர் அறிவும் உடன் நின்று காணவேண்டும். எனவே, உயிர் ஒரு பொருளை அறியுங்கால் இறைவனும் அதனோடு இருந்து அறிதல் வேண்டும். இத்தன்மையால் அவன் 'அவையே தானேயாய்'' நிற்கின்றான்.

உயிர்கள் பொருள்களை அறிந்து நுகர்வதற்கு இறைவன் 'உடனாய்' நிற்றல் இன்றியமையாததாகிறது.[105]

பண்ணோடும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் இசை போலவும், பழமும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் சுவை போலவும் எல்லா இடத்தும் பரந்து நிற்கும் முதல்வன் திருவருள், உயிர்களோடு பிரிப்பின்றி நிற்கும். இதனால் வேதம் 'பிரமம் ஏகம்' என்று கூறியதோடு அமையாமல், 'பிரமம் அத்துவிதம்' என்றும் கூறும்.[106]

உயிர்களோடு இறைத்திருவருள் பிரிப்பின்றி நிற்பதை உணர்த்துவதற்கு வேதங்களில் 'அத்துவிதம்' என்றே கூறப்படுகிறது.

மேலும்,

*"அரக்கொடு சேர்த்தி அணைத்தஅக் கற்போல்*
*உருக்கி உடங்கு இயைந்து நின்று - பிரிப்பின்றித்*
*தானே உலகாம்; தமியேன் உளம்புகுதல்*
*யானே உலகுஎன்பன் இன்று"*[107]

எனவரும் வெண்பாவில் ஒன்றாதல், வேறாதல், உடனாதலை ஒரே உவமையின் மூலம் காட்டுவர் மெய்கண்டார்.

அரக்கை உருக்கி, உருக்கப்பட்ட அரக்கினோடு கற்பொடியைச் சேர்த்துக் கூட்டினால், அக்கற் பொடியானது அந்த அரக்கோடு 'ஒன்றாய்'க் கூடி நீக்கமின்றி நிற்கும். அதேவேளை, தன்தன்மை திரியாது 'வேறாயும்',

அரக்கோடு நீங்காது 'உடனாயும்' நிற்கும். அதுபோல, முதல்வனும் உலகத்தோடு 'ஒன்றாய்' இயைந்து 'அவையேயாகி' நிற்பான்; பொருள் தன்மையால் வேறாகி'த் 'தானேயாய்' நிற்பான்; யாண்டும் நீங்காது உலகமும் தானுமாய் 'உடனாய்' நிற்பான்.

இங்ஙனம், 'அத்துவிதம்' என்ற சொல்லுக்கு உண்மைப் பொருளை விளக்கினமையால் 'மெய்கண்டார்' ஆனார் என்பதைத் தாயுமான அடிகள்,

*"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவிதம்*
*மெய்கண்ட நாதன் மேவுநாள் எந்நாளோ?"*[108]

எனக் கூறுவார்.

இவ் 'அத்துவித' நிலையை,

*"நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே"*[109]

என்று மாணிக்க வாசகரும்,

*"ஈறாய் முதல் ஒன்றாய் இரு*
*பெண் ஆண்குணம் மூன்றாய்*
*மாறாமறை நான்காய் வரு*
*பூதம் அவை ஐந்தாய்*
*ஆறாய் சுவை ஏழோசையோடு*
*எட்டுத்திசை தானாய்*
*வேறாய் உடன் ஆனான் இடம்*
*வீழிம் மிழலையே"*[110]

எனத் திருஞான சம்பந்தரும்,

*"ஊனாய்உயிர் ஆனாய் உடல்*
*ஆனாய்உல கானாய்*
*வானாய் நிலன் ஆனாய்கடல்*
*ஆனாய் மலை ஆனாய்"*[111]

எனச் சுந்தரரும் கூறுகின்றனர்.

இதை உட்கொண்டே, குமரகுருபர அடிகளும்,

*"ஊனாய் உயிர்க்குயிரானாய்"* (மு.கு.பி.த. தால்.10)

*"கண்ணினுள் மணி இவன் காண்"* (மு.கு.பி.த. அம்புலி. 3)

என 'ஒன்றாதல்', 'வேறாதல்' 'உடனாதல்' ஆகிய அத்துவிதம் பற்றித் தமது முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில் எடுத்துக் காட்டுவர்.

**பதியின் தனிப்பெருங்கருணை**

உலகத்தில் காணப்படுகின்ற எல்லா வடிவங்களும் தானே ஆகி, அவற்றோடு கலந்து, பராசத்தியையும் வடிவாகக் கொண்டு, மலத்தால் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாக்களின் மீது கொண்ட கருணையால், அவற்றிற்கு உடல்கருவி உலகு எனப் படைத்து, வினைக்கீடாகப் பிறப்பு இறப்புகளை வழங்கி அவற்றை ஒடுக்கிப் பின்னர் உருவாக்கி, பக்குவப்பட்டஉயிர்களுக்கு வீடுபேற்றை வழங்குபவன் இறைவனே என்று செம்மையாக உயிர் உணர்வதே சிவரூபம் ஆகும். இக்கருத்தை,

*"எவ்வடிவுகளும் தானாம் எழிற்பரை வடிவதாகிக்*
*கவ்வியமலத்து ஆன்மாவைக் கருதியே ஒடுக்கி ஆக்கிப்*
*பவ்வமீண்டு அகல பண்ணிப் பாரிப்பான் ஒருவன் என்றே*
*செவ்வையே உயிருட் காண்டல் சிவரூபமாகும் அன்றே"*[112]

என உண்மைநெறி விளக்கம் கூறும்.

இறைவன் வடிவம் கொண்டு, ஐந்தொழில் இயற்றி, வீடுபேற்றை அருளி உயிர்களை உய்விக்கவே தனிப் பெருங்கருணை கொண்டுள்ளான் என்பதை உயிர்கள் உணர்தல் வேண்டும். அதுவே சிவரூபம் என்பது இதன்மூலம் தெளிவாகும்.

**இருவகைக் கருணை**

இறைவன் உயிருக்கு நன்மையைக் கூட்டுவிப்பது 'அறக்கருணை' என்றும், தீமையைக் கூட்டுவிப்பதால் நன்மை செய்வது 'மறக்கருணை' என்றும் கூறப்பெறும்.

மறக்கருணையை முருகனுடைய கைகளும், அறக்கருணையை அவனுடைய பாதங்களும் செய்வதாக,

*"உறுநர்த் தாங்கிய மதனுடைய நோன்றாள்*
*செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை"*[113]

எனத் திருமுருகாற்றுப்படை தெரிவிக்கும்.

**மறக்கருணை**

இறைவன் உயிர்கள் மீது கொண்டுள்ள அன்பினால் குற்றம் புரிகின்ற உயிர்களைத் தண்டித்துப் பின்னர் அவ்வுயிர்களுக்கு அருளும் தன்மை 'மறக்கருணை' எனப்படும்.

*'மறம்மலி அகிதம் செய்யின் நிக்கிர கத்தை வைப்பன்'*[114]

எனச் சித்தியார் கூறும்.

முருகன், சூரபன்மனை அழித்துப் பின் அவனின் இருகூறுகளான சேவலைத் தன் கொடியாகவும், மயிலை ஊர்தியாகவும் ஏற்றுக் கொண்டான்.

*". . . . . . மூவாமாவாமச்*
*சூர்வேரறத்தொடு வேலா"* *(மு.கு.பி.த. தால்.9)*

*"குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூருயிர்*
*குடித்திட விடுத்து நின்றான்"* *(மு.கு.பி.த. அம்புலி.8)*

எனவரும் தொடர்களால் குமரகுருபரர் சூரனை அழித்தற்பொருட்டு இறைவனின் கருணையைக் குறிப்பிடுவார்.

இம் மறக்கருணையை,

*"எண்ணரிய திறல்பெற்ற சூரனை மறக்கருணை*
*ஈந்து பணி கொண்டி லையெனில்"*[115]

என வள்ளலாரும் போற்றுவர்.

பிரமனிடம், முருகன் பிரணவத்தின் பொருள் யாது என்று கேட்டு, அதற்குரிய பொருள் தெரியாமல் பிரமன் மயங்கினான். அதனால், பிரமன் தலையில் முருகன் குட்டினான். பின் முருகனே படைப்புத் தொழிலைச்

செய்தான். இங்ஙனம், பிரமனை ஒறுத்து அவன் தருக்கினை அடக்கி, அவனுக்கு மறக்கருணை புரிந்தான். இதனை,

*"குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்*
*குருதி பொங்கப் புடைத்தான்"* *(மு.கு.பி.த. அம்புலி. 8)*

எனவரும், குமரகுருபரர் பாடலால், முருகன், பிரமனை ஒறுத்தலால் மறக்கருணை புரிந்தான் என அறியலாம்.

**அறக்கருணை**

இறைவன் தன்னை வழிபடுகின்ற அடியவர்களுக்குத் துன்பம் நேரும்போது தானே முன்வந்து அருள்புரியும் தன்மை 'அறக்கருணை' எனப்படும்.

*'அறம்மலி இதம் செய்வோருக்கு அநுக்கிரகத்தைச் செய்வன்'*[116] என்பது சித்தியார் வாக்கு

முருகன்தம் பாதத்தில், முடித்தலையைப் பதித்தவர்க்கு வாசனையுள்ள நூற்றிதழ்களையுடைய அழகிய தாமரை மலர்ப்பீடத்தையும் மேல்உலகத்துடன் அனந்தசயனத்தையும் தந்து அருள்வான் எனும் கருத்தில்,

*"முறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு*
*சொர்க்கத் தலத்தோடு சேடசய னத்தையும்*
*முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர்தம்*
*அக்குக் கொடுத்தானை"* *(மு.கு.பி.த. காப்பு.11)*

என்றும்;

முருகன் தேவர்க்கு வந்த துன்பத்தை நீக்கியதால், தேவமங்கையர் மகிழ்ச்சியுடன் இருந்தனர் எனும் கருத்தில்,

*"மடமா னோக்கின் அரமகளிர்*
*மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு*
*வந்த இடுக்கண் மாற்றினையால்"*
*(மு.கு.பி.த. சிற்றில்.9)*

என்றும்; குமரகுருபரர் முருகனின் 'அறக்கருணையை'ப் போற்றிப் பாடுகிறார்.

**இவ்வியலின் வாயிலாக அறியத்தகும் முடிபுகள்**

1. சைவ சித்தாந்தம் கூறும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களுள் பதி ஒன்றே முதன்மை வாய்ந்தது.
2. சிவபெருமானும், முருகனும் ஒன்றே என்பதனால், குமரகுருபரர் சிவபெருமானுக்குச் சொல்லப்படும் சைவசித்தாந்தக் கருத்துக்களை முருகப் பெருமானுக்கு ஏற்றி உரைக்கிறார்.
3. பதி முதல்வன் என்பதும், தெய்வங்களுக்கு எல்லாம் தலைவன் என்பதும், அவனே சங்கார காரணன், நிமித்த காரணன், இன்ப காரணன் என்பதும் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.
4. சைவ சித்தாந்தம் கூறும் பதியின் பொது இயல்பு, சிறப்பு இயல்புகள் ஆகியனவும், சத்து, சித்து, ஆனந்தம் என்பனவும் குமரகுருபரரால் எவ்வாறெல்லாம் சொல்லப்பட்டுள்ளன என்பதும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.
5. இறைவனுக்குரிய படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் எனும் ஐந்தொழில்களும் சூக்கும, அதிசூக்கும ஐந்தொழில்கள் பற்றிய கருத்துக்களும் இடம்பெற்றுள்ளன. குமரகுருபரர் இத்தொழில்கள் அனைத்தையும் குறிப்பிடுகிறார்.
6. இறைவனுக்குரிய மூவகைத் திருமேனிகள் பற்றியும், அருளே வடிவமாக உள்ளமை பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.
7. இறைவனின் 'தொன்மைக் கோலமான' அம்மையப்பரைப் பற்றிக் குமரகுருபரர் கூறும் பல்வேறு இடங்களும் சுட்டப்பட்டுள்ளன.
8. சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையான அத்துவிதம் பற்றியும், பதியின் தனிப்பெருங்கருணை பற்றியும் குமரகுருபரர் சொல்வதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

**அடிக்குறிப்புகள்**

1. R. Ramanujachari, 'Saiva Siddhanta', **Collected Lectures on Saiva Siddhanta,** p.6.
2. க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', சைவமும் வைணவமும் ப. 55.
3. மேலது. ப. 55.

4. மேலது, பக். 52, 53.
5. கிருபானந்தவாரி (உ.ஆ)., கந்தரநுபூதி, ப. 8.
6. திருமந்திரம், 508.
7. கந்தர் கலி வெண்பா, 76.
8. கோ. மு. முத்துச்சாமி பிள்ளை, திருப்புகழில் சைவசித்தாந்தம், ப. 14.
9. கந்தபுராணம், உற்பத்திக் காண்டம், பா. எண். 1069.
10. மேலது, பா. எண். 1070.
11. தணிகைப்புராணம், வீரட்டகாசப் படலம், 118.
12. சிவஞானபோதம், 2:1 உதாரண வெண்பா:7:1
13. போற்றிப் பஃறொடை, 108.
14. திருவருட்பயன். 6.
15. சி. அருணை வடிவேல் முதலியார், முப்பொருள் இயல்பு, பக். 67, 68.
16. சிவஞான சித்தியார், 115.
17. மேலது, 24.
18. சி. அருணை வடிவேல் முதலியார், மு.கா. நூல்., பக். 68, 69.
19. கந்தரநுபூதி, 12.
20. திருநாவுக்கரசு சுவாமிகள், ஆதிபுராணத் திருக்குறுந் தொகை, 3.
21. திருமந்திரம், 2367.
22. சிவஞானசித்தியார், 266:1.
23. திருப்புகழ், பொது, 1104:4.
24. சிவஞானசித்தியார், 54.
25. ஆ. ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, பக். 25, 26.
26. கம்பராமாயணம், பரசுராமப் படலம், பா. 1219
27. திருஞான சம்பந்தர், திருவீழிமிழலைப்பதிகம், 4.
28. சிவஞான போதம், சூத். 1:2 உதாரண வெண்பா 2:1.
29. ஆ. ஆனந்தராசன், மு. கா. நூல், ப. 38.

30. ச. சாம்பசிவனார், திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், ப. 26.
31. நெஞ்சுவிடு தூது, 1–4.
32. சிவஞான சித்தியார், 38.
33. சிவப்பிரகாசம், பாயிரம். 11–3.
34. ச. சாம்பசிவனார், சிவஞான போதச் செம்பொருள், ப. 32.
35. ந. சுப்புரெட்டியார், சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம், ப. 46.
36. சிவப்பிரகாசம், 13.
37. பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள், தகராலய ரகசியம், முதலாங்கண்டம், 10.
38. மாணிக்கவாசகர், திருச்சதகம், அநுபோகசுத்தி, 9.
39. மாணிக்கவாசகர், திருவம்மானை, 13.
40. ந. சுப்புரெட்டியார், மு.கா. நூல், ப. 46.
41. ஆ. ஆனந்தராசன், மு. கா. நூல், ப. 164.
42. ச. சாம்பசிவனார், திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், ப. 31.
43. ச. சாம்பசிவனார், சிவஞான போதச் செம்பொருள், ப. 34.
44. சி. அருணைவடிவேல் முதலியார், மு.கா.நூல், ப. 75.
45. ச. கங்காதரன், சைவசித்தாந்த அடிப்படைக் கொள்கைளும் வரலாறும், ப. 72.
46. ச. சாம்பசிவனார், திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், ப. 38.
47. கொடிக்கவி, 3:2.
48. ந. சுப்புரெட்டியார், மு.கா. நூல், ப. 47.
49. மாணிக்கவாசகர், திருவெம்பாவை, 20.
50. சிவஞானசித்தியார், 50:2,3.
51. சி.சு.மணி (உ.ஆ.), சிவஞானசித்தியார் சுபக்கம், ப. 39.
52. சி. அருணை வடிவேல் முதலியார், சித்தாந்தத் தெளிவியல், ப.99.

53. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப. 143.
54. மேலது, ப. 146.
55. சிவஞான சித்தியார், 264:4.
56. ஆ. ஆனந்த ராசன், மு.கா.நூல், ப. 147.
57. மேலது, ப. 147.
58. உண்மைவிளக்கம், 35.
59. சிதம்பர மும்மணிக்கோவை, 2:1–21.
60. திருவருட்பயன், 4.
61. திருவுந்தியார், 1.
62. சிவஞான சித்தியார், 75:2,3.
63. நெஞ்சுவிடுதூது, 11.
64. கந்தபுராணம், மகேந்திர காண்டம், சூரன் அமைச்சியல் படலம், 4836: 1,2.
65. திருஞானசம்பந்தர், பொதுத் திருப்பதிகம், 5.
66. ச. கங்காதரன், மு.கா.நூல், ப. 266.
67. ஆ. ஆனந்தராசன், திருவருட்பயன் வழித்துணை விளக்கவுரை, ப.21.
68. போற்றிப்பஃறொடை, 126–142.
69. வை. தட்சிணாமூர்த்தி, ஸ்ரீ நடராசத் தத்துவம், ப. 7.
70. மேலது, ப. 7.
71. மேலது, ப.7.
72. சிவஞான சித்தியார், 70.
73. மேலது, 67.
74. மேலது, 72:4.
75. மேலது, 68:1.
76. மேலது, 68:3
77. மேலது, 68:3.
78. மேலது, 72:1,2.
79. ந. சுப்புரெட்டியார், மு.கா.நூல், ப. 48.

80. ச. சாம்பசிவனார், திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், ப. 35.

81. சிவஞானபோதம், 2:4, மேற்கோள்.1.

82. (அ) ஆ.ஆனந்தராசன், சிவஞான போதம் வழித்துணை விளக்கவுரை, ப.77.

(ஆ) குமாரசாமித் தம்பிரான், குமரகுருபரர் ஆய்வுமாலை, தொகுதி.1, ப.11.

83. திருக்களிற்றுப்படியார், 1:1.

84. சிவஞானசித்தியார், 69: 2,3.

85. மாணிக்கவாசகர், திருக்கோத்தும்பி, 18.

86. பதிற்றுப்பத்து, கடவுள் வாழ்த்து, 7–8.

87. குமாரசாமித் தம்பிரான், குமரகுருபரர் ஆய்வுமாலை, தொகுதி.1. ப. 21.

88. போற்றிப் பஃறொடை, 126–127.

89. கந்தரலங்காரம், 63:1.

90. திருமந்திரம், 175: 1–2.

91. ச. சாம்பசிவனார், திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், ப. 46.

92. சிவஞான சித்தியார், 292:1.

93. சங்கற்ப நிராகரணம், 11:3–4.

94. ந. சுப்புரெட்டியார், மு.கா.நூல், ப. 106.

95. திருநாவுக்கரசர், திருவினாத் திருத்தாண்டகம், 10:3.

96. திருமந்திரம், 1777: 1–2.

97. மாணிக்கவாசகர், சிவபுராணம், 17–18.

98. சுப்பிரமணிய தேசிகர் உரை, சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும், ப. 29.

99. ந. சுப்புரெட்டியார், தாயுமானவர், ப. 180.

100. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப. 77.

101. இருபா இருபஃது, 20:9–10.

102. பாம்பன் சுவாமிகள், காசியாத்திரை, 86.

103. சிவஞானபோதம், 2:1.

104. சிவப்பிரகாசம், பாயிரம். 7:3.

105. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், பக். 51–52.

106. சிவஞானபோதம், சூத்: 2, உதாரண வெண்பா:8.

107. மேலது, உதாரண வெண்பா:9.

108. தாயுமானவர், எந்நாட்கண்ணி, குருமரபின் வணக்கம், 4.

109. மாணிக்கவாசகர், சிவபுராணம், 44.

110. திருஞானசம்பந்தர், திருவீழிமிழலைப்பதிகம், 2.

111. சுந்தரர், திருவெண்ணெய் நல்லூர்ப் பதிகம், 7.

112. உண்மைநெறி விளக்கம், 3.

113. திருமுருகாற்றுப்படை, 5–6.

114. சிவஞான சித்தியார், 104:4.

115. வள்ளலார், தெய்வமணி மாலை, 21:3.

116. சிவஞான சித்தியார், 104:3.

## 5.2. பசு இயல் கருத்துக்கள்

**முன்னுரை**

சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களுள் 'பசு' என்பதும் ஒன்று. இது 'ஆன்மா' என்றும், 'உயிர்' என்றும் சொல்லப்படும்.

*'பசுத்துவம் உடையன் ஆகிப் பசு என நிற்கும் ஆன்மா'*[1]

என்பது சித்தியார்.

"பசுத்துவம் – கட்டுக்குள் அகப்படும் தன்மை. பாசத்தால் கட்டுப்பட்டு நிற்பது எதுவோ" அதுவே 'பசு' என்றும்; "பச்–பந்தித்தல்; உ–செயப்படுபொருள் விகுதி பசு–பாசத்தால் பந்திக்கப்பட்டது" என்றும் விளக்கிக் காட்டுவர் அறிஞர்[2]

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், இடம்பெறும் 'பசு' பற்றிய கருத்துக்கள் இவண் ஒரு சிறிது ஆராயப்படுகின்றன.

**உயிர் உண்மை**

"உயிர் கண்ணுக்குப் புலனாகாவிடினும் கருத்திற்குப் புலனாவதாக ஏற்றுக் கொள்ளப் பெறும்".[3] இதன் காரணமாகச் சைவசித்தாந்தம், உலகப்பயனை அநுபவிக்கும் உயிரின் இருப்பை அநுமானப் பிரமாணத்தால் நிலைநாட்டுகிறது.

*"உளதில தென்றலின் எனதுடல் என்றலின்*
*ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்*
*உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்*
*மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா"*[4]

*"அந்தக் கரணம் அவற்றினொன்றன்று"*

என்னும் சிவஞானபோதச் சூத்திரங்களின் வழியாக, உயிர் உண்மையை மெய்கண்டார் உணர்த்துகிறார்.

இதன் பொருள் பின்வருமாறு:

"இலது என்றதலினாலும், எனது உடல் என்றதலினாலும், ஐம்புலன்கள் அறிதலினாலும், ஐம்புலன்களும் ஒடுங்கின சொப்பனத்தை அறிதலினாலும், சுழுத்தியில் இன்ப துன்ப அநுபவமும் உடம்பு சேட்டித்தலும் இல்லாமையானும், அறிவிக்க அறிதலானும், மாயாகாரியமாகிய உடல் முதலியவற்றிற்குக் குறிப்பேதுவால் வேறு வேறு பெயரிருத்தலானும், சூனியம், உடல், ஐம்புலன், சொப்பனம், சுழுத்தி, பிரமம், சமுதாயம் ஆகிய இவற்றின் வேறாய் உடம்பினுள் உயிருண்டு. அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரஞ் சித்தமென்னும் நான்கனுள் ஒன்றன்று. [6]

மேலும், உடலுக்கு வேறாகவும் மட்டுமன்றி எல்லாப் பொருள்களுக்கும் வேறாக உள்ளது உயிர். "தன்னை இயற்கையிலே பற்றியுள்ள ஆணவ மலம் என்னும் மாசினால் அறிவையிழந்து நிற்பதனால், அமைச்சர்களோடு கூடிச் செயல்புரியும் அரசனைப் போல, அம் மாசினைச் சிறிது நீக்கி அறிவை விளக்குவனவாகிய அந்தக் கரணங்களோடு கூடி நின்று ஐந்து நிலைகளை உடையதாகும்" என உயிரின் இலக்கணத்தையும் மெய்கண்டார் வரையறுக்கிறார்.[7]

உடலுக்கு வேறாகவும், உடம்புகளைப் பொருந்தி அமையும் உயிர்க்கு, உயிராய் இறைவன் இருக்கின்றான் என்பதை,

*"ஊனாய் உயிர்க்கு உயிரானாய்" (மு.கு.பி.த. தால். 10)*

எனும் தொடரால் குமரகுருபர அடிகள் குறிப்பிடுவர்.

இதனை,

*" ஒருவனே உயிர்கட்கு எல்லாம் உயிருமாய்,*
*உணர்த்தி நிற்பன்"*[8]

என அருள்நந்தி சிவாசாரியாரும் அருள்வர்.

"உடம்புகள் தோறும், 'யான்' என்னும் தன்னோக்கு உணர்வு வடிவில் உள்ளதே உயிர்" [9] எனப்படும்.

முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழில்,

*"நானாகி எனக்கு அரிதானாய்"* (மு.கு.பி.த. தால்.10)

எனும் பாடல் தொடர்,

நானாகி, உயிராகி என்பதாகவும், யான், எனது என்னும் உணர்விற்குப் பொருளாக உள்ள உயிராகி என்பதாகவும் இருபொருள் தன்மையில் உயிரையும், உயிரின் இயல்பையும் குறிக்கிறது.

'யான்', 'எனது' என்னும் பாச சம்பந்தத்தால் அறிவின் ஆற்றல் குறைந்து நிற்கும் உயிர்கள் காண்பதற்கு அரிதானவன் இறைவன் என்றும் குறிக்கும்.

**உயிர்களின் எண்ணிக்கை**

பதி எனும் கடவுட் பொருள் ஒன்றேயாகும். உயிர், அவ்வாறின்றி அளவிறந்தன. அதனால் இறையை 'ஏகன்' என்றும், உயிரை 'அநேகன்' என்றும் வழங்குவர்.

*"ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க!"*[10]

என்பது திருவாசகம்.

உமாபதிசிவம் தன் "திருவருட்பயனில்"

*"பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலும்*
*துறந்தோர் துறப்போர் தொகை"* [11]

என்பர்.

"உயிர்கள் முன்பு பிறந்த நாளுக்கும், இனிமேல் பிறக்கப் போகிற நாளுக்கும் இத்தனையென்று தொகை இல்லாதது போல் இவ்வுலகைத் துறந்து வீடுபேறு அடைந்தவர்களுக்கும், இனிமேல் அடையப் போகிறவர்களுக்கும் அளவில்லை!" என்பது இதன்பொருள்.[12]

குமரகுருபர அடிகளும்,

*"எவ்வுயிரும் வாழச்செய்தான்"* (மு.கு.பி.த. அம்புலி 3)

*"………. தண்ணளி சுரந்து அவர்கள்*
*வேண்டிய வரங் கொடுப்பான்" (மு.கு.பி.த. அம்புலி.6)*

*"சகலபுவனத்திலும் உயிர்ப்பயிர் தழைப்ப"*
*(மு.கு.பி.த. அம்புலி.1)*

எனப் பல்லுயிர்கள் பற்றி அருளிச் செய்வர்.

ஓர் உயிர் ஓர் உடம்பில் நின்று அநுபவிக்கும் இன்ப துன்ப அநுபவங்கள்—நிகழ்ச்சிகள்—மற்றோர் உயிருக்கு இல்லாமையால் ஒவ்வோர் உடம்பில் உள்ளதும் தனித்தனி வேறு உயிரே என்பது எளிதில் தெளிவாகும்.[13]

அநாதியான இவ்வுயிர்கள் இறைவனின் உடைமையாய், அவனுக்கு அடிமையாய் நிற்கும். இறைவனைத் தவிர வேறு புகலிடம் உயிர்களுக்கு இல்லை.

இக்கருத்தை, உய்யவந்த தேவ நாயனாரும், திருக்களிற்றுப் படியாரில்,

*"அநாதி சிவனுடைமை"* [14]

என்றும்; மெய்கண்டார், சிவஞான போதத்தில்

*"பலவகையிலும் பரம்பொருளுக்கு உயிர்கள் அடிமையாயே நிற்கும்"* [15]

என்றும் குறிப்பிடுவர்

இதனை உட்கொண்டே குமரகுருபரரும்,

*"அட்டத்திக் கினிலுமொரு திக்கிலை" (மு.கு.பி.த. அம்புலி.7)*

என்று கூறுவர்.

"உயிர்களின் இறுதிப்புகல் இறைவன்தான்" என்பது கருத்து.

**உயிர்-அறிவுப்பொருள்**

உயிர் என்பது அறிவுடையது; ஆயினும் இறைவனது அறிவைப் போல் பேரறிவுடையதாகாது; அது சிற்றறிவுடையதாய் உள்ள பொருள்.

அறியும் இயல்புடைய இவ்வுயிர், ஒவ்வொரு பொறியின் துணையுடனேயே ஒவ்வொரு பொருளை அறியும். அறிந்த பொருளை மறந்தும் போகும். உயிர்

தானாக அறியாது, அறிவித்த போதே அறியும் இயல்புடையது. அறிகின்ற உயிர், தன்னைத் தானே அறியாது. எனவே, தானே அறியும் இயல்புடைய முதல்வன் அறிவிக்கவே உயிர்கள் அறிந்து வருகின்றன.

இக்கருத்துக்களை உள்ளடக்கிய சிவஞானசித்தியார் பாடல்:

*"அறிந்திடும் ஆன்மாஒன்றை ஒன்றினால் அறிதலானும்*
*அறிந்தவை மறத்தலானும் அறிவிக்க அறிதலானும்*
*அறிந்திடும் தன்னையும்தான் அறியாமையானும் தானே*
*அறிந்திடும் அறிவன் அன்றாம்; அறிவிக்க அறிவன் அன்றே"* [16]

**இறைவன் செய்யும் உபகாரம்**

இங்ஙனம், அறிவிக்க அறியும் தன்மையுடைய உயிர்களுக்கு இறைவன் அறிவு பெறச் செய்ய இரு உபகாரங்கள் செய்து உதவிடுவான். அவை, காட்டும் உபகாரம், காணும் உபகாரம் எனப்படும்.

இறைவன் உயிர்களின் அறிவை விளக்கி அவைகளை அறியச் செய்வதே 'காட்டும் உபகாரம்' எனப்படும்.

உயிர்கள் அறியும்போது அறியப்படும் பொருளை இறைவன் தானும் உடன் நின்று அறிவது 'காணும் உபகாரம்' எனப்படும்.

இவ்விரு உபகாரத்தையும்,

*"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்*
*காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்"* [17]

என்று சிவஞான போதம் கூறுகிறது.

**உயிர் சதசத்து-சிதசித்து**

உயிர் என்பது தானே அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய பதியும் அன்று; அறிவித்தாலும் அறியமாட்டாத பாசமும் அன்று; அறிவித்தால் அறியும் அறிவுடைய ஓர் இடைநிலைப் பொருளாகும்.

அறிவே வடிவாகிய பதிப்பொருள் 'சித்து' எனப்படும்; அறிவே இல்லாத சடப்பொருள்களாகிய 'பாசங்கள்' 'அசித்து' எனப்படும். இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதால் 'உயிர்' 'சிதசித்து' எனப்படும்.

சித்தாகிய பதி என்றும் ஒரு பெற்றியதாய் இருத்தல்பற்றிச் 'சத்து' என்றும்; அசித்தாகிய பாசங்கள் நிலைமாற்றத்தை அடைதல்பற்றி 'அசித்து' என்றும்; இடைப்பட்ட பொருளாகிய 'உயிர்' 'சதசத்து' என்றும் சொல்லப்படும்.[18] இதனால் பதி 'சூக்குமசித்து' என்றும், உயிர் 'தூல சித்து' என்றும் சொல்லப்படுகின்றன.[19] உயிரின் சதசத்து, சிதசித்தாகும் தன்மையை,

*"நன்றா உரைக்கக்கேள் நல்ல சித்தின்முன் அசித்து இங்கு*
*ஒன்றாது சித்து அசித்தை ஓராது–நின்று இவற்றை*
*அன்றே பகுத்தறிவது ஆன்மாவே என்றுமறை*
*குன்றாமல் ஓதும் குறித்து"* [20]

என உண்மை விளக்கம் விளக்குகிறது.

**சார்ந்ததன் வண்ணமாதல்**

'உயிர்' சதசத்து என்பதற்கு, சத்தும் அன்றாய்; அசத்தும் அன்றாய்; சத்தை நோக்க அசத்தாயும்; அசத்தை நோக்கச் சத்தாயும் நின்று, சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் நிற்பதொரு தன்மையாகும்.

இத்தன்மை உயிரின் தன்னியல்பான 'சார்ந்தன் வண்ணமாதல்' எனப்படும்.

உயிரானது பாசத்தைச் சார்ந்து பாசமாகவும், பதியைச் சார்ந்து பதியேயாயும் நிற்கும். இதற்குப் படிகத்தையும், இருள் வந்த வழி இருளாயும். ஒளி வந்த வழி ஒளியாயும் நிற்கும் கண்ணையும் உவமையாகச் சித்தாந்தம் கூறும்.

*"........... நல்லோர்*
*ஓர்விடத்து உணரும் உண்மை ஒளிதரும் உபலம் போலும்"* [21]

எனச் சிவப்பிரகாசமும்,

*"இருளில் இருளாகி எல்இடத்தில் எல்ஆம்*
*பொருள்கள் இலதோ புவி"* [22]

எனத் திருவருட்பயனும் குறிப்பிடுகின்றன.

**உயிர்களின் பிறவி**

உயிர்கள் உலக போகங்களை அநுபவிக்கவும், தாம் செய்த வினைகளின் காரணமாகக் கொண்டு பிறவி எடுக்கின்றன. வினைகளின் காரணமாகப் பிறப்பெடுத்த உயிர்கள் அவ்வினைப் பயனை அநுபவிக்கும் பொழுதே தாம் செய்யும் செயல்களின் காரணமாக வினைகளைத் தேடிக்கொள்ளும். இதன் காரணமாக உயிர்கள் மீண்டும் பிறக்கும். இவ்வாறு காரண காரியத் தொடர்ச்சியில் உயிர்களுக்குப் பிறவி உண்டாகும்.

கடல் அலை போல் வரும் வினைத் தொடர்பால் மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்புகட்கு உட்பட்டு, உயிர்கள் பிறவி எடுப்பதைப் பிறவிப் பெருங்கடல் [23] என்பர் அறிஞர். [23]

இதனை,

*'வெம்பும் பிறவியலை'* [24]

என நெஞ்சுவிடுதூது குறிக்கும்.

குமரகுருபரரும்,

*"தள்ளும் பவக்கடல் உழக்கும்" (மு.கு.பி.த. அம்புலி.9)*

என்பர்.

'வினைகளின் காரணமாகத் தள்ளப்பட்ட உயிர்கள் பிறவிக் கடலில் விழுந்து வருந்தும்' என்பது கருத்து,

அருணகிரிநாதரும்,

*"எழுகடல் மணலை அளவிடின் அதிகம்*
*எனதிடர் பிறவி"* [25]

என, 'உயிர்களின் பிறவி எண்ணிக்கை எண்ணில் அடங்காது' என்று கூறுகிறார். உயிர்கள் தாம் செய்த இரு வினைகளினால் இவ்வுலகில் இறைவனால் பிறப்பும் இறப்பும் அடைகின்றன என்ற கருத்தைச் சிவஞான போதம்,

*"......... இருவினையில்*
*போக்குவரவு புரிய ஆணையின்"*[26]

எனக் கூறும்.

உயிர்களின் பிறப்பிற்கு உயிர்கள் செய்த இருவினைகளும் (இருவினையில்), சிற்சத்தியும் (ஆணை) காரணங்களாக அமைகின்றன.

இதனை,

*"இருவினை இன்ப துன்பத்து, இவ்வுயிர், பிறந்து இறந்து*
*வருவது போவது ஆகும்."*[27]

என சித்தியாரும் வழிமொழியும்.

**உயிர்கள் உடல்பெறுதல்**

இருவினைகளின் தன்மைக்கு ஏற்ப இறைவன் அருளாலே உயிர்கள் உடலை அடைகின்றன.

*"இருவினையின் தன்மைகளுக்கு ஈடானயாக்கை*
*அண்ணல் அருளால் நண்ணி"* [28]

என்று சிவப்பிரகாசம் கூறுகிறது.

இவ்வாறு பெறும் உடல்கள் 'தூல உடம்புகள்' எனப்படும். ஓர் உடம்பின் நீங்கிய உயிர், மற்றொரு உடம்பைப் பெறுவதற்கு, பாம்பு பழைய தோலை உரித்துக் கழித்துப் புதியதொரு தோலைப் பெறுதலை உவமையாகக் கூறுவர் மெய்கண்டார்.

*'அரவுதன் தோல் உரிவும்'* [29]

என்பது சிவஞான போதம்.

**அச்சுமாறிப்பிறத்தல்**

*"கண்ட நனவைக் கனவுணர்வின் தான்மறந்து*
*விண்படர்ந்து அத்தூடு வினையினால்–கண்செவி கெட்டு*
*உள்ளதே தோற்றம் உளம் அணுவாய்ச் சென்று மனம்*
*தள்ள விழும் கருவில்தான்"*[30]

எனும் சிவஞான போத வெண்பா, உயிர் மற்றொரு பிறப்பிற் செல்லுதலைக் குறிக்கும்.

இதற்கு ஆ.ஆனந்தராசன் தரும் விளக்கவுரை வருமாறு:

"பருவுடம்பு அழியும் போது, நுண்ணுடம்பு சுவர்க்கவுலகிற்கோ நரகவுலகிற்கோ ஏற்ற வேறொரு பருவுடம்பைத் தன்னிடமிருந்து தோற்றுவிக்கும். உயிர் அவ்வேறு உடம்போடு, துறக்கவுலகம், அல்லது நிரயவுலகம் சென்று அங்குள்ள இன்பம் அல்லது துன்பத்தை வினை உள்ள அளவும் நுகரும்.

வினை தீர்ந்த பின் அவ்வுயிர் துறக்கம் அல்லது நிரயத்திற்கு உரிய அவ்வுடம்பு நீங்கி மீண்டும் நுண்ணுடம்பையே வடிவமாகக் கொண்டு நிலவுலகிற்கு வந்து, இனி அநுபவிக்க இருக்கும் வினைக்கு ஏற்ற பிறப்பில் அவா உண்டாகி அப்பிறப்பிற்குரிய கருவிலே சென்று சேரும்.

அவ்வாறு பிறக்கும் பொழுது, தான் முந்திய பிறப்பில் இருந்த நிலையையும், இறந்த முறையையும், அதன்பின் துறக்கம், நிரயம் ஆகிய இடங்களுக்குச் சென்றதையும், அங்கு இன்ப துன்பங்களை நுகர்ந்த அநுபவத்தையும் அறவே மறந்துவிடும். இது விழிப்பு நிலையில் நிகழ்ந்தனவற்றை முற்றிலும் மறந்து கனவு காண்பவனது நிலை போன்றதாகும்".[31]

மூலமாகிய நுண்ணுடம்பு, என்றும் ஒரு தன்மையாய் இருக்க, அதிலிருந்து தோன்றும் பருவுடம்புகளே வெவ்வேறு வடிவினவாய் மாறி அமையும். எனவே, ஒரு பிறப்பில் ஆணாகிய பருவுடம்பைப் பெற்ற உயிர் மற்றொரு பிறப்பில் பெண்ணாகிய பருவுடம்பை மாறிப் பெறுதல் கூடும். அவ்வாறே மக்கட்பிறப்பு எய்தினோர் பறவை, விலங்கு முதலியனவாக மாறிப் பிறத்தலும், பறவை,

விலங்கு முதலியன மக்களாக உயர்பிறவி எய்துதலும் இயலும். இவ்வாறு மாறிப் பிறத்தலை "அச்சு மாறிப் பிறத்தல்" என்பர்.[32] புண்ணியம் செய்த மானிடர்கள், தேவர்களாகி வானுலகத்தில் தேவ வடிவுடனே இருப்பார்கள். செய்த நல்வினைப் பயனை நுகர்ந்து கழித்தபிறகு மீண்டும் அவர்கள் மானிட வடிவிலே இம் மண்ணுலகில் பிறப்பார்கள்.

இதனை, சிவஞானசித்தியார்,

*"நரர்களாய்த் துய்ப்பர் என்னின் நரர்பதி சுரர்உலோகம்;*
*சுரர்களாய்த் துய்ப்பர் என்னின் சொன்ன அச்சு அழியும் ஆகும்*
*சுரர்களாய்ப் பலன்கள் துய்த்துத் தாம் இங்கு தோன்றும்போது*
*நரர்களாய்ப் பிறப்பர் ஞாலத்து அமரராய் நண்ணிடாரே"*[33]

என விளக்கும்.

அந்தந்தப் பிறவிகளுக்கு ஏற்ப யோநியும், அச்சும், அறிவும் மாறும் என்பதை,

*"பகலவன் குலத்தில், தோன்றிப் பார் எலாம் முழுதும் ஆண்டு*
*நிகர்இலா அரசன் ஆகும், சிலந்தி நீடுலகம் போற்றச்*
*சகமதில் எலிதான் அன்றோ மாவலி ஆய்த்துத் தானே"*[34]

எனச் சான்றுகளுடன் சித்தியார் கூறுகிறது.

சிலந்திப்பூச்சி, தான் செய்த நற்செயலால் சூரிய குலத்தில் பேரரசனாகப் பிறந்து கோச்செங்கணான் என்ற பெயர்தாங்கி உலகெலாம் ஆண்டான். எலி ஒன்று திருமறைக் காட்டில் இறைவன் திருமுன்பு எரிந்த திருவிளக்கைத் தன் மூக்கால் தூண்ட அது அடுத்த பிறவியில் மாவலியாய்த் தோன்றி மூவுலகங்களையும் ஆண்டது.

இவ்வரலாறுகளை,

*"சிலந்தியும் ஆனைக் காவில்*
*திருநிழல் பந்தர் செய்து*
*உலந்தவண் இறந்த போதே*
*கோச்செங் கணானும் ஆகக்*

*கலந்தநீர்க் காவிரி சூழ்*
*சோணாட்டுச் சோழர்தங்கள்*
*குலந்தனிற் பிறப்பித் திட்டார்*
*குறுக்கை விரட்டனாரே"*[35]

*"நிறைமறைக் காடு தன்னில்*
*நீண்டெரி தீபந்தன்னைக்*
*கறைநிறத்து எலிதன் மூக்குச்*
*சுட்டிட கனன்று தூண்ட*
*நிறைகடல் மண்ணும் விண்ணும்*
*நீண்ட வான் உலகம் எல்லாம்*
*குறைவறக் கொடுப்பர் போலும்*
*குறுக்கைவீ ரட்ட னாரே"*[36]

எனத் திருநாவுக்கரசர் அருளிச் செய்வர்.

முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழில், குமரகுருபரர் கூறுவது வருமாறு:

*"சமரிற்பட்டவர் வெட்டிய பூதத்*
*தலைவர்கள் நிற்பமுதல்*
*தாமரை நாயகன் வயிறு கிழித்துத்*
*தந்தொழில் தலைநின்றாங்கு*
*அமரிற் குரிய மடக்கொடி யாரை*
*அலைத்தனர் பற்றியெயிற்று*
*அவுண ரெனத்தமை உணரார் கணவர்கள்*
*ஆர்ப்பில் வெடித்தபெருங்*
*கமாற் குருதி பலத்தை நிரப்பிடு*
*களமெதிர் கண்டினியக்*
*காரவு ணக்கடல் சூரொடு மாளக்*
*கடிதின் தடிதி யடல்*
*குமரக் கடவு ளெனப்பணி வேலவ*
*கொட்டுக சப்பாணி*
*கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்*
*கொட்டுக சப்பாணி"* *(மு.கு.பி.த. சப்பாணி.7)*

“போர்க்களத்தில் பூதத் தலைவர்களால் வெட்டப்பட்ட அசுரர்கள் தேவர்களாய் வீர சொர்க்கம் புகுந்து, தெய்வமகளிரைப் பற்றி, தாங்கள் அசுரர்கள் என்பதை அறியாதவர்களாகிப் போர்க்களத்தை எதிர்கண்டு, சூரனுடன் மாண்டொழியும்படி ‘அசுரர் கூட்டத்தை அழிப்பாயாக’ என்று முருகப் பெருமானை வேண்டுவர்” என்பது கருத்து.

“அசுரர்கள், சொர்க்கத்தில் தேவர்களாகப் பிறந்தது” என்பது ‘உயிர்கள் அச்சுமாறிப் பிறத்தலை’யும்; “அசுரர்கள் தாங்கள் அசுரர்கள் என்பதை அறியாதவர்களாகி இருந்தனர்” என்பது ‘முற்பிறப்பை மறத்தலை’யும்; “இப்பிறப்பில் தேவர்களானதால் அசுரர்களை அழிக்க வேண்டினர்” என்பது ‘பிறப்பிற்கு ஏற்றவாறு வினையாற்றுதலை’யும் குறித்துக் கூறப்பட்டன.

**மூவகை உயிர்கள்**

“அளவற்ற உயிர்கள் பலவும், மூன்றுவகையினவாய் உள்ளன” என்பது சித்தாந்தம்.

உயிர்களுள், ‘ஆணவம், கன்மம், மாயை’ ஆகிய மூன்று மலங்களும் உடைய உயிர்கள் ‘சகலர்’ என்றும், ‘ஆணவம்’, ‘கன்மம்’ எனும் இரண்டுமட்டுமே உடைய உயிர்கள் ‘பிரளயாகலர்’ என்றும்; ‘ஆணவம்’ ஒன்றும் மட்டுமே உடைய உயிர்கள் ‘விஞ்ஞானகலர்’ என்றும் – இவ்வாறு உயிர்கள் பல நிலைகளை அடைவன. மலத் தொடர்பாதலின் மேற்சொன்னவையெல்லாம் அவற்றின் ‘பொதுவியல்வு’ ஆகும்.[37]

**உயிர்களின் அவத்தைகள்**

சைவ சித்தாந்தத்தில் உயிர்கள் இறைவனை அடைவதற்குரிய நிலைகள் ‘அவத்தைகள்’ எனப்படுகின்றன. அவை, ஐந்தவத்தைகள் ஆகும்.[38] அவத்தைகள் இருவகையாகப் பிரிக்கப்பட்டுக் காரண அவத்தை, காரிய அவத்தை எனப்படும். காரண அவத்தை ‘கேவலம், சகலம், சுத்தம்’ எனப்படும். காரிய அவத்தை, ‘நனவு’, ‘கனவு’, ‘உறக்கம்’, ‘பேருறக்கம்’, ‘உயிர்ப்படங்கல்’ எனப்படும்.

'கேவலம்' என்பது உயிர்களின் பிறப்பிற்கு முந்தின நிலையாகும். 'சகலம்' என்பது கருவி கரணங்களோடு கூடிய பிறப்பெடுத்த நிலையாகும். 'சுத்தம்' என்பது உயிர்கள் இறைவனோடு கூடிய நிலையாகும்.[39]

**உயிர்களின் நிலைகள்**

உயிர்களின் நிலைகளை இரண்டு வகையாகவும் கூறுவதுண்டு. அவை, 'பெத்தநிலை, முத்திநிலை' எனப்படும். இவ்விரு நிலைகளும் 'பந்தம், வீடு' என்ற சொற்களால் சிவஞான சித்தியாரில் குறிப்பிடப்படுகின்றன. [40] பெத்த (கட்டு) நிலையில் ஒளித்து நின்றும் முத்தி (வீட்டு) நிலையில் வெளிப்பட்டுத் தோன்றியும் இறைவன் அருள்புரிவான் [41]

**உயிர்கள் ஞானம் பெறுதல்**

இறைவன் உயிர்களுக்கு ஞானத்தை மூன்று வகையில் உணர்த்துவான்.

ஒரு மலமுடைய 'விஞ்ஞானகலர்' உயிர்களுக்கு அருள்பாலிக்கும்போது இறைவன் உயிர்க்கு உயிராய் உள்நின்று உணர்த்துவான். இது தன்மையில் உணர்த்துவது.

இரு மலமுடைய 'பிரளயாகலர்' உயிர்களுக்கு அருள்புரியும்போது இறைவன் முக்கண்ணும், மணிமிடறும், மான்மழுவும் கூடிய தன் திருவடிவோடும் முன்னிலையில் உணர்த்துவான்.

மும்மலமுடைய 'சகலருக்கு' மானுட வடிவம் தாங்கிக் குருவாக எழுந்தருளி வந்து அருளுவான்.[42]

இதனைப் 'போற்றிப் பஃறொடை'

*"................................................ முத்திதரு*
*நன்னெறி விஞ்ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும்*
*அந்நிலையே உள்நின்று அறுத்தருளி பின் அன்பு*
*மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்*
*தேவாய் மலகன்மம் தீர்த்தருளி–பூவலயம்*
*தன்னின்று நீங்காச் சகலர்க்கு அவர்போல*
*முன்நின்று மும்மலம் தீர்த்து ஆட்கொள்கை "[43]*

என விளக்கிக் காட்டும்.

உள்ளக் கருத்தால் வேறொன்றை உண்மைப் பொருள் என்று எண்ணவும், தம் அறிவில் உள்ள தெய்வமானது முற்றுவிக்க அதாவது உயிருக்கு உயிராய் உள் நின்று உணர்த்த வீடுபேறு கிடைத்தது எனும் பொருளில், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில், பின்வரும் பாடல் மூலமாக, இறைவன் உயிர்களுக்கு உள்நின்று உணர்த்தும் தன்மையினைக் குமரகுருபரர் குறிப்பிடுகிறார்:–

*"உள்ளக் கருத்தால் பிறிதொன்றை*
*உண்மைப் பொருளென் றுள்ளவும்தம்*
*உணர்வில் தெய்வம் கடைக் கூட்ட*
*உறுதி கிடைத்த படி ......" (மு.கு.பி.த. வருகை.7)*

**இவ்வியல் வாயிலாக அறியத்தகும் முடிபுகள்**

1. சைவ சித்தாந்தத்தில் சொல்லப்படும் 'பசு' எனப்படும் 'ஆன்மா' வின் இலக்கணமும், அஃது எவ்வாறு பிள்ளைத் தமிழில் சொல்லப்பட்டுள்ளது என்பதும் விரிவாகச் சுட்டப்படுகின்றன.
2. குமரகுருபரர் உயிரையும், உயிரின் இயல்பையும் தம் பாடல்வழி நின்று உணர்த்துகிறார். அவ்வாறே, உயிர்கள் பல என்பதையும் நுட்பமாகக் குறிப்பிடுகின்றார்.
3. வினைகளின் காரணமாக உயிர்கள் உடலைப் பெறுகின்றன. உயிர்கள் அச்சுமாறிப் பிறக்கும் என்பதைக் குமரகுருபரர் எடுத்துக் காட்டுகிறார்.
4. உயிர்கள், சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என மூவகைப்படும். அவை, பெத்தநிலை, முத்திநிலை என இருவகையாலும் இயம்பப்படும். இம்மூவகை உயிர்களுக்கு ஏற்றவாறு இறைவன் ஞானத்தை வழங்குகின்றான்.
5. இறைவன் உயிர்களுக்கு உள்நின்று உணர்த்தும் தன்மையைக் குமரகுருபரர் தம் பிள்ளைத் தமிழில் குறிப்பிடுகின்றார்.

**அடிக்குறிப்புகள்**

1. சிவஞான சித்தியார் சுபக்கம் 210:4.
2. (அ) சி.சு. மணி, (உ.ஆ)., சிவஞான சித்தியார் சுபக்கம். ப.107.
   (ஆ) மு. திருவிளங்கம், (உ .ஆ)., சிவஞான சித்தியார் சுபக்கம், ப. 334.
3. ந. சுப்புரெட்டியார், தாயுமானவர், ப. 87.
4. சிவஞானபோதம், சூத்.3.
5. சிவஞான போதம், சூத்.4:1.
6. பொ. முத்தையாபிள்ளை, சிவஞான போதச் சிற்றுரை விளக்கம், பக். 153, 201.
7. (அ) சிவஞான போதம், சூத். 4:2,3.
   (ஆ) ஆ. ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, ப.103.
8. சிவஞானசித்தியார், 235:4.
9. க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', சைவமும் வைணவமும், ப.63.
10. மாணிக்க வாசகர், சிவபுராணம், 5.
11. திருவருட்பயன், 11.
12. ச.சாம்பசிவனார், சுந்தரர் தேவாரத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், (ஆய்வேடு)., ப.64.
13. ந. சுப்புரெட்டியார், மு.கா.நூல், ப.97.
14. திருக்களிற்றுப்படியார், 43.
15. சிவஞானபோதம், சூத்.1. உதாரண வெண்பா, 5.
16. சிவஞானசித்தியார், சுபக்கம். 233.
17. சிவஞானபோதம், சூத்.11:1,2
18. ச. சாம்பசிவனார், மு.கா.நூல் (ஆய்வேடு), பக். 60,61.
19. சி. அருணைவடிவேலு முதலியார், முப்பொருள் இயல்பு, ப.54.
20. உண்மைவிளக்கம், 24.

21. சிவப்பிரகாசம், 59:3,4.
22. திருவருட்பயன், 18.
23. திருக்குறள், 10.
24. நெஞ்சுவிடு தூது, 262.
25. திருப்புகழ், சிதம்பரம், பா. எண்.600:1.
26. சிவஞானபோதம், சூத்.2:1,2.
27. சிவஞான சித்தியார் சுபக்கம்.94:1,2.
28. சிவப்பிரகாசம், 19:1,2.
29. சிவஞானபோதம், சூத்.2. உதாரண வெண்பா,14.
30. மேலது, உதாரண வெண்பா,13.
31. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.72.
32. மேலது, ப.73.
33. சிவஞானசித்தியார் சுபக்கம், 132.
34. மேலது, 134:2,3,4.
35. திருநாவுக்கரசர், திருக்குறுக்கை வீரட்டம், பா.எண்.4.
36. மேலது, பா.எண்.8.
37. ச. சாம்பசிவனார், திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், பக். 66,67.
38. சிவஞான போதம், சூத். 4:3.
39. சிவஞான சித்தியார், சுபக்கம். 227.
40. கோமதி சூரியமூர்த்தி, திருஞானசம்பந்தர் தேவாரமும் சைவசித்தாந்தக் கருத்துக்களும், பக்.162, 163.
41. சி.சு. மணி (உ.ஆ)., மெய்கண்ட நூல்களுள் ஏழு, ப.40.
42. மேலது, ப.73.
43. போற்றிப் பஃறொடை, 118–124.

## 5.3 பாச இயல் கருத்துக்கள்

**முன்னுரை**

*"மறைகள் ஆகமத்துறைகள் மற்று எவையும்*

*நாசமில் பதிபசு பாசம் என்று உரைத்தல்"*[1]

என்பது சங்கற்ப நிராகரணம்.

சைவ சித்தாந்தம் கூறும் அழியாத பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் என்பன. அவை "திரிபதார்த்தம்" என்றும் சொல்லப்படும்.[2] இம் மூன்றையும் ஏற்றுக் கொள்ளும் அடிப்படையிலேயே சைவசித்தாந்தத் தத்துவமும் அமைந்துள்ளது என்பர் அறிஞர்.[3]

இம்மூன்றும் "முடிநிலை உண்மைப் பொருள்கள்" (Ultimate Realities). தோற்றம், ஈறுஇன்றி என்றும் உள்ள பொருள்கள்.[4]

இம்முப்பொருள்களில் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் குமரகுருபர அடிகள் கூறும் "பாசம்" பற்றிய கருத்துக்கள் இவண் ஒரு சிறிது ஆராயப்படுகின்றன.

**பாசம் - ஒரு விளக்கம்**

'பாசம்' என்பதற்குப் பல பொருள்கள் உண்டு. அவை, "கயிறு, கட்டுவது, தளை" முதலாயின. "பாசம்", 'தளை' என்று குறிக்கப்படுவதால், இஃது உயிர்களைச் செயற்படவொட்டாது அடக்கி வைத்திருப்பது என்பது தெளிவாகும்!"[5]

*"ஆசா நிகளம் துகளா யினபின்*

*பேசா அனுபூ திபிறந் ததுவே"*[6]

என்பர் அருணகிரிநாதர்.

"நிகளம்" என்பது இங்குப் பாசத்தைக் குறிக்கும். பாசத்தைத் "தடை" என்று கூறுவதும் உண்டு.

*"சத்திதன் வடிவே தென்னில்*
*தடையிலா ஞானமாகும்"*[7]

என்பது சிவஞான சித்தியார்.

ஒரு நன்மையை அடைய முடியாதவாறு எவையெலாம் செயற்படுகின்றனவோ அவற்றைத் 'தடை' என்று கொள்ளலாம்.

**மும்மலங்கள்**

சைவசித்தாந்தம் கூறும் மலங்கள் மூன்று. அவை, 'ஆணவம், கன்மம், மாயை' ஆகும். இம்மூன்றும் அநாதியாகவேயுள்ளன. நெல்லில் உமியும், செம்பிற்களிம்பும் ஆகிய குற்றங்கள் அவை உள்ள அன்றே உள்ளன. அவை போலவே, இம்மூன்று மலங்களும் உள்ளன.

இதைச் சிவஞானபோதம்,

*". . . . . . . வல்லி*
*மலகன்மம் அன்றுளவாம்"*[8]

என்று கூறும்.

'பதி' என்பது ஒன்றே. அது 'சத்து' என்று சொல்லப்படும். ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றும் 'அசத்து' என்று சொல்லப்படும். மாற்றம் இல்லாதது 'சத்து'; மாற்றத்திற்கு உட்படுவது 'அசத்து'; மும்மலங்களும் மாற்றத்திற்கு உட்படுவன ஆதலின் 'அசத்து' எனப்படும். இது குறித்து ஆ. ஆனந்தராசன் கூறுவது வருமாறு:

"ஆணவ மலமானது, உயிர்களைப் பலவாறு பிணித்து நின்று, பின்னர் சத்தி தேய்ந்து தேய்ந்து மங்கி நிற்கும். 'கன்மமலம்', உயிர்களைச் சார்ந்து நின்று, இன்ப துன்பங்களைத் தந்து, பின்னர் நீங்குவதாகும். 'மாயாமலம்' தனுகரண புவன போகங்களைத் தன்னிடமிருந்து தோற்றுவித்தும், பின்னர் ஒடுக்கியும் இவ்வாறு காரியப்பட்டு, நிலைமாற்றம் அடையும்.[9] எனவே இம்மூன்று மலங்களும் 'அசத்து' என்று கொள்ளப்படும். எது நிலைமாற்றம் உடையதோ, அஃது 'அசத்து' என்பதே அசத்துக்குரிய சித்தாந்த வரையறையாகும்"

**பஞ்ச மலங்கள்**

மலங்கள் மூன்றுடன் மேலும் இரண்டையும் சேர்த்து மலங்கள் ஐந்து என்று கூறுவதும் உண்டு. அவை, ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம். இவை குறித்து, சி. அருணை வடிவேலு முதலியார் கூறுவதாவது:

"ஆணவ மலத்தின் காரணநிலை, காரிய நிலைகளில் வேறுபாடு மிக இல்லை! அதனால் அஃது ஒன்றாகவே எண்ணப்படும். 'கன்மம்' காரண நிலையில் 'மூலகன்மம்' எனப்படும். அஃது உயிர்களைத் தாக்குதல் இல்லை. காரிய கன்மமே, 'நல்வினை, தீவினை' என இரண்டாக நிகழ்ந்து, உயிர்களைத் தாக்கும். அதனால் காரிய கன்மமே, 'கன்மமலம்' எனப்படுகின்றது. 'மாயை' காரண நிலையில் இருந்தாலும், சிறப்பாக எண்ணப்படுகிறது. அதனால் காரண மாயையே 'மாயை' என்றும்; காரிய மாயை, 'மாயேயம்' என்றும் சொல்லப்படுகின்றன. இறைவனது சக்தி பாசத்தை செயற்படுத்துகின்ற நிலையில், 'திரோதான சத்தி' எனப்படும். இது பாசத்தை நடத்துதலால், ஒரு மலமாக உபசரித்துக் கூறப்படும். எனவே, 'ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம்' என மலங்கள் ஐந்து என்பர். இவை 'பஞ்சமலங்கள்' எனப்படும். இவை விரித்துக் கூறப்படுவனவல்லது, உண்மையில் 'ஆணவம், கன்மம், மாயை', என மலங்கள் மூன்றே ஆகும்!"[10]

இக்கருத்துக்களை உள்ளடக்கிய சிவஞான சித்தியார் பாடல்கள் வருமாறு:

*"மும்மல நெல்லினுக்கு முளையொடு தவிடு மிபபோல்*
*மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று*
*பொய்மைசெய் போகபந்த போத்திருத் துவங்க பண்ணும்*
*இம்மல மூன்றி னோடு மிருமல மிசைப்ப னின்னும்!"*[11]

*"மாயையின் காரியத்தை மாயேய மலமதென்றும்*
*ஏயும் மும்மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்*
*தூயவன்றனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்*
*ஆயவிரிம் மலங்க ளைந்து மணுக்களை யணைந்து நிற்கும்!"*[12]

திருமந்திரத்தில்,

*"ஆணவமும் மாயையும் கன்மமும் மும்மலம்*
*காணும் முளைக்குத் தவிடுமி ஆன்மாவும்*
*தாணுவை ஒவ்வாமல் தண்டுலமாய் நிற்கும்*
*பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்துமே!"* [13அ]

*"சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்*
*அவமாகார் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்"* [13ஆ]

எனவரும் பாடல்களும்,

திருவாசகத்தில்,

*"மலங்களைந் தாற்சுழல் வன்றயி*
*ரிற்பொரு மத்துறவே"* [14]

எனவரும் பாடலும் இவண் ஒப்புநோக்கத்தகும். மலங்கள் ஐந்தைப் 'பஞ்சமலம்' என்கின்றார் குமரகுருபரர்.

*". . . . . . பஞ்சமலம்*
*காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும்"* [15]

ஐந்து மலங்களையும் வகைப்படுத்தி அதன் இயல்புகளைக் கூற வந்த சிவப்பிரகாசம், "இந்த ஐந்து மலங்களும் நீங்காவிட்டால் அருள் என்பது அரிது" என்கிறது.

*"மோகம்மிக உயிர்கள் தொறும் உடனாய் நிற்கும்*
*மூலஆணவம் ஒன்று முயங்கி நின்று*
*பாகம்மிக உதவுதிரோ தாயி ஒன்று*
*பகர்மாயை ஒன்றுபடர் கன்மம் ஒன்று*
*தேகம்உறு கரணமொடு புவனபோகச்*
*செயல்ஆரும் மாமாயை திரட்சி ஒன்று என்று*
*ஆகமலம் ஐந்து என்பர் ஐந்தும் மாறாது*
*அருளென்பது அரிது என்பர் அறிந்து ளோரே"* [16]

**ஆணவம்**

**ஆணவம் பெயர்க்காரணம்**

*"கடவுளை அடுத்துப் பெரும்பொருளாய் நிற்கும்*
*ஆன்மாவைத் தனது சக்தியால் சிறுமைப்படுத்தி நிற்றல்*
*காரணமாகவே இ∴து 'ஆணவம்' எனப்பெயர் பெற்றது.*
*ஆணவம் அணுத்தன்மையைத் தருவது"*[17]

என்று கூறுகிறார் சி. அருணை வடிவேலு முதலியார். உயிரை அணுத்தன்மைப்படுத்துதல். அதாவது சிற்றறிவும் சிறு தொழிலு முடையதாக்குதல். அணு – சிறுமை. இத்தன்மை குறித்து, ச. கங்காதரன் தரும் ஒரு விளக்கம் வருமாறு:

"இயற்கையில் விரிவுடையதாகிய உயிரின் அறிவை மிகச் சுருங்கியதாகச் செய்வது ஆணவமலம் என்பது அறியப்படும். ஆகவே, அணுக்கள் என்று பெயர்பெறும் வகையில் ஆன்மாக்கள் மிகச் சிறியனவாய் நிற்றல் ஆணவத்தின் சேர்க்கையால் என்பது விளங்கும்".[18]

**மூலமலம்**

ஆணவமே உயிருக்கு நேர்எதிர்ப்பகையாக உள்ளது. இதனைப் 'பிரதிபந்தம்' என்றும் ஏனைய மலங்கட்கு இதுவே மூலம் ஆதலின், 'மூலமலம்' என்றும், உயிரோடு ஒன்றி இருத்தலின் 'சகசமலம்' என்றும் குறிக்கப்படும்.

**மறைக்கும் சக்தி**

உயிரின் அறிவு, செயல், விழைவு ஆற்றல்களைக் கெடுத்து நற்சிந்தனை நிகழவிடாது தடுக்கும் ஆணவம் ஒன்றேயாயினும் அதன் சக்தி அளப்பரியது. அவற்றால் அஃது அளவற்ற உயிர்களை மறைத்து நிற்கின்றது. தோற்றமில் காலந்தொட்டே உயிர்களுடன் அநாதியாய் இயைந்து நிற்கும். இக்கருத்தை விளக்கும் சிவஞான சித்தியார் பாடல் வருமாறு:–

*"ஒன்றதாய் அநேகசத்தி உடையதாய் உடனாய் ஆதி*
*அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு தொழிலை ஆர்த்து*
*நின்று போத்திருத்து வத்தை நிகழ்த்தி செம்பினில்களிம்பு ஏய்ந்து*
*என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே"*[19]

இவ் 'ஆணவ மலம்' பற்றி

"பகலவன் ஒருபொருளே ஆயினும் எண்ணற்ற கதிர்களைக் கொண்டு, எண்ணற்ற பொருள்களை விளக்குகின்றான். இது, 'விளக்கும் சக்தி'. இதைப் போலவே இருளும் ஒன்றாய் இருந்தே எண்ணிலாச் சக்திகளைக் கொண்டு, எண்ணில்லாத கண்களை மறைக்கின்றது. இது, 'மறைக்கும் சக்தி!'. இவ்வாறே ஆணவமலமும் எண்ணற்ற மறைத்தல் ்க்திகளையுடையதால், எண்ணற்ற ஆன்மாக்களை மறைக்கின்றது!"[20]

என்கின்றார் ச. சாம்பசிவனார்.

**ஆணவம் - இரு இயல்புகள்**

ஆணவம் இரு நிலைகளில் நின்று உயிருக்கு இடர் செய்கின்றது. தானாகத் தனித்து நின்று இடர் செய்வது ஒரு நிலை. 'மாயை', 'கன்மம்' ஆகியவற்றின் சேர்க்கையோடு இடர் செய்வது இன்னொரு நிலை.

மாயை கன்மங்களோடு உயிர்கூடாதபோது ஆணவம், உயிரறிவை முழுவதுமாக மறைத்து நிற்கும். அவ்வாறு மறைத்து நிற்றலே ஆணவத்தின் உண்மையியல்பு எனப்படும் சொரூபலக்கணம்.[21] இவ்வாறு தனிநிலையில் 'அறிவை மறைப்பது' என்னும் மறைத்தலைச் செய்யும்பொழுது அதனது சக்தி 'ஆவாரக சக்தி' எனப்படும்.

மாயை கன்மங்களோடு கூடிய போது, ஆணவம் உயிரின் அறிவைத் திரிவுபடுத்தும்; அஃதாவது அற்பமான பொருளை உயர்ந்த பொருளாகவும்; நில்லாத பொருளை நிலைத்த பொருளாகவும்; மதிக்கும்படி அறிவை வேறுபடுத்தி நிற்கும். ஒன்றை மற்றொன்றாக மாறி உணர்வது விபரீத அறிவு. இவ்வாறு மாறி உணர்தலாகிய திரிபுணர்ச்சியை – விபரீத அறிவை உண்டாக்குவது ஆணவத்தின் பொது இயல்பு எனப்படும் தடத்தலக்கணம்.[22]

இவ்வாறு பிறமலங்களோடு கூடிய பொது நிலையில் பொருள் இயல்பைத் தவறாக உணரச் செய்கின்ற 'உணர்வை மறைப்பது' என்னும் மறைத்தலைச் செய்யும் பொழுது அதனது சக்தி 'அதோ நியாமிகா சக்தி' என்று சொல்லப்படும். "எந்நிலையிலும் ஆணவம் அறியாமையை விளைவிப்பதாகவே

இருத்தல் அறியத்தக்கது."[23] இவ்விரு சக்தியாலும், இவ்ஆணவமலம், உயிர்களுக்குச் செய்துவரும் கொடுமைகள் பலவாம். இதனாலேயே அருணந்தி சிவாசாரியாரும் 'பொல்லாத ஆணவம்' என்றார்.[24]

**ஆணவ மறைப்பின் வகைகள்**

"ஆணவத்தின் சக்திகள் பல்வேறு வகைப்பட்ட கால எல்லைகளை உடையனவாதல் போலப் பல்வேறு வகைப்பட்ட வன்மை மென்மைகளையும் உடையனவாம். அவ்வகைகளைத் தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என்று மூன்றாகக் கூறுவர். இவையே உயிர்கள் மூவகைப்பட்டு நிற்றற்குக் காரணமாகும். ஆணவ பந்தம் தூலமாய் உள்ள உயிர்கள் 'சகலர்' என்றும், சூக்குமமாய் உள்ள உயிர்கள் 'பிரளயாகலர்' என்றும், அதிசூக்குமமாய் உள்ள உயிர்கள் 'விஞ்ஞானகலர்' என்றும் சொல்லப்படுகின்றன. ஆணவபந்தத்திற்கு ஏற்பவே மற்றைய மலபந்தங்கள் இருக்கும். ஆகையால், சகலர் மும்மலமும், பிரளயாகலர் மாயை தவிர இருமலமும், விஞ்ஞானகலர் ஆணவம் என்னும் ஒரு மலமும் உடையவராகின்றனர் என்க. எனவே இந்த ஆணவத்தினால் தான் விளைகின்ற விவகாரங்கள் எல்லாம்"[25].

**அறிவிற்குத் தடையாக ஆணவம்**

உயிர்கள் தாம் நினைத்த வண்ணம் செயலாற்ற முடியாமைக்குப் பல்வேறு தடைகள் உள்ளன. அவை 'வினைத்தடை' எனப்படும்.

*"எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை*
*வீயாது பின் சென்(று) அடும்"*[26]

என்பது வள்ளுவர் வாக்கு.

இவ்வினைத் தடைக்கு முதலாய் உள்ளது அறிவின் தடையாகும். அதாவது, அறிவும் வினைக்கேற்றபடி தீர்ந்து விடும் என்பதாகும். அறிவுக்குத் தடையாய் உள்ளது அறியாமை. இந்த அறியாமை என்பதே ஆணவம். இந்த ஆணவமலமான குற்றத்தை நீக்குவதற்காகவே இறைவன் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தான்.

*"தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்"*[27]

என்பது சிவஞானபோதம்.

இறைவன், உயிருக்கு உடம்பையும், பிறகருவிகளையும் கொடுக்கிறான். இது அவனது கருணையைக் காட்டும்.

**ஆணவம் - இருள்**

அறியாமையாகிய. ஆணவத்திற்குரிய பல்வேறு பெயர்களில் 'இருள்' என்பதும் ஒன்று.

*". . . . . . . . . . . . . . . . . . . ஞானத்தின்*
*கண்ணை மறைத்த கடிய தொழிலாணவத்தால்"*[28]

என்பது போற்றிப் பஃறொடை. உயிர்கள் திருவருளை உணராவண்ணம் ஆணவம் மறைக்கிறது. ஆணவத்தின் இந்த மறைத்தல் சக்தி காரணமாகவே அஃது 'இருள்' எனப்படுகின்றது.[29] இருள்தன்மை யாது எனில், பொருள்களையும் அவற்றின் தன்மைகளையும் தோன்ற ஒட்டாதபடி, அவை யாவும் தானே எனத் தோன்றும்படி மறைத்துக் காட்டுவது ஆகும். இதனைப் 'புறஇருள்' என்பர். இவ்வாறே முப்பொருளாகிய இறை, உயிர், உலகம் ஆகியவற்றை அறிய முடியாதவாறு மறைத்து நிற்பது 'ஆணவமலம்'. இதனை 'அகஇருள்' என்பர். இந்த 'அகஇருளின்' தன்மையை

*"இருளான தன்றி இலது எவையும் ஏகப்*
*பொருளாகி நிற்கும் பொருள்"*[30]

என்று 'திருவருட்பயன்' கூறும். இதனை விளக்க வந்த ஆ. ஆனந்தராசன்,

"புற இருளைப் போல இறை, உயிர், உலகம் ஆகியவற்றின் தன்மையைத் தெரிய வொட்டாதபடி உயிரறிவை மறைத்து நிற்கின்ற அகவிருள் உண்டு. அதுவே 'ஆணவம்' எனப்படுகிறது. அது பிறவித்துன்பத்தை மறைத்து அதை இன்பமாகக் காட்டி அதன்மீது ஆசைகொள்ளும்படி செய்யும். அழியாத வீட்டின்பத்தை மறைத்து அதைப் பெறுவதற்குரிய வழியிற் செல்லவிடாது தடுக்கும்"[31] என்று கூறுகிறார்.

“ஒரு விதத்தில் ஆணவம் இருளைவிடக் கொடியது. இருள் தன்னிடத்தில் உள்ள பொருளை மறைக்கும்; தன்னை மறைக்காது. ஆனால், தன் செயலை மறைப்பது மட்டுமன்றித் தன்னையும் மறைத்துக் கொள்ளும். இருளில் மறைந்து கிடக்கும் பொருள்கள் நம் கண்ணுக்குப் புலனாகாவிடினும், அவற்றை மறைத்துக் கொண்டிருக்கும் இருளாவது நமக்குப் புலனாகும். ஆணவம், நம் அறிவை மறைக்கின்றது. அதே சமயம் தன்னையும் மறைத்துத் தன் செயலையும் மறைக்கின்றது. இருள் வெளிப்பட்டுத் தன்னை காட்டிக் கொண்டே தனது தொழிலைப் புரிகிறது. ஆனால் ஆணவம் வெளிப்படாமல் தன்னை மறைத்துக் கொண்டே தனது தொழிலைச் செய்கிறது.”[32]

*“ஒரு பொருளும் காட்டாது இருள் உருவம் காட்டும்*
*இருபொருளும் காட்டாது இது”*[33]

என்பது திருவருட்பயன்.

*“இருள் ஒளிர இருண்ட மோகமாய்”*[34]

என்பது ‘சிவப்பிரகாசம்’. இவ்வாறு, ஆணவ இருள்பற்றி உமாபதி சிவம் கூறுவதை எடுத்துக்காட்டி,

“ஆணவ மலத்தின் இயல்பை உமாபதிசிவம் போல் எடுத்துக் காட்டியவர்கள் வேறு யாருமில்லை. உலகில் இருளைவிட இருண்ட பொருள் உண்டா? உண்டு. உயிர்களிடத்தில் அஞ்ஞானமாகிய மயக்கத்தைச் செய்கின்ற ஆணவமலம் அப்படிப்பட்ட பொருள். அதன் முன்னால் உலகத்து இருளும் ஒளி என்னும் சொல்லும்படி ஆகிவிடும் என்றால் அந்த ஆணவமலம் எவ்வளவு இருண்டதாக இருக்க வேண்டும்”[35]

என ஆ. ஆனந்தராசன் விளக்கம் தருகிறார்.

உமாபதிசிவம் ஆணவத்தின் தன்மையை விளக்கும் முகமாக “இருள்மலநிலை” என்றே ஓர் அதிகாரம் வகுத்து,

*“பலரைப் புணர்ந்துமிருட் பாவைக் குண்டெனினும்*
*கணவர்க்குத் தோன்றாத கற்பு”*

என ஆணவத்தின் இயல்பைக் கடுமையாகச் சாடுகிறார்.[36]

இத்தகைய அறியாமை எனும் அக இருளாகிய ஆணவத்தை முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் குறிப்பிடுகின்றார்.

முருகனை மரகத ஒளியாகவும், ஞாயிற்றின் ஒளியாகவும், விளக்கின் ஒளியாகவும் கூற வந்த குமரகுருபர அடிகள், உள்ளம் உருகுகின்ற அடியார்களின் ஆணவம் என்ற அறியாமை இருள் நீங்கும்படி ஒளிவிடும் முழு மாணிக்கமணியே என்ற பொருள்பட,

*"உண்ணெகிழ் தொண்ட ருளத்திருள் சிந்திட*
*ஒளிவிடு முழு மணியே"* *(மு.கு.பி.த. தால.8)*

என்று கூறுகிறார்.

சிறுபறைப் பருவத்தில் மெய்க்குச் சலநிதியாகவும், மூக்கிற்குப் புதுமணமாகவும், வாய்க்குச் சுவையமுதாகவும், செவிக்கு மறை ஒலியாகவும், விழிக்குக் குலமணியாகவும் குமரன் சிறுபறை முழக்குவதாகக் கூறி

*"இதய இருட்டற வுணர்விலுதித்திடு சுடரொளியே"*
*(மு.கு.பி.த. சிறுபறை.10)*

என்கின்றார்.

இங்கே 'இதயஇருள்' என்பது ஆணவம். அதனை, நீக்குபவன் முருகன். எனவே 'இதய இருளை நீக்கும் சுடரொளியே' என்கின்றார் என்பதாம்.

திருநாவுக்கரசர் ஆணவமலத்தினை "இருள்" என்றே கூறுகிறார்.

*"இருளாய உள்ளத்தின் இருளை நீக்கி"*[37]

என்பது அவர் வாக்கு.

*"இருளாய ஆணவ மலத்தால்*
*மறைத்திடப் பட்டு . . . ."*[38]

என்று சிவஞான தத்துவ தீபமும் கூறுகிறது.

"ஊனத்திருள்" என்ற திருஞான சம்பந்தர் பாடல் தொடரில் இருளாகிய ஆணவம் 'ஊனம்' என்ற அடைமொழி சேர்த்துக் கூறப்படுகின்றது.[39] உயிரினிடத்தில் ஆணவம் மட்டுமே கலந்துள்ளது என எண்ணிவிடலாகாது.

உயிரினோடு உள்ளொளியாகிய இறைவன் இடையறக் கலந்து நிற்கின்றான். ஆனால், ஆணவமாகிய இருள் இறைவனுக்கு மட்டுமே அடங்கிக் கீழ்ப்பட்டுக் கிடக்கிறது. எனினும், அஃது உயிரைவிட்டு நீங்காமலே உள்ளது.

*"அன்று அளவி உள்ளொளியோடு ஆவியிடை அடங்கி*
*இன்று அளவும் நின்றது இருள்"*[40]

என்பது திருவருட் பயன்.

"உயிரினிடத்தில் ஒளியாகிய இறைவனும் இருக்கிறான். இருளாகிய ஆணவமலமும் இருக்கிறது. இரண்டிற்கும் இடம் உயிர்தான். ஆயின், அகவொளியாகிய இறைவன்முன் அக இருளாகிய ஆணவம் என்றும் கீழ்ப்பட்டதாய் அடங்கியே நிற்கும்".[41]

இக்கருத்தை,

ஆணவம் – இருள். ஒளி – சிவஞானப் பேரொளி. ஆணவ இருள், ஒளியை அடர்ந்து எழுகின்ற ஆற்றலை உடையதன்று.

*"ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் ஒன்று மேலிடில் ஒன்று*
*ஒளிக்கும் எனினும் இருள் அடராது"*[42]

எனக் கொடிக்கவியும் சுட்டும்.

**ஆணவம் - குற்றம்**

இவ்வாறு உயிரைப் பற்றியுள்ள ஆணவம், உயிரின் குணமல்ல; குற்றமே. ஒரு பொருளின் குணம் பொருளை விட்டு நீங்காது, குற்றமே நீங்கும். ஆணவம் உயிரின் குணமாயின் ஆணவமலத்தைப் போக்கத் திருவருள் உண்டான காலத்தில் ஆன்மாவும் கூட கெட்டுப் போகும். அவ்வாறு உயிரின் முக்தியில் ஆணவம் மட்டும் கெட்டு உயிர் கெட்டுப் போகாமல் இருப்பதால் ஆணவம் உயிரின் குற்றமாகும்.

*"இருள் இன்றேல் துன்புஏன்? உயிர் இயல்பேல் போக்கும்*
*பொருள் உண்டேல் ஒன்றாகிப் போம்"*[43]

என்பது திருவருட் பயன்.

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், அம்புலிப் பருவத்தில் சந்திரனை முருகப் பெருமானுடன் விளையாட வருமாறு அழைக்குமிடத்து, குமரகுருபர அடிகள் சந்திரனுக்கும், முருகனுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை (பேதம்) கூறுமுகமாக, சந்திரன்பால் இல்லாதவனாகக் கூறப்பட்ட இயல்புகளும், செயல்களும் முருகப் பெருமானிடத்து உள்ளனவாகப் பாராட்டுகிறார்.

"சந்திரனே! புறஇருள் பரவிய இருட்காலத்து இருளை நீக்குபவன் நீ! ஆனால் எம்முருகனோ அறியாமையாகிய ஆணவமான அகவிருள் படலத்தைக் கிழித்து எறிபவன் என்பதை நீ அறியவில்லை!" என்கின்றார்.

*"பாயிருள் போதத் திருட்டன்றி அகவிருள்*
*படலம் கிழிப் பதுணராய்"* *(மு.கு.பி.த. அம்புலி.4)*

இங்கு ஆணவமலம் 'அகவிருள்படலம்' எனக் கூறப்படுகிறது.

'படலம்' என்பது கண்ணின் ஒளியை மறைத்துச் சூரிய ஒளியையே இருட்டாக்கிக் காட்டும் ஒரு நோய் ஆகும். சூரிய ஒளியின் தன்மை நிறைந்திருந்தாலும் படலம் படர்ந்த கண்ணால் அதைக் காண இயலாது. எனவே, அப்படலத்தை நீக்கிக் கண்ணைக் குணப்படுத்தினால்தான் கண்ணொளியால் சூரிய ஒளியைக் காண இயலும்.

*"படலம் முரித்தவிழி பானுவைக்கண் டாற்போல்*
*உடலமுத லாணவநோ யோட்டி"*[44]

என்பதற்கேற்ப,

முருகப்பெருமானும் ஒரு மருத்துவன்! புற இருளை நீக்கும் ஒளியுடைய பொருட்களுக்கெல்லாம் மூலப்பொருளாக விளங்குவதோடு மட்டுமன்றி, உயிர்கள் உள்ளொளியாக விளங்கும் இறைவனை உணரச் செய்ய, உயிர்களிடத்திலுள்ள அகஇருட் படலத்தையும் கிழித்தெறிய வல்ல அருளாளன் என்கின்றார் குமரகுருபரர்.

**கன்மம்**

உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதற்கும், உலகின் நடைமுறைக்கும் இன்றியமையாத காரணப்பொருளாய் இருப்பது கன்மமே ஆகும்.

ஆற்றப்படும் வினைகளும் அதன் பயன்களுமே கன்மங்கள் எனப்படுகின்றன. ஏதாவது ஒரு நோக்கத்தையும் பலனையும் கொண்டதாகவே ஒவ்வொரு செயலும் அமைகின்றது. வரும் பலனை அனுபவித்தலும் ஒரு செயலாகிறது.[45]

**கன்மம் - விளக்கம்**

"கன்மம்" என்ற வடசொல்லுக்குத் தமிழில் "வினை" அல்லது "தொழில்" என்று பெயர்.

ஒரு பொருளின் அசைவே தொழில் என்றாகும். பொருளசைவு இல்லையென்றால் அதன் தொழிலும் இல்லையாம்.[46]

வினை என்பது ஒரு செயல் ஆதலின், அஃது ஒரு பொருளைப் பற்றியே நிற்கும். 'வினை உண்டு' என்று கூறுவதனால், 'அதற்குப் பற்றுக்கோடு உண்டு' என்பது போதரும், அதுவே, 'மாயை'.[47]

**ஆகந்துக மலம்**

ஆணவமலச்சார்பான ஆன்மாக்கள் செய்யும் வினைகளின் தொகுப்பே 'கன்மமலம்' எனும் பெயருக்கு உரியதாம்.[48] ஆணவமலம் இயற்கை (சகச) மலமாயும், மூலமாயும் இருக்கிறது. அதனை நீக்குதற் பொருட்டே கன்மமலமும், மாயாமலமும் உயிர்களுக்குக் கடவுளால் கொடுக்கப்பட்டன. அதனால் கன்மமும், மாயையும் "ஆகந்துகமலம்" எனப்படும். ஆகந்துக மலம் – பின்பு வந்த மலம்.[49]

**கன்மத்தின் இருநிலைகள்**

"கன்மம்", 'காரணகன்மம்', 'காரிய கன்மம்' என இருவகைப்படுத்திக் கூறப்படும். யாதொரு செயலும் வெளிப்படாது பொருளின்கண் உள்ள நிலையில்

உள்ள கன்மம், 'காரணகன்மம்'; செயல் வெளிப்பட்டு நிகழும் நிலையில் உள்ள கன்மம், 'காரிய கன்மம்'. காரண கன்மமே "மூலகன்மம்" என்று சொல்லப்படும். காரிய கன்மமே பொதுவாகக் "கன்மம்" என்று சொல்லப்படும்.

"காரண நிலையதாகிய மூலகன்மத்தில் 'நன்மை, தீமை' என்ற வேறுபாடு இல்லை. காரிய கன்மத்தில்தான் அவ்வேறுபாடு உள்ளது. ஆகவே, சமயநூல்களில் 'இருவினை' என்றும், 'புண்ணிய, பாவங்கள்' என்றும் சொல்லப்படுவன காரிய கன்மங்களையே யாம்"[50]

என்று சி. அருணை வடிவேலு முதலியார் குறிப்பிடுகிறார். ஆன்மா தனது செய்வோனாம் தன்மையினால் ஒரு செயலைச் செய்யுங்கால் நிகழ்வது தூல கன்மம். இது 'புலப்படுவினை' எனப்படும். அச்செயல் முடிந்தபின் அது 'தூல நிலை' நீங்கிச் சூக்கும நிலையை அடைந்து நிற்கும். அது 'புலப்படா வினை' எனப்படும்.

'புலப்படும் வினை', நல்வினை, தீவினை என இரண்டு வகையாய் அமையும். 'புலப்படாத வினை', புண்ணியம், பாவம் எனப் பெயர் பெறும். புலப்படாத வினைகளே இன்பமும், துன்பமும் ஆகித் தம்தம் பயன்களைத் தம்மைச் செய்த ஆன்மாக்களுக்குக் கொடுக்கும்.

*". . . . . . . . . நீ ஆன சுகதுக்கம்*
*குறியாவினை என்று கொள்"*[51]

என்பது உண்மை விளக்கம்.

**வினைகளின் வகைகள்**

வினைகள் மூவகையாக வைத்துப் பேசப்படும். அவை, ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் ஆகும்.

**ஆகாமியம்**

வினைகள் யாவர்க்கும் புலப்படும் நிலையில் 'ஆகாமியம்' எனப்படும். ஆகாமியம் என்பதற்கு 'விரும்பிச் செய்யப்படுவது' என்பது பொருள். இது தூல கன்மம்.

**சஞ்சிதம்**

தூலகன்மம், தூல நிலை நீங்கி, சூக்குமமாய்ப் புலப்படா நிலையில் நிலைத்திருக்கும் பொழுது 'சஞ்சிதம்' எனப்படும். சஞ்சிதம் என்பதற்கு 'நன்கு பெறப்பட்டது' என்பது பொருள். இது சூக்கும கன்மம்.

**பிராரத்தம்**

புலப்படா நிலையிலிருந்து பயனாய் வந்து இன்ப, துன்பங்களைக் கொடுக்கும் பொழுது "பிராரத்தம்" எனப்படும். பிராரத்தம் என்பதற்கு 'நேர்படுவது' என்பது பொருள். இது அதிசூக்கும கன்மம்.

**ஆகாமியம்**

'செய்வினை', 'மேல்வினை', 'வருவினை', 'எதிர்வினை', 'ஏறுவினை', என்னும் பெயர்களாலும்;

**சஞ்சிதம்**

'தொல்வினை', 'பழவினை', 'அபூர்வம்', 'இடைவினை' என்னும் பெயர்களாலும்;

**பிராரரத்தம்**

'ஊழ்வினை', 'ஏன்றவினை', 'நுகர்வினை' என்னும் பெயர்களாலும் அழைக்கப்படும்.

> *". . . . . . . முந்து நுகர் உந்துபயன் அந்தம் உறவந்த*
> *வினையும் எதிர்வினையும் . . . .*"[52]

எனும் சிவப்பிரகாசத் தொடருக்கு உரைகூறவந்த மதுரை சிவப்பிரகாசர்,

"முந்து நுகருந்து பயன் – முன் ஜனனத்திலே புசிக்கச் செய்தே ஏறி ஆர்ச்சிதமாய் அத்துவாவிலே கட்டுப்பட்ட சஞ்சிதமும்; அந்தமுற வந்த வினையும் – இப்பொழுது புசித்து முடிவதாக வந்த உடலிலே கட்டுப்பட்ட பிராரத்த கன்மமும்; எதிர்வினையும் – இப்பொழுது புசிக்கச் செய்தேயுள்ள ஹிதா ஹிதங்களிலே யேறுகிற ஆகாமியமும்";[53] எனும்படி, "எதிர்வினை", 'ஆகாமியம்' என்றும், "முந்து நுகருந்து பயன்", 'சஞ்சிதம்' என்றும், "அந்தமுற

வந்த வினை", 'பிராரத்தம்' என்றும் வரையறுக்கிறார். இம்மூன்று கன்மங்களையும் ஒரு எடுத்துக்காட்டு மூலம் விளக்கலாம். "வயலில் அறுவடை செய்து கட்டிய நெல்மூட்டையே சஞ்சிதம் என்றால், அந்நெல் மூட்டையில் இருந்து நாள்தோறும் பயன்படுத்த எடுக்கும் நெல்லின் அளவே 'பிராரத்தம்' என்பதாகும். நெல்லை அறுவடை செய்யும் வரை எடுக்கும் முயற்சிகளே 'ஆகாமியம்' ஆகும்.[54]

**பிரவாக அநாதி**

பிரவாக நித்தம் என்பது ஆற்றில் ஓர் வெள்ளப்பெருக்கில் ஒரு வினாடியில் இருக்கும் நீர், மறுவினாடியில் இருப்பதில்லை; அதுபோல, கன்மமும் ஒன்றை அநுபவிக்கும் பொழுது, அது அழியும் பொழுது, மற்றொன்று தோன்றி நிற்க, இடையறாது என்றும் உள்ளதாகவே உள்ளது. நீர்ப்பெருக்குப்போல வினைப்பெருக்கின் தொடர்ச்சி நீளுகிறது. இங்ஙனம் கன்மமும் முடிவன்றி இருப்பதால் 'நாசோற்பத்தி' அல்லது 'பிரவாக அநாதி' எனப்படும்.[55] 'நாசத்தில் உற்பத்தியாவது' என்பதாம்.

**சஞ்சித வினை**

'சஞ்சிதம்' என்பது பல பிறவிகளில் ஈட்டிக் கொள்ளப்பட்ட வினைகளின் தொகுப்பு. முற்பிறவிகளில் ஈட்டப்பட்டு உள்ளதாகிய சஞ்சித வினையே உயிர் நுகர்தற்கு உரிய இன்ப துன்ப பயன்களையும் அவற்றை நுகர்தற்குரிய இடமாகிய உடம்பையும் தோற்றுவிக்க, உயிரானது அவ்வுடம்பைப் பொருந்தி அப்பயன்களை நுகரும்.

*"உள்ளதே தோற்ற உயிர்அணையும் அவ்வுடலின்*
*உள்ளதாம். . . . "*[56]

என்பது சிவஞான போதம்.

வினையானது திருவருளாற் செலுத்தப்பட்டு, மலத்தோடு கூடி, சூக்கும வடிவாய் நின்று, உயிர்களுக்குப் பல்வேறு வகைப்பட்ட யோநிகளைத் தோற்றுவிக்கும். செய்தவினைக்கு ஈடாகப் பலவகைத் தூல உடம்புகள் தோன்றும்.[57]

தமிழ்நூல்களில் "எழுவகைப் பிறப்பு" என்று கூறப்படுவது இந்தத் தூல உடம்பில் அமைவதேயாகும்.

*"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாய்க்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல்அசுர ராகிமுனி வராய்த் தேவராய்ச்*
*செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்"*[58]

எனும் மாணிக்கவாசகர் பாடல், பிறவியில் பெறப்படும் தூல உடம்புகளைப் பற்றிச் சொல்கிறது.

**பிராரத்த வினை**

'பிராரத்தம்' என்பது சஞ்சிதத்திலே புசிக்கப்பட்டது போக, வேறொரு உடலை எடுக்க வைத்து, 'சாதி, ஆயுள், போகம்' ஆகியவற்றைக் கொடுக்கும் நிலை. இவை தமிழில் 'இனம், வாழ்நாள், துய்த்தல்' எனப் பெயர் பெறும்.

*"கன்மநெறி திரிவிதம் நற்சாதி ஆயுப்போகக்*
*கடன்அதுஎன வருமூன்றும்"*[59]

எனச் சிவப்பிரகாசம் இம்மூன்றையும் சுட்டும்.

**இனம்**

பிராரத்தவினையின் பயனாகத் தவம் செய்வதற்குரிய உயர்குடிப் பிறப்பும், சூழ்நிலையும் அமையும்.

*"தவம் செய்த நற்சார்பில் வந்துதித்த"*[60]

என்பது சிவஞான போதம்.

**வாழ்நாள்**

வாழ்நாள் என்பது பிறவியிலேயே வரையறுக்கப்பட்டது. பிறந்தவுடனேயே உறுதியாகக் கூறத்தகுவது, 'இறப்பு' என்ற ஒன்றுதான்.

**துய்த்தல்**

இன்பதுன்பங்களைத் துய்க்கும் முறை. ஒருவன் நுகரும் இன்பதுன்பத்திற்குக் காரணம், அவன் செய்த வினையே அன்றி வேறில்லை. வினைப்பயனுக்கு ஏற்ப இறைவன், அவற்றைக் கூட்டினால் அன்றி ஓர் உயிருக்கு வாய்க்குமாறு இல்லை.

*"பொன்னும் மெய்ப்பொருளும்தரு வானைப்*
*போகமும் திருவும் புணர்ப்பானை*
*பின்னை என்பிழை யைப்பொறுப் பானை*
*பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை"*[61]

எனும் சுந்தரர் வாக்கு, 'தருவதும் இறைவன்; புணர்ப்பதும் இறைவனே' என்ற கருத்தை வலியுறுத்தும்.

'இனம், வாழ்நாள், போகம்' என்ற மூன்றைச் சித்தியார் ஆறாக விரித்துக் கூறும்.

*"பேறுஇழவு இன்பமோடு, பிணிமூப்புச் சாக்காடு என்னும்*
*ஆறும்முன் கருவுள் பட்டது; அவ்விதி அநுபவத்தால்*
*ஏறிடும்; முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றிற்கு ஏது*
*தேறு நீ – இனிச்செய் கன்மம் மேல் உடற்சேரும்"*[62]

இந்தப் பிறவியில் நிகழ்கின்ற நற்பேறுகளும், இழப்புகளும், இன்பமும், துயரமும், மூப்பினால் வரும் நரைதிரையும், இறப்பும் என்னும் ஆறும் ஓர் உயிர் கருவாய்க்கிடந்த போதே அதற்கு உரியனவாக அமைந்து கிடப்பன. இதற்கு உரை செய்த தத்துவப் பிரகாசர்,

"மூப்பு என்பது உயர்வைக் குறிக்கும். இது காரைக்காலம்மையார் 'மூத்த திருப்பதிகம்' எனும் வழக்கால் விளங்குகிறது. சாக்காடு, இறந்து போதலைக் குறிப்பதில்லை. இருக்கும் பொழுது உள்ள நிலையில் இழிந்து போவதைக் குறிக்கிறது" என விளக்கி, 'மூப்பு' என்பதை உயர்வு என்றும், 'சாக்காடு' என்பதை இழிவு என்றும் கூறுகிறார்.[63]

ச. கங்காதரன், வினைக்கோட்பாடு பற்றி அருள்நந்தி சிவத்தின் இப்பாடலை எடுத்துக்காட்டி,

"முற்பிறவிகளில் செய்த வினைகளின் பயனே இங்குக் கூறப்பட்ட ஆறனுக்குக் காரணமாக அமைந்தவை என ஒருவகையாகவும், இந்தப் பிறவியில் மீண்டும் ஈட்டப்படும் வினைகள் அவ்வுயிரால் இனிமேல் எடுக்கப்படும் பிறவிகளில் இந்த ஆறுவகை நுகர்வுகளுக்கும் காரணமாக அமையும் என இன்னொரு வகையாகவும் தேறுநீ. அதாவது ஐயம் நீங்கித் தெளிவு பெறல் வேண்டும். இவ்வாறாக, பிறவிக்கு வினைத் தொடர்ச்சியே அடிப்படையாக உள்ளது"[64]

என்கிறார்.

எனவே, "பிராரத்தம்" என்பது பிறவிக்குத் தொடர்புடையது எனலாம். இதுவே, 'ஊழ்' என்றும் குறிக்கப்படும். உயிர்கள் தமது வாழ்க்கையில் அடைகின்ற இன்ப துன்பங்கள் அனைத்திற்கும் இந்த ஊழ்வினையே காரணம்.[65] இந்தவினை எந்த வரிசையில் செய்யப்பட்டதோ அந்த வரிசையில்தான் வரும் என்பது இல்லை. வினைகள் செய்யப்படும் நிலையில் 'வன்மை, மென்மை' உடையனவாக அமையும். இவற்றிற்கு ஏற்பவே முன்பின்னாக வருதல் உண்டு.

*"தொடங்கு அடைவில் அடையாதே தோன்றும் மாறி"*[66]

என்று சிவப்பிரகாசம் கூறும்.

"ஒருவன் பனம் விதையை மண்ணில் நட்டான்; பின் தென்னை வைத்தான்; பின்பு கத்தரி நட்டான்; பின்பு கீரை விதைத்தான். கீரை, பதினைந்து நாளிலும்; கத்தரி, ஒரு மாதத்திலும்; தென்னை ஐந்து வருடத்திலும்; பனை, முப்பது வருடத்திலும் பயன் கொடுக்கும்" இவை போலவே வினைகள் பயன் கொடுக்கும் எனச் சித்தாந்தக் கட்டளை கூறுகிறது.[67]

**வினைவரும் வாயில்கள்**

பிராரத்தம், பயன்களைத் தரும் நிலையில் ஆதியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்' என மூவகைப்படும். இவை 'தாபத்திரயம்' எனப்படும்.

*"தன்மைதரு தெய்விகம் முற்பௌதிகம் ஆன்மிகமாம்*

*தகையில் உறும் அசேதனசேதனத் தாலும் சாரும்"*[68]

என்று சிவப்பிரகாசம் குறிப்பிடும் இம் மூன்றும் "வினைவாயில்கள்" எனப்படும்.

"ஆதி தெய்விகம்" எனப்படும் வினைவாயில் கருவினுள்பட்ட போதும் பிறப்பிலும், இறப்பின் போதும் நேர்கின்ற துயரங்கள். 'ஆதி ஆன்மிகம்' என்பது பிற உயிர்களாலும் விலங்குகளாலும் பறவைகளாலும் தன்னாலும் வருகின்ற துயரங்கள். 'ஆதி பௌதிகம்' எனப்படுவது ஐம்பூதங்களிலிருந்து தோன்றி விளைகின்ற துன்பங்கள் என ஞானாமிர்தம் விளக்குகிறது.[69]

**மானுடப்பிறவி**

முன்பு ஈட்டப்பட்ட புண்ணிய பாவங்கள் என்னும் சஞ்சிதவினையால் கிடைக்கப்பட்ட பிறவியே இம் மானுடப்பிறவி. இது கிடைப்பதற்கு அரிது. மானுடனாகப் பிறப்பது என்பது கடலைக் கையால் நீந்திக் கடப்பது போன்ற அருமை உடையதாகும்.

*". . . . . . . மானுடத்து உதித்தல்*

*கண்டிடில், கடலைக் கையால் நீந்தினன் காரியம் காண்"*[70]

என்ற சித்தியார் வாக்கும்,

*"மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே"*[71]

எனும் அப்பர் வாக்கும் இங்குக் குறிக்கத்தக்கன.

**பிறவிப்பிணி**

*"கருக்குழி யழுங்கல் பிறப்பிறும்பூது"*[72]

எனவரும் ஞானாமிர்த அகவல்,

உயிர்கள் ஆதிதெய்விகம் எனும் பிராரத்த வினைவாயிலின் வழியே தாயின் கர்ப்பத்திலும், பிறக்கும் பொழுதும் துன்பங்களை அநுபவிக்கும் எனக் கூறுகிறது.

இதனை,

*"பிறந்துழிப் பிறவாது கறங்கெனச் சுழலுழித்*
*தோற்றும் பொழுதின் ஈற்றுத் துன்பத்து*
*யாயுறு துயரமும் யானுரு துயரும்"*[73]

என, திருவிடை மருதூர் மும்மணிக்கோவையும் கூறுகிறது.

மானிடப் பிறவி அரிது என்றாலும் முன்செய்த வினைக்கு ஈடாகத் தாயின் கர்ப்பத்தில் வளர்ந்து வரும் உடல், நாள்தோறும் துன்பத்தை அடைந்து, படிப்படியாகப் பத்துத் திங்கள் வளர்ந்து முழுக்குழந்தையாகப் பேறுகாலத்தில் சிக்கலின்றிப் பிறக்கும். இவை அனைத்தும் இறைவனின் திருவருள் ஆற்றலால் நடைபெறுகிறதேயன்றி இவ்வளர்ச்சிக்குத் துணையாவர் யாரும் இலர். இதற்கு இறைவன் ஒருவனே அருகிருந்து காக்கின்ற பெருங்கருணையைச் செய்கிறான். இதனைப் 'போற்றிப் பஃறொடை' பின்வருமாறு கூறும்:

*"எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயித்து*
*. . . . . . . . . . . . . வெங்கும்பிக்*
*காயக்கருக் குழியில் காத்திருந்தும் காமியத்துக்கு*
*ஏயக்கைகால் முதலாய் எவ்வுறுப்பும் – ஆசறவே*
*செய்து திருத்திப் பின்பு யோகிருத்தி முன்புக்க*
*ஐயவழியே கொண்டு அணைகின்ற – பொய்யாத*
*வல்லபமே போற்றி"*[74]

தாயின் வயிற்றில் குழவி, பத்துத் திங்களாக வளரும் பருவத்தில் அது தாண்டி வரவேண்டிய தடைகளைப் பற்றி மாணிக்க வாசகப் பெருமானும்,

*"மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து*
*ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்*
*ஒருமதித் தான்றியின் இருமையில் பிழைத்தும்*
*இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும்*
*மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்*
*ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்*
*அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்*

*ஆறு திங்களில் ஊறலர் பிழைத்தும்*
*ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்*
*எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்*
*ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்"*

என்று கர்ப்ப வேதனையையும்,

*"தக்க தசமதி தாயொடு தான்படுந்*
*துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்"*[75]

என்று பிரசவ வேதனையையும் கூறுகிறார்

இவற்றையெல்லாம் உட்கொண்ட குமரகுருபர அடிகளாரும், உடல்கள் கருப்பையில் தங்குவதாகிய நெடுங்காலமாக இருந்து வரும் பிறவி நோயைப் பின்வருமாறு கூறுவர்:

*"கருமன்னும் ஊழிப் பெரும்பிணி" (மு.கு.பி.த. அம்புலி. 5)*

இதனை,

*"கருவடைந்து பத்துற்ற திங்கள்*
*வயிறிருந்து முற்றிப் பயின்று*
*கடையில் வந்துதித்து . . . .*

என அருணகிரி நாதரும்,

*"ஒரு மடமாதும் . . . . . . . . . . .*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*உருவமும் ஆகி உயிர்வளர் மாதம் ஒன்பதும் ஒன்றும்*
*நிறைந்து மடந்தை உதரம் அகன்று புவியில் விழுந்து"*[77]

என உடற்கூற்று வண்ணத்தில் பட்டினத்தடிகளும் கூறுவது ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

**ஆகாமியம்**

ஆகாமியம் மனம், மொழி, மெய்களால் முறையே நினைவாலும் சொல்லாலும் தொழிலாலும் செய்யப்படும். ஒரு வினையால் மற்றொரு வினை

அழியாது. வினைப் பயனின் நுகர்ச்சியே வினைத் தொடக்கை நீக்கும்.

*"உற்ற தொழில் நினைவு உரையின் இருவினையின் உளவாம்
ஒன்று ஒன்றால் அழியாது"*[78]

என்பது சிவப்பிரகாசம்.

ஆணவமலத்தின் சேர்க்கையால் செயல்கள் விருப்பு அல்லது வெறுப்புகளோடு செய்யப்படுகின்றன. இதன் பொருட்டு நல்வினை, தீவினைகள் வருகின்றன. சஞ்சிதமாய் இருக்கும் போதும், ஆகாமியமாய் ஈட்டும் போதும், பிராரத்தமாய் அநுபவிக்கும் போதும் அஃது இருவகைத்தே. இந்த இரு வினைகளையும் சித்தியார் 'இதம் (நலம்), 'அகிதம்' (தீங்கு) என்று குறிப்பிட்டு 'இதம்' என்பது உயிர்க்கு உறுதி பயப்படுவற்றைச் செய்தல், 'அகிதம்' என்பது செய்யத்தகாதவற்றைச் செய்தல் மட்டும் இன்றி செய்யத்தக்கவற்றைச் செய்யாமையுமாகும்[79] என்று கூறுகிறது. இப்புண்ணிய பாவங்கள் அறிந்து செய்யும் வினை (புத்திபூர்வம்), அறியாது செய்யும் வினை (அபுத்தி பூர்வம்) என இரண்டு வகைப்பட்டிருக்கும்.[80] அறியாது செய்யும் வினைக்குக் கழுவாய் உண்டு.

### பேராமல் ஊட்டும் பிரான்

வினைகள் அறிவற்றவை. ஆதலின், அவை தாமாகவே தம்மைச் செய்தவரைச் சென்றடைந்து பலனை அளிக்கமாட்டா! வினைகளைச் செய்வதற்கு இடமாகிய உடம்பில் பொருந்தி நின்று வினைகளைச் செய்தோர், அவ்வினைகளின் பயனை இறைவனே கூட்டுவிக்க அவற்றை நுகர்வர். அவ்வுயிர்க்கு எப்பயனை எவ்விடத்தில் எப்போது சேர்ப்பிக்க வேண்டும் என்பது இறைவனுக்குத் தெரியும். எனவே, அவ்வுயிர்க்கு அப்பயனை அவ்விடத்தில் அப்போது தப்பாமல் சேர்ப்பிப்பான். இதுவும் உயிர்களின்மீது இறைவன் கொண்டுள்ள பெருங்கருணையாம்.[81] இதனை மெய்கண்டார்,

*"பேராமல் ஊட்டும் பிரான்"*[82]

எனும் தொடரால் குறிப்பிடுகிறார்.

இறைவன் வினைகளை உயிர்கட்கு ஏன் கூட்டுவிக்கிறான். எனில், வினைகளின் பயன்களை நுகர்வதாலேதான் உயிரிலுள்ள ஆணவமலம் பரிபாகமாகிறது. அதனால்தான் இறைவன் கூட்டுவிக்கிறான் என்பர்.

**வினைச்சுழற்சி**

ஆகாமியமே பின் சஞ்சிதமாகிப் பின்பு பிராரத்தமாய் வரும். வினைப்பயன்களை நுகரும் முறையிலேயே புதிய வினைகள் தோன்றி அடுத்த பிறவிக்கு வித்தாய் அமையும். இங்ஙனம் வினையால் பிறப்பும், பிறப்பால் வினையும் சுழற்சியாக வருகின்றன.

**வினைநீக்கம்**

உயிர்கள், சங்கிலித் தொடர்போல் உள்ள வினைத்தொடர்பிலிருந்து மீள்வதற்கு வழி உண்டு.

*"அல்லல் என்செயும் அருவினை என்செயும்*
*தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்*
*தில்லை மாநகர்ச் சிற்றம்பல வனார்க்கு*
*எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே"*[83]

என்னும் அப்பர் வாக்கின்படியும்,

*"சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ*
*சும்மா வருமோ சுகதுக்கம் - நம்மால்முன்*
*செய்தவினைக் கீடாச் சிவனருள் செய்விப்பதென்றால்*
*எய்தவனை நாடி இரு"*[84]

என்னும் குருஞான சம்பந்தர் வாக்கின்படியும்,

இம்மானுடப் பிறவியில், நாம் செய்த வினையை நாம் நுகா வேண்டும் என்று எண்ணி, எந்த ஒரு பொருளிலும் விருப்போ, வெறுப்போ கொள்ளாமல், நினைவாலும், செயலாலும், வாக்காலும் இறைவனை வழிபட்டு, அவனுக்கே அடிமைபூண்டு, இறைவனது திருவருள் ஒன்றே கதி என்று அதனையே நோக்கி

நிற்க வேண்டும். இவ்வாறு திருவருளில் நிலைத்து நிற்கும் அடியார்களின் நிலையினை,

*"வெறுப்பொடு விருப்பினை அறுத்தவர்"*

*(மு.கு.பி.த. காப்பு. 11)*

என்றும்,

*"இருப்பினும் நடப்பினும் நினைப்பவர்"*

*(மு.கு.பி.த. காப்பு. 11)*

என்றும் குமரகுருபர அடிகள் கூறுகிறார்.

இந்நிலையில், பிராரத்தம் உயிரைத் தாக்காது உடல் அளவாய்க் கழியும். பிராரத்தவினை ஒழிந்தால் ஆகாமிய வினை தானாகவே ஒழியும். ஒருகால், பிராரத்த வினையின் தாக்குதல் இருந்தாலும் அது வாசனை அளவேயாம். அதனாலும் ஆகாமியம் தோன்றலாம். ஆனால், தொடர்ந்து இறைவனை விடாது பற்றி நிற்கும் மெய்யுணர்வே ஆகாமியத்தை ஓட்டி விடும்.

மேலும்,

*"மும்மைதரும் வினைகள் மூளாவாம் மூதறிவார்க்கு;*
*அம்மையும் இம்மையே ஆம்"*[85]

எனும் திருவருட்பயன்படி, இம்மை, மறுமை, அம்மை என்ற மூன்று பயன்களையும் தரும் வினைகள் மூளாது.

**இறைவனின் கருணை**

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல் போல, தன்னைப் பிரியாது நினைந்து ஏத்தும் அடியவர்களுக்கு, கருமன்னும் ஊழிப் பெரும் பிணியை மாற்றி, வாராத செல்வமாகிய முத்திப் பேற்றை அளிப்பவன்; தீராத நோய்களுக்கு மணி மந்திர ஔடதம் போன்று மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகி, புள்ளிருக்கு வேளூரில் எழுந்தருளியிருப்பவன் வைத்தியநாதன். அப்பெருமான் தன் சந்நிதியை அடைந்தவர்களின் பிறவித் துன்பத்தை முழுவதும் நீக்கி அவர்கள் அகம்மகிழ அருள் செய்பவன். இக்கருணையை

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், குமரகுருபரர்,

*"தண்ணளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த தம்பிரான்"*
*(மு.கு.பி.த. செங்கீரை. 2, சிறுதேர். 10)*

*"சந்நிதி யடைந்தவர்கள் பையுள்நோய் முற்றும்*
*தவிர்ந்தக மகிழ்ந்து தவிராக்*
*கருமன்னும் ஊழிப் பெரும் பிணியு மாற்றிடுதல்*
*கண்டனை" (மு.கு.பி.த. அம்புலி.5)*

என்பதால் குறிப்பிடுவர்.

தீராத வினைதீர்த்த பேரருளால், ஞானோதயம் தோன்றும்; அதனால் வினைகள் அழியும். பின் பேரின்பம் கிடைக்கும். இவ்வருளே, தாய் அன்பினும் மிகப் பெரிது. இதனை மாணிக்கவாசகரும்,

*"நாயிற்கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்*
*தாயிற் பெரிதும் தயாவுடைய தம்பெருமான்*
*மாயப் பிறப்பறுத் தாண்டானென் வல்வினையின்*
*வாயிற் பொடியட்டி பூவல்லி கொய்யாமோ"*[86]

என்று கூறுவது இவண் ஒப்புநோக்கத்தக்கதாகும்.

**மாயை**

மும்மலங்களுள் கன்மத்தை அடுத்துச் சொல்லப்படுவது மாயை. மாய்+ஆய் என மாயையைப் பிரித்தால் மாய்–அழிவு; ஆய் – தோற்றம் எனப் பொருள்படும். தோன்றுதலும், அழிதலும் ஆகிய அடிப்படையில் உலகம் தோன்றுவதும் அழிவதும் ஆகிய மாற்றங்கள் மாயையின் தொழிலே என்பதாம்.

**மாயை - உள் பொருள்**

பிறசமயங்கள் 'மாயை உயிருக்கு அறியாமை விளைவிக்கிறது' என்று கூறுகின்றன. ஆனால் சைவ சித்தாந்தமோ, மாயை உயிருக்கு நன்மை விளைவிக்கும் எனக் கூறுகிறது. சங்கரர், மாயை என்பது 'அநிர்வசனீயம்' அதாவது சொல்லொணாதது என்று கூறுவர். ஆனால் சைவரோ, 'மாயை உள்பொருள்' என்று கூறுவர்.[87]

'மாயை' என்பது என்றும் உள்ள பொருள். அது மிக நுண்ணியது. ஆகையினாலே அதற்கு உருவம் இல்லை. எனவே, அது அருவமானது. மாயை என்பது ஒரே பொருள். அது காரியப்படும் பொழுது பலவகைப் பொருள்களாக வடிவம் கொள்ளும் இயல்புடையது. உலகத்துப் பொருள்கள் யாவும் தோன்றுவதற்கு மாயையே வித்தாக விளங்குகிறது. மாயை அறிவுடைய பொருள் அன்று; சடப்பொருளே ஆகும். அது எங்கும் நிறைந்திருக்கும் இயல்பினை உடையது. இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்கிய இறைவனுக்கு மாயை வைப்பாற்றலாக விளங்குவது. உயிருக்கு உடம்பாகவும், கருவிகளாகவும் வாழும் உலகமாகவும், நுகர்ச்சிப் பொருள்களாகவும் மாயையே அமைகிறது.

இக்கருத்துக்களை உள்ளடக்கிய சிவஞானசித்தியார் பாடல்:

*"நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் உலகத்திற்கு ஓர்*
*வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கு*
*சத்தியாய் புவன போகம் தனு கரணமும் உயிர்க்காய்*
*வைத்ததோர் மலமாய் மாயை . . . . . ."*[88]

"உலகில் பலவகையாகக் காணப்படும் பொருள்களாய்ப் பரிணமிக்கக் கூடிய பலவகை சக்திகளின் தொகுதியே மாயை எனப்படும்"[89]

"மாயை அறிவற்ற பொருளாதலால், அது தானே நானாவித உலகமாகவும், உடலாகவும் மாற முடியாது! இறைவன் தான் அதிலிருந்து உலகையும் உடலையும் உண்டாக்கியிருக்க வேண்டும்". மாயையிலிருந்து இறைவன் ஏன் உலகையும், உடலையும் உண்டாக்க வேண்டும்? ஆணவமலம் – இருட்பொருள். மாயை – சிறிது ஒளியுடைய பொருள். இருட்பொருளாகிய ஆணவ மலத்திலிருந்து ஆன்மாவை விடுவிப்பதற்காக இறைவன் மாயையிலிருந்து உலகையும் உடலையும் உண்டாக்கியிருக்கிறான்.[90]

**உயிரறிவை விளக்குவது மாயை**

தனது அறிந்துணரும் திறமையைச் செயல்படுத்த ஆன்மாவிற்குச் சத்தியை அளிப்பது மாயை;[91] இதனால் ஆன்மா, படிப்படியே அறிவு விளக்கம் பெறுகிறது.

திருஞான சம்பந்தரின்,

*"விளையாததொர் பரிசில்வரு*
*பசு பாசவே தனைஒண்*
*தளையாயின . . . . . . ."*[92]

எனத்தொடங்கும் தேவாரத்தில் ஒண்மை, புத்திக்கூர்மையைக்குறிக்கும். (ஒண்– ஒளியாகவும் சொல்லப்படும்) "ஒண்" என்பது உயிரைப் பற்றிய தளைகளுள் ஒன்றாய மாயைக்கு அடைமொழியாக வந்துள்ளது.[93]

**மாயை - விளக்கு**

ஆதலால் மாயை சிறிது ஒளியையுடையது என்று தெளியப்படும். உயிரின் இயல்பான அறிவை மறைத்திடும் ஆணவ இருள் நீங்கும் பொருட்டு, சூரிய ஒளிவரும் வரை விளக்கொளி உதவுவது போல உயிரின்கண் திருவருள் பதியும் வரை மாயை உதவிபுரியும்.

*"விடிவாம் அளவும் விளக்கனைய மாயை*
*வடிவாதி கன்மத்து வந்து"*[94]

என திருவருட்பயன் கூறுவதை,

"ஆணவமும் மாயையும் இருளும் ஒளியும் போல் தம்முள் மாறுபட்டவையாகும்"[95]

என்று சித்தியாரும் தெளிவுபடுத்தும்.

மேலும், குருடர்க்குக் கொடுத்த ஊன்றுகோல் போல, மாயை உயிர்க்கு உதவுகிறது.

*"கட்புலனாய் காணார்தம் கைகொடுத்த கோலேபோல்*
*பொற்புடைய மாயை . . . ."*[96]

என்பது போற்றிப் பஃறொடை.

**மாயை - இரு இயல்புகள்**

உயிரறிவை விளக்கி நிற்றல் மாயையின் "சொரூப இலக்கணம்" எனப்படும் 'உண்மையியல்பு'. 'தடத்த லக்கணம்' எனப்படும் 'பொது இயல்பு' இன்னொரு பொருள் சேர்க்கையால் வருகிறது. மாயை, ஆணவத்தின் சேர்க்கையால் உயிருக்குத் திரிந்த அறிவைத் தரும்;

சித்தியாரின்

*". . . மாயை மயக்கமும் செய்யும் அன்றே"*[97]

எனவரும் பாடல்மூலம், 'மாயை மயக்கமும் செய்யும்" என்று உம்மை கொடுத்து மயக்குதல், என்று சொல்லப்பட்டது. எனவே மயக்குதல், மாயையின் இயற்கைத்தன்மை அன்று. ஆணவத்தோடு கூடி நிற்கும் செயற்கையேயாகும். அதாவது, நிலையற்ற உலகப் பொருட்களை நிலையென்று எண்ணுவதாகும். உயிருக்குள் இருக்கும் சிவத்தை உயிர் அறியவிடாமல், உயிரறிவை மயக்கிப் பின்னர்த் தெளிவிக்கும். இக்காரணம் பற்றியே மாயை, 'மலம்' எனப்படுகிறது.

**மாயை - முதற்காரணம்**

'வினைக்கு மாயையே பற்றுக்கோடு' என்று கன்ம இயலில் முன்பு சொல்லப்பட்டுள்ளது போல், மாயையைப் பற்றுக்கோடாகக் கொண்டு இன்ப துன்பமாகிய வினைப்பயன்கள் மாயா காரியங்களினிடமாகவே உயிருக்கு வருகின்றன.

*"மயக்கிடு மாயா காரிய மிலையேல்*
*வல்வினை நுகர்ச்சியு மில்லை!*
*துய்க்குமவ் வினையின் கழிவுமாங் கெய்தா*
*தொல்லையே சூழ்ந்தவா ணவத்தின்*
*முயக்குமற் றொழிதலரிதரி தாகும்*
*மூதுயர் மாயகா ரியத்தின்*
*இயக்குற லன்றி யிருவினை யீட்டா*
*திவையின்றி யவையுமெய் தாவால்!"*[98]

வினையிருத்தற்கும், வினையின் பயனாகப் போக்குவரவு புரிய தனு, கரண, புவன, போகங்கள் வேண்டும். தனு – பருவுடம்பு, கரணம் – அந்தக் கரணம், மனம் முதலிய உட்கருவிகள், புவனம் – அந்த உடம்புகள் இயங்குவதற்கு அமைந்த இடம். போகம் – உயிர்கள் தம் தநுகரணங்களைக் கொண்டு இன்பம் நுகரும் நுகர்ச்சிப் பொருள்கள். இவை அனைத்திலும் காரியமாய் இருத்தலின் முதற்காரணமாக மாயை வேண்டும்.[99]

எனவே, உலகிற்கு முதற்காரணம்–மாயை; துணைக்காரணம் இறைவனின் சிற்சத்தி; இறைவனே நிமித்த காரணன். இதனை,

*"ஞானம்இல் அசேத பிரபஞ்ச உற்பன்ன*
*நந்து காரணம் எனா*
*நவில் மாயையைத் துணைக்காரணம் எனும் தனது*
*நல் அருளினால் நடத்தும்*
*ஊனம் இல் நிமித்த காரணம் ஆகவும்.*[100]

என பாம்பன் சுவாமிகள் சண்முகானந்த சிவத்தில் விளக்குவர். மாயையிலிருந்து பிரபஞ்சம் சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும். அஃது உதிர்ந்த இலைகள் சருகுகளாகி மண்ணின் சாரமாய்க் கலந்து பின்னும் அம்மரத்தின்கண் தோன்றுவதற்குக் காரணமாகும். தோன்றுவதற்கு உரிய காலம் முதலியன ஒருங்கு கூடிய போதே ஆகும் என சித்தியார் கூறுகிறது.

*"மாயையின், உள்ள வஞ்சம், வருவது போவது ஆகும்*

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

*போய் உகும் இலைகள் எல்லாம் மரங்களின் புக்குப்போதின்*
*ஆயிடும், அதுவும், என்னில் காரணம் கிடக்க ஆமே"*[101]

"உண்மையில் உலகம் ஒடுங்குவது தனது முதற்காரணமாகிய மாயையில்தான். அது மீளத் தோன்றுவதும் மாயையிலிருந்தே என்பதை அறிதல் வேண்டும். ஆயினும், மாயையிலே தோன்றி, மீண்டும் மாயையில் ஒடுங்குவதாகிய உலகத்தை அம்மாயைக்கு ஆதாரமாய் உள்ள சங்கார காரணனிடத்தே தோன்றி மீண்டும் அவனிடத்தே ஒடுங்குவதாகக் கூறுவதும் முறைமையேயாம்"[102]

எனும் ஆ. ஆனந்தராசனின் கூற்று இங்கு எண்ணத்தகுவது.

**மாயை வகைகள்**

மாயை இருவகைப்படும்:

1. சுத்த மாயை;

2. அசுத்த மாயை;

சுத்த மாயையானது, மல, கன்மங்களோடு விரவாதது. தன்னொடு தொடர்புடைய உயிர்களுக்கு இன்பம் தருவது; மயக்காது நின்று பேரறிவையும் பேராற்றலையும் உதவுவது. முதல்வன் திருவருள் நேரே பற்றி நின்று தொழிற்படுத்துவதற்கு உரியது. தூய்மையான சிவத்துக்கும் உணர்வற்ற பொருளுக்கும் இடையே உள்ளது.

'அசுத்த மாயை', மந்தமானது; அறிவற்றது. அது, தன்னிடமிருந்து பல்வேறுபட்ட தன்மைகள் தோன்ற, உடம்புகள், கருவிகள், உலகங்கள், பொருள்கள் ஆகியவற்றை ஏற்படுத்துகின்ற மல கன்மங்களோடு கலந்து நின்று உயிர்களை மயக்கி அறிவிப்பது. இன்ப, துன்ப, மயக்கம் எனும் மூன்றனையும் தருவது.[103] எனவே, இவ்விரண்டும் ஒன்றாக மாட்டா; வேறு வேறு பொருள்கள் என்பர் சிலர்! இன்பம், துன்பம் இரண்டும் பயனே ஆதலின், ஆன்மாக்களுக்குப் பயன்தருவது என்னும் முறையில் இருமாயைகளும் ஒன்றேயாகும். இதற்கு உவமையாகக் குன்றிமணியைக் கூறுவதுண்டு. குன்றி மணியின் செம்மை ஒரு பகுதியும் கருமை ஒரு பகுதியும் ஆக ஒன்றின் இரண்டு பகுதிகள் இருப்பது போல ஒரே மாயை இரு பகுதிகளாய் நின்று, 'சுத்தமாயை, அசுத்த மாயை' எனச் செயல்படுகிறது.

சிவப்பிரகாசத்தில்

*"பகர்மாயை ஒன்று"*[104]

என 'மாயை ஒன்று' என்று கூறப்பட்டுள்ளதும் கருத்த்தக்கது.

**மாயையின் காரியங்கள்**

சுத்தமாயையின் காரியம், 'சொல்லுலகம், பொருளுலகம்' என இருவகைப்படும். 'எழுத்தோசை' அல்லது 'வாக்குகள்', "சொல்லுலகம்" எனப்படும். 'தத்துவம்,கலை' ஆகியன 'பொருளுலகம்' எனப்படும்.

அசுத்த மாயையின் காரியங்கள் அனைத்தும், 'பொருட் பிரபஞ்சங்களே' ஆகும்.

மாயைகளிலிருந்து தனு முதலியவை தோன்றுமிடத்து முதலில் தத்தவங்களாய்த் தோன்றிப் பின்பே பொருள்களாய்க் காரியப்படும். 'தத்துவம்'

என்பதற்கு இங்கு 'மூலம்' என்பது பொருள்.[105] உலகில் காணப்படும், 'மண், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம்' என்ற ஐந்தும் தூலபூத தத்துவங்கள் (5) எனப்படும்.

இவற்றின் நுண்நிலையாக உள்ள, 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்' எனும் ஐந்தும், 'தன்மாத்திரைத் தத்துவங்கள்' (5) எனப்படும்.

'மெய், வாய், கண், மூக்கு, செவி' எனும் ஐந்தும் 'ஞானேந்திரிய தத்துவங்கள்' (5) எனப்படும். வாய், கை, கால், எழுவாய், கருவாய் எனும் ஐந்தும் கன்மேந்திரிய தத்துவங்கள் (5) எனப்படும். 'மனம், புத்தி, சித்தம் அகங்காரம்' எனும் நான்கும் 'அந்தக் கரண தத்துவங்கள்' (4) எனப்படும்.

இங்குக் கூறப்பட்ட 24 தத்துவங்களையும் ஆன்மதத்துவங்கள் என்று சிவாகமங்கள் குறிப்பிடுவதாக உண்மை விளக்கம் கூறுகிறது.

*"ஓதியிடும் நாலாறும் உற்றான்ம தத்துவம் என்று*
*ஆகி அருள்நூல் அறையுங் காண்"*[106]

இந்த 24 தத்துவங்கள் அடங்கிய "பிரகிருதி மாயையைத் தொழிற்படுத்துபவர்". 'சீகண்ட ருத்திரர்' ஆவார். பிறசமயங்கள் யாவும் இந்த 24 ஆன்ம தத்துவங்களுடனேயே நிற்கின்றன.

பிரகருதி மாயை வித்தியாதத்துவங்களுள் 'கலை' என்பதிலிருந்து தோன்றும்.

இம் மாயைக்கு மேல் உள்ள 'கலை, வித்தை, அராகம், காலம், நியதி, மாயை, புருடன்' ஆகிய ஏழும் 'வித்யா தத்துவங்கள்' ஆகும். இது 'அசுத்த மாயை' எனப்படும். திருவதிகை மனவாசகங் கடந்தார், இவ் வித்யாதத்துவங்கள் ஏழையும் வரிசைக் கிரமமாக உரைக்கிறார்:

*"காலம் நியதி கருதும் கலை வித்தை*
*ஏல அராகம் புருடனே மாயை–"*[107]

'அசுத்தமாயை' யைச் சிவனது அருள்வழி நிற்கும் வித்தியேசுரராகிய 'அனந்ததேவர்' காரியப்படுத்துகிறார்.

அசுத்தமாயையும் பிரகிருதி மாயையும் விதையும், முளையும் போல்வன ஆகும்.

இவற்றுக்கும் மேலே உள்ள, 'நாதம், விந்து, சாதாக்கியம், மகேசுவரம், சுத்தவித்தை' என்னும் ஐந்தும், 'சிவதத்துவங்கள்' ஆகும். இது, 'சுத்தமாயை' எனப்படும்.

*". . . . . . . . . நித்தமாம்*

*சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம்நல்*

*சத்திசிவம் காண் அவைகள் தாம்"*[108]

என்பது உண்மைவிளக்கம்.

ஆன்ம தத்துவங்கள் 24 உடன் வித்யா தத்துவங்கள் 7, சிவ தத்துவங்கள் 5 ஆக சைவசித்தாந்தம் கூறும் தத்துவம் 36 ஆகும். இம் முப்பத்தாறு தத்துவங்களும் மாயையிலிருந்து உண்டாகின்றன. இந்த தத்துவங்கள் உடலாகவும், உலகமாகவும் பயன்படுகின்றன.[109] (பின்னிணைப்பு எண்.2)

இவ்வாறு நாதம் முதலிய முப்பத்தாறு தத்துவங்களுக்கு முதலாகவும், முடிவாகவும் உள்ள அநுபூதன் 'முருகன்' என குமரகுருபர அடிகள் கூறுகிறார்.

*"நாதாதி கட்கனுபூதா தாலோ தாலேலோ'*

*(மு.கு.பி.த. தால.10)*

மாயையின் காரியங்கள் பற்றிய குறிப்புகளை முத்துக்குமார சுவாமிபிள்ளைத் தமிழில் காணலாம்.

*"ஊனாய்' (மு.கு.பி.த. தால்.10)*

*"பெரும் புவனம் நிறுவுமொருநின் பெருந்தன்மை"*

*(மு.கு.பி.த. முத்த. 2)*

*"வேறு புவனம் செயவும் வல்வீர்" (மு.கு.பி.த. முத்த. 8)*

*"சகல புவனத்திலும் உயிர்ப்பயிர் தழைப்ப"*

*(மு.கு.பி.த. அம்புலி.1)*

எனவரும் தொடர்கள் தனு, புவன, போகத்தைப் பற்றிக் குறிப்பன. முருகனை ஐம்புலன்களுக்கும் இன்பம் தரும் மெய்ப்பொருளாகக் கூறும் சிறுபறைப் பருவப் பாடலில் (மு.கு.பி.த. சிறுபறை. 10)

*'நவரசமே'* *(செவி)*
*'சுவையமுதே'* *(வாய்)*
*'சுடரொளியே, குலமணியே'* *(கண்)*
*'புதுமணமே'* *(மூக்கு)*
*'சலநிதியே'* *(மெய்)*

எனவரும் தொடர்கள், 'மெய், வாய், கண், மூக்கு, செவி' போன்ற ஞானேந்திரியங்கள் பற்றிக் குறிப்பன.

*'சித்தத் திருப்பானை'* *(மு.கு.பி.த. காப்பு.11)*

எனும் தொடர் 'அந்தக் கரணத்தை'க் குறிக்கும்.

**மாயை - நீக்கம்**

பாசத்தினின்று நீங்குவதற்குச் சில படிநிலைகள் உண்டு. அவற்றை 'அத்துவாக்கள்' என்பர். இவை – 6. மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்பன. உயிரானது படிப்படியாக விட்டுச் செல்வதே பாசத்தின் நீங்குவதாம்.[110] தீக்கை முதலாயின இவ்வகையில அடங்கும் என்பர்.

தத்துவங்களைப் படியாகக் கொண்டு மேலோங்குதலைக் குறித்து,

*"முப்பது மாறும் படி முத்தி யேணியாய்*
*ஒப்பிலா வானந்தத் துள்ளொளி புக்குச்*
*செப்பரிய சிவங்கண்டு தான்றெளிந்து*
*அப்பரிசாக வமர்ந்திருந் தாரே"*[111]

என்று திருமூல நாயனாரும்,

*"நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத்தாமும்*
*பேணுதத் துவங்க ளென்னும் பெருகு சோபானமேறி*
*ஆணையாஞ் சிவத்தைச் சார வணைபவர் போல வையர்"*[112]

என சேக்கிழாரும் அருளிச் செல்வர்.

**சுத்தநிலை**

உயிரின் உள்ளிருக்கும் இறைவன், ஞானாசிரியன் வடிவில் வந்து மெய்ஞ்ஞானத்தை உயிருக்கு உணர்த்த, உயிர் தன்னைத் தத்துவங்களினால் கொடுக்கப்பட்ட கருவிகளின் வேறாக உணர்ந்து திருவருளில் அழுந்தி நிற்கும். அந்நிலையில் உயிர், கருவிகளினின்றும் நீங்கி நிற்கும். அந்நிலை 'இராப்பகலற்ற இடம்' எனப்படும்.

இரவு – உயிரை ஆணவம் மூடியிருக்கும் இருள்நிலை;

பகல் – மாயா கருவிகளோடு கூடிய சகலநிலை.

இவ்விரண்டினின்றும் நீங்கிய நிலையே 'சுத்தநிலை' யாகும்.

*"இரவுபகல் இல்லா இன்ப வெளியூடே*
*விரவி விரவி நின்று உந்தீபற*
*விரைய விரைய நின்று உந்தீபற"*[113]

என்று உயிர், திருவருளில் ஆழ்ந்து இருக்கும் நிலையைத் திருவுந்தியார் குறிக்கிறது. இதுவே, 'அநுபூதி நிலை' என்றும் சொல்லப்படும்.

எனவே, இறைவனை நோக்கி,

*"இராப்பகலற்ற இடங்காட்டி யானிருந்தே துதிக்க"*[114]

*"ஆறா றையுநீத் ததன்மேல் நிலையை*
*பேறா அடியேன் பெறுமாறு ளதோ"*[115]

என அருணகிரி நாதரும்,

*"பூதமும் கரணமும் பொறிகளையும் புலனும் பொருந்திய*
*குணங்களோர் மூன்றும்*
*நாதமும் கடந்த வெளியிலே நீயும் நானுமாய்*
*நிற்குநாள் உளதோ"*[116]

எனப் பட்டினத்தாரும், தத்துவம் கடந்த அநுபூதி இன்பத்தைத் தந்தருள வேண்டுகின்றனர்.

**இவ்வியல் வாயிலாக அறியத்தகும் முடிபுகள்**

1. மலங்கள் ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும். இவற்றில் ஆணவமலம், 'மூலமலம்' என்றும் 'சகசமலம்' என்றும் சொல்லப்படும்.
2. ஆணவம் ஒன்றேயாயினும் அஃது அளவற்ற ஆற்றல்களை உடையது.
3. ஆணவம் 'இருள்' என்றும் சொல்லப்படும். குமரகுருபரர் ஆணவத்தை 'இருள்' என்றே தம் பிள்ளைத்தமிழில் குறிப்பிடுகிறார்.
4. அம்புலிப்பருவத்தில் இவ்வாணவத்தை, குமரகுருபரர், 'அகவிருள் படலம்' என்றும் குறிப்பிடுகிறார்.
5. கன்மம், 'ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம்' என மூவகைப்படும்.
6. குமரகுருபரர் பிறவிப்பிணியைக் 'கருமன்னும் ஊழிப் பெரும் பிணி' என்பதால் குறிப்பிடுகின்றார்.
7. இறைவனே, உயிர்களின் 'தீராத வினை தீர்க்கும்' தம்பிரான் என்று குமரகுருபரர் சுட்டுவர்.
8. மாயை ஆன்மாவிற்குச் சக்தியை அளிப்பது; ஆணவஇருள் நீங்கும் பொருட்டு விளக்கொளி போல் உதவுவது.
9. மாயையின் காரியங்களான 36 தத்துவங்களுக்கு அநுபூதன் முருகனே என இறைவனைக் குமரகுருபரர் போற்றுகிறார்.
10. ஞானேந்திரியங்களைப் பற்றியும், அந்தக் கரணம் பற்றியும் தம் பிள்ளைத் தமிழில் குமரகுருபரர் சொல்வது விளக்கப்பட்டுள்ளது.

**அடிக்குறிப்புகள்**

1. சங்கற்ப நிராகரணம், 10:1,2.
2. G. Subramaniya Pillai, "Introduction and History of Saiva Siddhanta" **Collected Lectures on Saiva Siddhanta,** p.17.
3. Devapoopathy Nadarajah, "The Svekasvatara Upanisad and Saiva Siddhanta", **Proceedings of the Second International Saiva Siddhanta Seminar,** p. 250.
4. க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', சைவமும் வைணவமும், ப. 51.
5. ச. சாம்பசிவனார், சிவஞானபோதச் செம்பொருள், ப. 129.

28. போற்றிப் பஃறொடை, 18, 19.
29. கோமதி சூரியமூர்த்தி, திருஞானசம்பந்தர் தேவாரமும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும், ப. 194.
30. திருவருட்பயன், 22.
31. ஆ. ஆனந்தராசன், திருவருட்பயன் வழித்துணை விளக்கவுரை, பக். 64, 65.
32. ந. சுப்புரெட்டியார், சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம், ப. 170.
33. திருவருட்பயன், 23.
34. சிவப்பிரகாசம், 20.
35. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல்., ப. 67.
36. ச. சாம்பசிவனார், திருவாசகத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், ப. 94.
37. திருநாவுக்கரசர் தேவாரம், திருப்புள்ளிருக்கு வேளூர், 4:1.
38. சிவஞான தத்துவதீபம், 161:1.
39. கோமதி சூரியமூர்த்தி, மு.கா.நூல்., ப. 195.
40. திருவருட்பயன், 24.
41. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல்., ப. 68.
42. கொடிக்கவி, 1.
43. திருவருட்பயன், 27.
44. சிதம்பரம் சுவாமிகள், திருப்போரூர் சந்நிதிமுறை, மாலை, 20.
45. ச. நீலாயதாட்சி, சைவசித்தாந்த வினைக் கோட்பாடும் பக்தி நெறியும், ப. 40.
46. மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, ப. 26.
47. சி. அருணை வடிவேலு முதலியார், சிவஞான போத மாபாடியப் பொருள்நிலை விளக்கம், பக்.325,326
48. மறைமலையடிகள், மு.கா.நூல், ப. 31.
49. ச. கங்காதரன், மு.கா.நூல், ப. 117.
50. சி. அருணைவடிவேலு முதலியார், முப்பொருள் இயல்பு, பக். 25, 26.

51. உண்மை விளக்கம், 22.
52. சிவப்பிரகாசம், 48.
53. சிவப்பிரகாசர் (உ.ஆ)., சிவப்பிரகாசம், சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும், ப. 879.
54. ச. நீலாயதாட்சி, மு.கா.நூல், ப. 34.
55. சிவப்பிரகாசம், 28:1,2.
56. சிவஞானபோதம், சூத். 2. உதாரணவெண்பா.10: 1,2.
57. மு. திருவிளங்கம் (புத்துரை), சிவஞான சித்தியார் சுபக்கம், பக். 219, 220.
58. மாணிக்கவாசகர், சிவபுராணம், 26–31.
59. சிவப்பிரகாசம், 29:1.
60. சிவஞானபோதம், சூத்.8. உதாரணவெண்பா. 45: 2,3.
61. சுந்தரர், திருவாரூர்ப் பதிகம், 1.
62. சிவஞானசித்தியார் சுபக்கம் 99.
63. தத்துவப் பிரகாசர் (உ.ஆ)., சிவஞான சித்தியார் சுபக்கம், சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும், ப. 445.
64. S. Gangadharan, Law of Karma, Facets of Saiva Siddhanta, p. 188. "Arulnanti Sivam in a such way that .......... karma is pre-eminently a principle of continuity".
65. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல்., ப. 32.
66. சிவப்பிரகாசம், 29:2.
67. ச. சாம்பசிவனார், சிவஞானபோதச் செம்பொருள், ப. 159.
68. சிவப்பிரகாசம், 29;3.
69. ஞானாமிர்தம் அகவல். 26.
70. சிவஞானசித்தியார் சுபக்கம், 179; 3,4.
71. திருநாவுக்கரசர், கோயில் பதிகம், 4.
72. ஞானாமிர்தம், அகவல், 26: 24.
73. திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, 4; 15–17.

74. போற்றிப் பஃறொடை, 27–37.

75. மாணிக்கவாசகர், போற்றித் திருவகவல், 13–25.

76. அருணகிரிநாதர், திருப்புகழ், திருப்பரங்குன்றம். 13:1.

77. பட்டினத்தார், உடற்கூற்றுவண்ணம், 1–3.

78. சிவப்பிரகாசம், 31:1.

79. சிவஞானசித்தியார் சுபக்கம், 103.

*"இதம் அகிதங்கள் என்பது – இகல்மனம் வாக்குக் காயத்து*
*இதம் உயிர்க்கு உறுதி செய்தல்; அகிதம் மற்றது செய்யாமை"*

80. சிவப்பிரகாசம், 30:3.

81. ச. சாம்பசிவனார், திருவாசகத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், ப. 97.

82. சிவஞானபோதம், சூத். 2. உதாரண வெண்பா. 11:3.

83. திருநாவுக்கரசர், கோயில், 4.

84. குருஞான சம்பந்தர், சிவபோகசாரம் (சிலபாடல்கள் மாத்திரம்), ப.8.

85. திருவருட்பயன், 99.

86. மாணிக்க வாசகர், திருப்பூவல்லி, 3.

87. எம். தேவகி., சைவசித்தாந்தம் கூறும் மாயைக் கோட்பாடு, தமிழ் மாருதம், மார்கழி. 97, ப. 26.

88. சிவஞான சித்தியார் சுபக்கம் 143.

89. ந. சுப்புரெட்டியார், மு.கா. நூல், ப. 209.

90. ச. சாம்பசிவனார், சுந்தரர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், ப. 52.

91. ர. ராமானுஜாசாரி, சைவசித்தாந்தம், ப. 75.

92. திருஞானசம்பந்தர், திருமுதுகுன்றம்பதிகம், 3:1,2.

93. க. வெள்ளைவாரணன், பன்னிரு திருமுறை வரலாறு, (முதற்பகுதி) பக். 675–676.

94. திருவருட்பயன், 30.

95. சிவஞானசித்தியார் சுபக்கம். 174.

"... இரண்டும் சோதி இருள் என வேறாம் அன்றே"

96. போற்றிப் பஃறொடை, 21–22.

97. சிவஞான சித்தியார் சுபக்கம், 143:4.

98. தணிகைப் புராணம், நந்தியுபதேசப்படலம், 110.

99. ச. கங்காதரன், மு.கா.நூல், ப. 134.

100. பாம்பன் சுவாமிகள், சண்முகானந்த சிவம், 2:1.

101. சிவஞான சித்தியார் சுபக்கம், 35.

102. ஆ. ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, பக். 40–41.

103. ச. சாம்பசிவனார், திருவாசகத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், பக் 106,107.

104. சிவப்பிரகாசம், 32:2.

105. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல்., ப. 44.

106. உண்மை விளக்கம், 17.

107. மேலது, 18.

108. மேலது, 20.

109. முரு. பழ. இரத்தினம் செட்டியார், 'சக்தி' ஆண்டுமலர், 94.

110. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், ப. 48.

111. திருமந்திரம், 170.

112. பெரிய புராணம், கண்ணப்ப நாயனார் புராணம், 752:3

113. திருவுந்தியார், 20.

114. கந்தரலங்காரம், 103:1.

115. கந்தரநுபூதி, 47:2.

116. பட்டினத்தார் பாடல்,

ஆதாரம் : கிருபானந்தவாரி (உ.ஆ)., கந்தரநுபூதி, ப. 211.

## 6. அடியார் பெருமை

### முன்னுரை

பாசப்பற்று விடுதற் பொருட்டு, முதல்வனைப் பற்றும் முறையே 'கடவுள் வழிபாடு' எனப்படும். அது, 'பொதுவும், சிறப்பும்' என இரு வகைப்படும்.

'பொது வழிபாடு' என்பது இறைவனது அருளாணை ஆகிய அறத்தின் வழிநிற்றல். 'சிறப்பு வழிபாடா'வது, முதல்வனது உண்மை இயல்பைத் தெரியக்கண்டு, அவனைச் சார்தலால், அவன்தன் அருங்குணங்கள் நம்மிடத்து மேம்பட்டு விளங்குமாறு ஒழுகும் ஒழுக்கம். இஃது அருள் நூல்களை ஓதி உணர்ந்து, அவற்றுள் கூறியபடி முதல்வனை வணங்குதல், வாழ்த்துதல், நினைதல், உள்நோக்கி உணர்தல் என்னும் வடிவில் நிகழத்தக்கது. இது, 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என நான்கு வகையில் வகைப்படுத்தப்படும்.[1]

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், இந்நான்கு நெறிகளைப் பற்றியும், இந்நெறி நின்றொழுகும் அடியார்களின் பெருமைகள் பற்றியும், சொல்லப்பட்ட கருத்துக்கள் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

### நால்வகை நெறிகள்

'சரியை, கிரியை, யோகம், ஞானம்' எனும் இந்நால்வகை நெறிகளும், முக்தி அடைவதற்குத் தேவையான அடிப்படை ஒழுக்க முறைகள் எனலாம். மும்மலச்சார்பால், உயிர்கள், பல்வகைப் பிறப்புகளை எய்தி, இன்ப துன்பங்களுக்கு உள்ளாகின்றன. இவற்றினின்றும் நீங்கி, இறைவனின் பேரருளை அடைய இந்நெறிகள் துணைபுரிகின்றன. 'சரியை' முதலிய மூன்றும் ஞானத்தை அடைவிக்கும்; முக்திப் பயனை எய்த இந்த ஞானமே வாயிலாகும்.[2] இந்நான்கும் சமயப்படிகளாகும்.

### சரியை

'சரியை' என்பது, சிவபெருமானது இறை உருவத் திருமேனியை வழிபடுவது. இது புறவழிபாடாகும். இதனைத் 'தாசமார்க்கம்' (தொண்டுநெறி) என்பர்.

திருக்கோயிலில் அலகிட்டு, மெழுகிட்டு, மலர்பறித்து, மாலைதொடுத்து இறைவனுக்குச் சார்த்தியும், சிவபெருமானின் சீர்மையையும், சிறப்பினையும் வாயாரப்பாடி ஒளிவளர் தீபங்கள் ஏற்றியும், நந்தவனங்கள் அமைத்தும், சிவனடியார்க்குத் தொண்டுகள் செய்வதும் ஆகியன சரியை நெறியில் அடங்கும். இந்நெறியில் ஒழுகுவோர் ஈசன் உலகத்தில் (சாலோகம்) இருப்பர்.[3]

*"பெரும்புலர் காலை மூழ்கிப்*
*பித்தர்க்குப் பத்தர் ஆகி*
*அரும்பொடு மலர்கள் கொண்டாங்கு*
*ஆர்வத்தை உள்ளே வைத்து*
*விரும்பிநல் விளக்குத் தூபம்*
*விதியினால் இடவல் லார்க்குக்*
*கரும்பினிற் கட்டி போல்வார்*
*கடவூர் வீரட்ட னாரே"*[4]

எனும் திருநாவுக்கரசரின் பாடல் 'சரியை நெறி'யை உணர்த்தும்.

**கிரியை**

'கிரியை' என்பது, சிவபெருமானது அருவுருவத் திருமேனியாகிய இலிங்க மூர்த்தத்தை வழிபடுவது. இது அகப்புற வழிபாடாகும். இதனைச் 'சற்புத்திரமார்க்கம்' (மகன்மை நெறி) என்பர்.

புதிய மணம் உள்ள மலர்கள், நறும்புகை, நல்விளக்கு, திருமஞ்சனம், திருஅமுது முதலிய பூசனைப் பொருட்களைத் தேடியமைத்துக் கொண்டு, ஐவகைத் தூய்மையாகிய பூதத்தூய்மை, இடத்தூய்மை, பொருட்தூய்மை, மந்திரத்தூய்மை, லிங்கத்தூய்மை என்பவற்றைச் செய்து, இறைவனுக்குரிய இடம், வடிவு ஆகியவற்றை மனத்தில் நினைந்து ஏற்படுத்தி, மெய்யன்போடு மலர்தூவிப் போற்றி, நாள்தோறும் வழிபடுவது கிரியை நெறியில் அடங்கும். இந்நெறியில் ஒழுகுவோர் ஈசன் அருகில் இருக்கும் (சாமீபம்) பேற்றினைப் பெறுவர்.[5]

*"நறைமலிதரு அளறொடு முகைநகுமலர் புகைமிகு வளரொளி*
*நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடுமடியவர்*
*குறைவில பதமணை தரவருள் குணமுடையிறை யுறைவனபதி*
*சிறைபுனலமர் சிவபுரமது நினைபவர் செயமகள் தலைவரே"*[6]

எனும் ஞானசம்பந்தர் பாடல் 'கிரியை நெறி'யை உணர்த்தும்.

**யோகம்**

யோகம் என்பது, சிவபெருமானை அருவத்தில் வழிபடுவது. இது அகவழிபாடாகும். இதனைச் 'சகமார்க்கம்' (தோழமை நெறி) என்பர்.

ஐம்பொறிகளைப் புலன்வழி செல்லாது தடுத்து, இருவகை மூச்சையும் அடக்கி, முக்கோணம், நாற்கோணம் முதலிய வடிவங்களை உடைய மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களின் முறைமையை அறிந்து, அவ்விடங்களில் பொருந்தி, தியானித்துச் சந்திர மண்டலத்திலுள்ள அமிர்தத்தை உடல்முழுவதும் நிரப்பிப் பேரொளிப் பிழம்பாகிய இறைவனின் வடிவை இடைவிடாது நினைத்திருத்தல் யோக நெறியில் அடங்கும். இந்நெறியில் ஒழுகுவோர் இறைவனின் திருவுருவத்தை (சாரூபம்) பெறுவர்.[7]

*"தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாள்தொறும்*
*நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலோயோர் நால்விரல்*
*மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே*
*ஆடுவன் ஆடுவன் ஆமாத்தூர் எம் அடிகளே"*[8]

எனும் சுந்தரர் பாடல் 'யோக நெறி' யை உணர்த்தும்.

**ஞானம்**

ஞானம் என்பது, சிவபெருமானை அறிவாலறிந்து வழிபடுவது. இது 'அறிவு வழிபாடா'கும். இதனைச் சன்மார்க்கம் (ஞானநெறி) என்பர்.

எல்லாக் கலை ஞானங்களையும், புராணங்களையும், சாத்திரங்களையும், புறச்சமய நூல்களையும், நுணுகி ஆராய்ந்து 'இறை, உயிர், தளை' என்ற முப்பொருள்களின் உண்மையை உணர்ந்து தெளிவதற்குரிய சிவஞானத்தைப் பெற்று, அறிவு, அறிபவன், அறியப்படும் பொருள் என வேறுபடுத்தி உணராது

சிவபெருமானோடு இரண்டறக் கலந்து மெய்யன்பினால் வழிபடுவது ஞானநெறியாகும். இந்த நெறியில் நிற்கும் பெருமை உடையவர்கள் சிவனை (சாயுச்சியம்) அடைவார்கள்.[9]

*'மூன்றாயதன்மை அவர் தம்மின் மிகமுயங்கித்*
*தோன்றாத இன்பம் அது'* [10]

என்று திருவருட்பயன் குறிப்பிடும்.

*"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
*பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்*
*சித்தமலம் அறுவித்துச் சிவம்ஆக்கி எனைஆண்ட*
*அத்தன் எனக்கு அருளிய வாறு ஆர்பெறுவார் அச்சோவே"* [11]

எனும் மாணிக்கவாசகர் பாடல் 'ஞான நெறி' யை உணர்த்தும்.

இந்நான்கு வகை நெறிகளில் சரியைத் தொண்டு பற்றி, முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழில்,

*"........... பெருந்தேவர்*
*குலமேயன்றி யடியேமும்*
*குற்றே வலுக்கா மகம்படிமைக்*
*குடியாக் கொண்டால் குறையுண்டோ"*

*(மு.கு.பி.த. சிற்றில். 9)*

எனவரும் பாடலில், குமரகுருபர அடிகள் கூறுகிறார்.

பதமுத்தி உலகம் சென்று எங்கும் தடையற இலங்கும் உரிமையைப் பெற்றிருத்தலே 'சாலோகம்' என்னும் முத்தி நிலையாகும். ஒருவர் இல்லத்தில் பணிபுரியும் அகம்படிமைத் தொண்டர் அவ்வில்லம் முழுவதும் தடையறச் செல்லும் உரிமை போன்ற இவ்வுரிமையைத் தருவது சரியைத் தொண்டு. அது பற்றியே 'தாசமார்க்கம்' – 'அடிமை நெறி' எனப்படுகிறது. [12]

இதைப்போன்றே, "முக்தி உலகத்தில் வாழும் தேவர்கூட்டம் மட்டுமன்றி எங்களையும் உனக்கு அகம்படிமைத் தொண்டராக ஆக்கி அருள்புரிவீராக என முருகனிடம் அடியார்கள் வேண்டுகின்றனர்" என அடிகள் கூறுகிறார்.

இறைவனுக்குத் தொண்டு செய்வதையே தமது குறிக்கோளாகக் கொண்டு இந்நெறியில் பெருமை பெற்ற திருநாவுக்கரசர்,

*"நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்*
*தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்*
*தன்க டன்அடி யேனையும் தாங்குதல்*
*என்க டன்பணி செய்து கிடப்பதே"* [13]

என இறைவனிடம் வேண்டுகிறார்.

ஞானநெறியாகிய அறிவு வழிபாட்டில் நின்றொழுகும் அடியார்களை,

*'முதிரும் அறிவில் அறிஞர்' (மு.கு.பி.த.முத்தம்.9)*

எனவரும் தொடரால் சிறப்பித்துக் கூறுகிறார் குமரகுருபரஅடிகள்.

**இறைவன் உணர்த்தும் முறை**

'சரியை, கிரியை, யோகம், ஞானம்' ஆகிய நால்வகை நெறிகளும் 'அரும்பு, மலர், காய், கனி' என ஞானத்தின் வளர்ச்சி நிலைகளாகக் கூறப்படும். [14]

இந்நால்வகை நெறிகளிலும் இறைவன் அருள்வதை,

*"சரியைக் காடிறை மூர்த்தியிற் றான்மறைந் தருளுங்*
*கிரியை கிந்தன மதனத்தின் பொறியெனக் கிளரும்*
*உரிய யோகினுக் காக்கறந் திடுதக வுறழும்*
*அரிய ஞானமென் பதற்குமுன் வற்சல மெனவாம்"* [15]

எனவரும் தகராலய ரகசியப் பாடலில்,

"சரியை நெறியில் நடேசன் மூர்த்தியின்கண் மறைந்து நின்று அநுக்கிரகிப்பான்; கிரியை நெறியில் அரணிக் கடைதலில் நெருப்புப் பொறி போல் தோன்றி மறைவான்; யோக நெறியில் பசு கறக்கும் போது பால் பெருகி வரும் தன்மைபோல் அவன் வெளிப்பட்டு நிற்பான்; அருமை ஞான நெறியில் கன்று விரும்பும் வரை பால்கொடுக்கும் அன்றீன்ற கன்றின் பசுவென ஆதரிப்பான்" [16]

எனும் பொருளில் பாம்பன் சுவாமிகள் குறிப்பிடுகிறார்.

**வீடுபேறு**

உயிர், புல்லாகி, பூடாகி, புழுவாகி, மரமாகி எண்ணற்ற பிறப்பு இறப்புகள் அடைந்து சலிப்புற்று இன்ப துன்ப உவர்ப்பு அடைந்து திருவருளாகிய தூநிழலில் இளைப்பாற ஆசை கொள்கிறது. மனிதப் பிறவியின் முடிந்த பயணம் அதுவே.

இறைவன் உயிரின் வினைக்கேற்றவாறு, தந்த உடல் கருவிகளைப் பயன்படுத்தி மும்மலநீக்கம் அடைந்து, இறுதியில் இறைத் திருவடிகளை அடைகிறது. மூலமாகிய ஆணவம் அகலுதல் மட்டுமே 'வீடுபேறு' அல்ல. இன்ப கனமாகிய முதல்வனின் பேரின்பத்தை நுகர்ந்து, அதனுடன் இரண்டறக் கலந்திருப்பதே முடிவான 'வீடுபேறு' நிலை. அதுவே "முக்தி நிலை" யாகும். இதனை,

*'திரிமலமும் அகல உயிர் அருள்சேர்முத்தி*
*திகழ்முத்தி; இது முத்தி திறத்தது ஆமே'* [17]

எனச் சிவப்பிரகாசம் சுட்டும்.

உயிர்கள் வீடுபேறு அடைந்து, வீட்டின் இன்பத்தை நுகர்ந்து கொண்டிருக்கும். அவ்வின்பத்தை இடையின்றிக் கொடுத்துக் கொண்டிருப்பவன் இறைவன். இதனை

*"சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு; –மெத்தவே*
*இன்பம் கொடுத்தல் இறை"* [18]

என உண்மை விளக்கப் பாடல் விளக்குகிறது.

**சீவன் முத்தர்**

இவ்வாறு இவ்வுலகில் இவ்வுடம்போடு கூடியுள்ளபோது இறைத்திருவடி இன்பத்தில் திளைத்திருப்போரைச் 'சீவன்முத்தர்' என்பர். அஃதாவது, திருவருளைப் பின்பற்றி அதுகாட்டிய வழியில் சென்று அதில் அழுந்திச் சிவானந்தத்தில் திளைத்திருப்போர் வீடுபேற்றின் இன்பத்தை இம்மையிலேயே அநுபவிப்பர்.

*"................ பொதுஞானம்*
*மெய்ந் நின் றவருள் விழிப்பாவை*
*விளையாட் டயர அழியாத*
*வீடும் கொடுத்தாய்......" (மு.கு.பி.த. சிற்றில்.5)*

எனவரும் பாடலில்,

"பொது ஞானத்தினின்றும் நீங்கினவர்களாகி, மெய்ஞ்ஞானத்தின்கண் நின்றவர்களான ஞானியர்–அக்கண்களின் பாவை விளையாட்டு அயராமல் எப்பொழுதும் சிவானந்தத்தைத் துய்க்கும் வீடுபேற்றை அநுபவிப்பர்" என்று குமரகுருபர அடிகள் கூறுகிறார்.

**குற்றமற்ற ஞானியர்**

தீங்கினித் தருகின்ற மாயப் பிறவி மீளவும் சேராதபடி, குற்றமுடைய மாயையின் செயல்கள் வந்து சேராதவாறு, பழவினை முதலிய மூவினைகளும் மூவகையில் நீங்க, விட்டு அகலாத மூலமலமாகிய ஆணவ இருள் கெடுமாறு, அன்பினால் உள்ளத்து ஒளிர்கின்ற பேரொளியான அருளில் தாம் அடங்கி அவ்வருளோடு பிரிப்பின்றி இயைந்திருக்கும் சிவ பரம்பொருளால் தாங்கப் பெற்று, தம் அறிவில் பேரின்பம் வந்து உறுமாறு மலவாதனை இன்றி, குற்றமற்ற தன்மை கொண்டவர்கள் சிவஞானியர்" ஆவர்.

இக்கருத்தமைந்த சிவப்பிரகாசப் பாடல்:

*"தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவிதத்தால்*
*நீங்கிடா நீங்கா மூலநிறை இருள் இரிய நேயத்து*
*ஓங்கு உணர்வு அகத்து அடக்கி உளத்துள் இன்புஒடுங்க நேரே*
*தூங்குவர் தாங்கி ஏகத் தொன்மையில் துகள் இலாரே"* [19]

இதனை,

*"கழுவுதுகளர் முழுகநெடிய கருணைபெருகு சலதியே"*
*(மு.கு.பி.த. வருகை.9)*

என்று "குற்றமற்ற தன்மை கொண்டவர்கள் சிவஞானிகள்" என, குமரகுருபர அடிகள் சுட்டிக் காட்டுவர்.

**நினைவும் செயலும் இறையே**

ஒப்பற்ற இறைப் பேரின்பத்தில் அழுந்தி நிற்பதால் வேறு நினைவு எழுவதும், சொல் எழுவதும் இன்றி அடியார்கள் இருப்பர்.

சிவனடியார்களிடத்தும், சிவலிங்கத் திருமேனியிடத்தும் எழுந்தருளி அருள்பாலிப்பது சிவபெருமானே என்பதை அறிந்து வணங்கி, கண்ணீர் பொழியக் கசிந்துருகி, அன்பினால் மொழி குழற மெய்ப்பொருளான சிவபெருமானையே ஞானிகள் இடைவிடாது வழிபட்டுக் கொண்டிருப்பார்கள்.

இக்கருத்தை,

*"தொண்டர்கள் இடத்தும் வானோர் தொழும் திருமேனிதானும்*
*அண்டரும் கண்டிலாத அண்ணலே என வணங்கி*
*வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே*
*கண்டு கொண்டு இருப்பர் ஞானக்கடல் அமுது அருந்தினாரே"* [20]

எனச் சிவப்பிரகாசமும்,

*"பரமே பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்"* [21அ]

*"சீவன்முத்தர் சிவமே கண்டு இருப்பர்"* [21ஆ]

எனச் சித்தியாரும் கூறுகின்றன.

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில்,

"உருவத்தின் அழகும், எழுதுவதற்கு அரிய தோள்களும், அவற்றைத் தழுவிய வெட்சி மாலையும், திருமார்பில் விளங்குகின்ற குரவமலர் மாலையும், திரு அரையில் கட்டப்பட்ட மணியும், அழகினையுடைய கச்சையும், செலுத்தப்படுகின்ற மயிலும், சேவலும், அருளொழுகு முகத்தாமரையும், தாமரைக் கண்களும் உடைய முருகனின் எழில் உருவத்தை அடியவர்கள் தமது கண்ணிலும், மனத்திலும் பலமுறை எழுதி, நாள்தோறும் அவனின் திருவடிகளைப் பணிவார்கள்" எனும் பொருள்பட,

*"வடிவின் அழகும் எழுத அரிய*
*புயமும் நறிய செச்சையும்*
*மருமம் விரவு குரவும் அரையின்*
*மணியும் மணிகொள் கச்சையும்*
*கடவு மயிலும் அயிலும் ஒழுகு*
*கருணை வதன பற்பமும்*
*கமல விழியும் விழியும் மனமும்*
*எழுதி எழுதி நித்தலும்*
*அடிகள் எனஉன் அடிகள் பணியும்*
*அடியர் ................" (மு.கு.பி.த. முத்தம்.10)*

குமரகுருபர அடிகள் குறிப்பிடுகிறார்.

**பரநாதத்தொலி**

இறைவனை, மனம், மொழி, மெய்களால் வணங்கும் அநுபூதி பெற்றவர்களுக்கு, அவர்களின் அகச் செவியில் மணி, கடல், யானை, புல்லாங்குழல், மேகம், அணிவண்டு, தும்பி, சங்கு, பேரிகை, யாழ் முதலிய பல வகை ஒலிகள் நுண்மையாகக் கேட்கும் என்றும், மற்றவர்களால் அதனை அறிய முடியாது என்றும் பின்வரும் திருமந்திரப் பாடல் கூறும்:

*"மணிகடல் யானை வார்குழல் மேகம்*
*அணிவண்டு தும்பி வளைபேரி கையாழ்*
*தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்*
*பணிந்தவர்க் கல்லது பார்க்கஒண் ணாதே"* [22]

மேலும், வன்மையான கடலோசையில் ஆரம்பித்து மென்மையான வீணை இசையும் கேட்கும். அடியார்கள் இவ்விருவகை ஓசையின் தன்மையையும் அறிவார்கள் என்றும் கூறுகிறது. [23]

கழறிற்றறிவார் நாயனார் புராணத்தில் சேரமான் பெருமாள், "நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயன் நிறைதவமும், தேடும் பொருளும், பெரும் துணையும், தில்லைச் சிற்றம்பலத்துள் ஆடும் கழலே" எனத் தெளிந்ததனால்,

எடுத்த திருப்பாதத்தைப் போற்றி வணங்குவதற்கு அன்பினால் அருச்சனையை மேற்கொண்டார். இவ்வாறு அருச்சித்த சேரமான் பெருமாள் நாயனார், ஒவ்வொரு நாளும் பூசையின் முடிவில் திருச்சிலம்பின் ஒலியைக் கூத்தப் பெருமான் அருளால் கேட்டார் என்பதைச் சேக்கிழார் பெருமான் பின்வருமாறு எடுத்துரைக்கிறார்:[24]

*"நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயனும் நிறைதவமும்*
*தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைத் திருச்சிற்றம்பலத்துள்*
*ஆடும் கழலே எனத் தெளிந்த அறிவால் எடுத்த திருப்பாதம்*
*கூடும் அன்பில் அர்ச்சனை மேற்கொண்டார் சேரர் குலப்பெருமாள்"* [25அ]

*"வாசத் திருமஞ்சனம் பள்ளித் தாமஞ் சாந்தம் மணித்தூபம்*
*தேசிற் பெருகுஞ் செழுந்தீபம் முதலாயினவும் திருவமுதும்*
*ஈசர்க்கேற்ற பரிசினால் அருச்சித் தருள எந்நாளும்*
*பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின்ஒலி அளித்தார்"* [25ஆ]

மாணிக்கவாசகரும்,

*"வாத வூரினில் வந்தினி தருளிப்*
*பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்"* [26]

எனவரும் பாடல் தொடரில், தமக்கு இறைவன் காட்சியருளிய போது, சிலம்பொலி காட்டியதைக் குறிப்பிடுகிறார்.

சிலம்பின் ஓசை வழியே சென்று இறைவனுடைய திருவடியைப் பற்றிக் கொண்டு ஆடல் வல்லானை வணங்குதல் வேண்டும் என,

*'திருச்சிலம்பு ஓசை ஒலி வழியே சென்று*
*நிருத்தனைக் கும்பிடு என்று உந்தீபற*
*நேர்பட அங்கே நின்று உந்தீபற'* [27]

எனத் திருவுந்தியாரும்,

*"ஓசையெலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின்*
*ஓசை வழியே சென்று ஒத்து ஒடுங்கின்—ஓசையினின்*
*அந்தத் தானத்தான் அரிவையுடன் அம்பலத்தே*
*வந்து ஒத்தான் அத்தான் மகிழ்ந்து"* [28]

எனத் திருக்களிற்றுப் படியாரும் கூறுகின்றன.

இறைவன் திருத்தாளும் அத்தாளில் அணிந்த ஒண்சிலம்பும் வீட்டின்பத்தில் அடியாரின் உள்ளத்தினின்று என்றும் நீங்காமல் இருக்கும் என்று,

*"............ வீட்டின்ப*
*வெள்ளத் தழுத்தி விடுந்தாளினும் அடியார்*
*உள்ளத்தினும் பிரியா ஒண்சிலம்பும்"* [29]

எனவரும் தொடரால் போற்றிப் பஃறொடை கூறும்.

சிலம்பு என்பது பரவிந்து என்றும், அந்தச் சிலம்பில் தோன்றும் ஒலி என்பது பரநாதம் என்றும் கூறுவர். திருச் சிலம்பு ஓசையைப் பற்றிச் செல்பவர்களுக்கு அதன் அந்தத்தில் இறைவன் திருவருளாகிய சக்தியுடன் காட்சியளித்தருளி அம்பலமாகிய இவ்வுயிரை விருப்பத்தோடு, நேர்பட்டு ஆட்கொள்ளுவான். [30]

பரநாதத்து ஒலியில் அநுபூதி பெற்றவர்கள் மனம் நெகிழ்ந்து உருகுவார்கள் எனும் பொருளில்,

*"பரநாதத்தொலியென அநுபூதி*
*பலித்தவர் நெக்குருக" (மு.கு.பி.த. சிறுபறை.6)*

எனும் பாடல் தொடரால் குமரகுருபர அடிகள் விளக்குகிறார். 'பற்பூதநிலை கடந்து, நாத நிலைக்கப்பால், பரநாதநிலை உண்டு. அதன்மேல் இறைவன் உறைவதை அறிநீ. அதுவே, நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம் மற்றும் ஞானானந்தம் என்று பரநாத நிலை என்ற நாதாந்த நடராச தத்துவத்தைப் பற்றி வள்ளலார் கூறும் கருத்து[31] இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும் (பின்னிணைப்பு எண். 3)

**அடியார் பெருமை**

இறைவனை மலர்மாலைகளால் அலங்கரித்தும், இறைவனின் திருவடிகளை வணங்கியும், இறைவனுக்குத் தொண்டு செய்வதையே அடியவர்கள் பெருமையாகக் கொள்கின்றனர்.

திருவலங்கல் திரட்டில்,

*"பாராளும் வேந்தர்க்கும் பண்ணார் பாவணர்க்கும்*
*வீராதி வீரர்க்கும் விண்ணோர்க்குமே யதிகம்*
*ஆரார் அயிலன் அடியார்"*[32]

என அடியார் பெருமையைச் சிறப்பித்துப் பாம்பன் சுவாமிகள் கூறுகிறார்.

முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில், குமரகுருபர அடிகள் கூறுவது:

*"விண்ணென் கடற்புவனம் முடவுபடத்து ஏந்து*
*வேந்துபொலி பாந்தள் வைப்பும்*
*விரிநீர் விரைப்பும் எழில் விஞ்சையர் இருப்புமுகை*
*விண்டு நறை விரிமுண்டகக்*
*கண்ணன் திருப்பதமும் நான்முகக் கடவுள்பூங்*
*கஞ்சமும் குலிசப் பிரான்*
*கற்பகக் காவும்நின் தொண்டர்கள் தொழும்புக்கொர்*
*காணியா வைத்து......" (மு.கு.பி.த. சப்பாணி.5)*

இதன் பொருளாவது;

"விண்ணுலகத்தவரும் மதித்தற்குரிய கடல்சூழ்ந்த உலகம் முழுவதையும், ஆதிசேடன் தாங்கும் நாகர் உலகத்தையும், கடல் சூழ்ந்த இவ்வுலகத்தையும், தாமரைக் கண்ணனாகிய திருமாலின் பரமபதத்தையும், நான்முகனது சத்திய லோகத்தையும், இந்திரனது கற்பகச் சோலையையும், தன் அடியார்களின் தொண்டுள்ளத்திற்குக் காணிக்கையாகக் கொடுக்கிறான் முருகப் பெருமான்!"

**இவ்வியல் வாயிலாக அறியத்தகும் முடிவுகள் :**

1. சைவ சித்தாந்தம் கூறும் நெறிகள் நான்கு. அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இந்நால்வகை நெறிகளையும் சைவத் திருமுறைகள் விளக்கமாகக் குறிப்பிடும். இந்நால்வகை நெறிகளிலும் நிற்போருக்கு இறைவன் அருள்புரிவான்.
2. தாசமார்க்கத்தில் இறைத் தொண்டு செய்யும் அடியவர்களை 'அகம்படிமைத் தொண்டர்' எனக் குமரகுருபரர் கூறுகிறார்.
3. இவ்வுலகில் உடம்போடு கூடி உள்ளபோதே, இறைவனது திருவடி இன்பத்தில் திளைத்திருப்போர் 'சீவன் முத்தர்' எனப்படுவர்.
4. அநுபூதி பெற்ற சிவனடியார்களுக்கு வன்மையான ஓசையும், மென்மையான ஓசையும் கேட்கும். அதில் ஒன்று இறைவனின் திருவடிச் சிலம்பொலியாகிய 'பரநாதத்தொலி' யாகும். இதனைக், கழறிற்றறிவார் புராணம் வாயிலாக அறியலாம். குமரகுருபர அடிகளும் இதனைக் குறிப்பிடுகிறார்.
5. குமரகுருபரர் இப்பிள்ளைத் தமிழ் வாயிலாக முருகன் அடியார்களின் சிறப்பினை விதந்து ஓதுகிறார்.

**அடிக்குறிப்புகள்**

1. க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', 'சைவமும் வைணவமும்', ப.81
2. ச. சாம்பசிவனார், திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், ப.145.
3. சிவஞான சித்தியார் சுபக்கம், 271.
4. திருநாவுக்கரசர் தேவாரம், திருக்கடவூர் வீரட்டம், 4.
5. சிவஞானசித்தியார் சுபக்கம், 272.
6. திருஞான சம்பந்தர் தேவாரம், திருச்சிவபுரம், 4.
7. சிவஞான சித்தியார் சுபக்கம், 273.
8. சுந்தரர் தேவாரம், திருவாமாத்தூர், 9.
9. சிவஞானசித்தியார் சுபக்கம், 274.
10. திருவருட்பயன், 79.

11. மாணிக்க வாசகர், அச்சோப்பதிகம், 1.

12. சி. அருணைவடிவேலு முதலியார், சித்தாந்த வினாவிடை, ப.377.

13. திருநாவுக்கரசர் தேவாரம், திருக்கடம்பூர் பதிகம், 9.

14. "விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனி போல் அன்றோ பராபரமே"
—தாயுமான சுவாமிகள், பராபரக்கண்ணி, 157.

15. பாம்பன் சுவாமிகள், தகராலய ரகசியம், இரண்டாம் கண்டம், 28.

16. மேலது, ப. 198.

17. சிவப்பிரகாசம், 50 : 4

18. உண்மைவிளக்கம், 50.

19. சிவப்பிரகாசம், 93.

20. மேலது, 98.

21. (அ) சிவஞான சித்தியார் சுபக்கம், 311 : 1.
(ஆ) மேலது, 311 :4.

22. திருமந்திரம், 586.

23. மேலது, 587.

24. சி.சு. மணி, (உ.ஆ)., திருவுந்தியார் திருக்களிற்றுப் படியார், ப.14.

25. (அ) பெரியபுராணம், கழறிற்றறிவார் நாயனார் புராணம், 3770.
(ஆ) மேலது, 3771.

26. மாணிக்க வாசகர், கீர்த்தித் திருவகவல், 52–53.

27. திருவுந்தியார், 17.

28. திருக்களிற்றுப்படியார், 33.

29. போற்றிப் பஃறொடை, அடி. 132–134

30. சி.சு. மணி, (உ.ஆ)., மு.கா.நூல், ப.62

31. வை. தட்சிணாமூர்த்தி, ஸ்ரீ நடராசத்தத்துவம், ப.268.

32. பாம்பன் சுவாமிகள், திருவலங்கல் திரட்டு, இரண்டாம் கண்டம், 59.

## 7. முடிவுரை

இவ் ஆய்வேட்டின் இயல்களில் கூறப்பட்டுள்ள முடிபுகள் இவண் தொகுத்துத் தரப்படுகின்றன.

இவ்ஆய்வினால் தெரியவரும் முடிவுகள் அடிப்படையில் மேலும் ஆய்வுகள் தொடர்வதற்கு இஃது எவ்வகையில் துணைபுரியும் என்பதும், இவ் ஆய்வினால் ஏற்படும் நன்மையும் இங்குச் சுட்டப்படுகின்றன.

குமரகுருபர அடிகள் திருவைகுண்டத்தில் தோன்றி, தம் ஐந்தாம் அகவையில் திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளால், 'கந்தர்கலி வெண்பா' பாடினார். இந்நூல் ஓர் தோத்திர, சாத்திர, புராண, பாராயண நூலாகத் திகழ்கிறது.

தலயாத்திரை மேற்கொண்ட குமரகுருபர அடிகள், மதுரையில் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் பாடினார். திருவாவடுதுறையில் தருமபுரம் ஆதீனம் 4ஆம் பட்டத்தில் குருமூர்த்தியாக விளங்கிய ஸ்ரீமாசிலாமணி தேசிகரைத் தம் ஞான குருவாகக் கொண்டார். குருநாதரின் கட்டளைப்படி துறவறம் மேற்கொண்டார். குருவருள் பெற்ற அடிகள் அதனையே திருவருளாகக் கருதிப் 'பண்டார மும்மணிக் கோவை' பாடியருளினார்.

குருநாதர் ஆணைப்படி காசிக்குச் சென்ற அடிகள், அங்குக் கலைமகள் மீது 'சகலகலா வல்லிமாலை' பாடி இந்து தானி மொழியில் பேசும் திறம் பெற்றார். கங்கைக் கரையில், அழிந்து போன கேதார நாதர் கோயிலை எழுப்பிக் கட்டினார். பின்னர், காசியிலேயே சிவப்பேறு எய்தினார்.

அடிகள் அருளியவை மொத்தம் பதினாறு பிரபந்தங்கள். இவை, கலிவெண்பா, பிள்ளைத்தமிழ், கலம்பகம், கோவை, மாலை, குறம், நீதிநூல் முதலான வகைகளில் அடங்கும்.

தொல்காப்பியம், புறப்பொருள் வெண்மாலை, பாட்டியல் நூல்கள் கூறும் இலக்கணத்தின்படி 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்' வைத்தீசுவரன்

கோயிலில் எழுந்தருளியுள்ள முத்துக்குமாரசுவாமி மீது பாடப்பெற்றது. பிள்ளைத் தமிழ் என்பதால் முருகனின் தோற்றம், அவன் அணிந்த அணிகலன்கள், ஆடல், குறும்புகள், பிள்ளைப்பருவ விளையாட்டுக்கள், இளமை ஆகியவை எடுத்துரைக்கப்படுகின்றன.

'முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில்' வைத்தீசுவரன் கோயில் பற்றிய தலச்செய்திகள் இடம் பெற்றுள்ளன. இத்தலத்தின் இன்னொரு பெயர் 'புள்ளிருக்கு வேளூர்'. இத்தலத்திலுள்ள 'சித்தாமிர்த தீர்த்தம்' மிகவும் புண்ணியமும், புகழும் வாய்ந்தது.

குமரகுருபரர், இப்பிள்ளைத் தமிழில் 'சிவனும் முருகனும் ஒன்றே' என்று கூறுகிறார். சைவ சித்தாந்த சாத்திரங்கள் கூறும் இறையின் பொது இயல்பும், சிறப்பு இயல்பும், பதியே நிமித்த காரணன், இன்பகாரணன், மகாசங்கார காரணன் என்பதுவும் இப்பிள்ளைத் தமிழில் எவ்வாறெல்லாம் இயம்பப்பட்டுள்ளன என்பதுவும் விரிவாக ஆராயப்படுகின்றன.

ஐந்தொழில்களோடு, சூக்கும, அதிசூக்கும ஐந்தொழில்கள் நடத்தும் இறையைப் பற்றிக் குமரகுருபரர் கூறும் கருத்துக்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இறைவனின் மூவகைத் திருமேனிகளைப் பற்றியும், அவற்றின் முக்கியத்துவம் பற்றியும், அருளே அவனது திருமேனியாதல் பற்றியும் குமரகுருபரர் கூறுவது இப்பிள்ளைத் தமிழின் வாயிலாக சுட்டப்பட்டுள்ளன.

அம்மையப்பரின் திருக்கோலம் 'ஒன்றில் இரண்டு' எனப்படும். இறைவன் உயிர்களோடு கொள்ளும் அத்துவித நிலை, 'இருமையில் ஒருமை' எனப்படும். இவற்றைப் பற்றிக் குமரகுருபரர் கூறுவன இங்கு எடுத்தியம்பப்படுகின்றன.

'பசு' எனப்படும் உயிர் எண்ணிறந்தது. அது, யான் என்னும் தன் உணர்வினைக் கொண்டது. உயிர்கள் தம் வினையின் காரணமாக உடலைப் பெறுகின்றன. அதனால் அச்சுமாறியும் பிறக்கின்றன. இறைவன் உயிர்களுக்கு ஞானத்தை உள்நின்று உணர்த்துகின்றான். இவைபற்றிக் குமரகுருபரர்

கூறுவது விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

பாச இயலில் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களின் பொது இயல்பும், சிறப்பு இயல்பும் சித்தாந்த சாத்திரங்கள் வழியாகச் சொல்லப்பட்டுள்ளன. அவை, குமரகுருபரரால் எங்ஙனம் எடுத்தாளப்பட்டிருக்கின்றன என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

ஆணவத்தை, 'இருள்', 'அகவிருள் படலம்' எனக் குமரகுருபரர் குறிப்பிடுகிறார். வினைச் சுழற்சியால் உயிர்களுக்கு ஏற்படும் எண்ணற்ற பிறவிகளைக் குறித்து 'கருமன்னும் ஊழிப் பெரும்பிணி' என்பார். உயிர்களின் எல்லா வினைகளையும் இறைவன் தீர்த்தருளும் கருணையை வியந்து போற்றுகிறார். மாயையின் காரியங்களான 'நாதம்' முதலிய முப்பத்தாறு தத்துவங்களுக்கும் காரணமானவன் முருகன்; ஞானேந்திரியங்களுக்கும், அந்தக் கரணங்களுக்கும் இன்பம் பயப்பவன் முருகன் என்றும் குமரகுருபரர் சொல்வது இயம்பப்படுகிறது.

சைவசித்தாந்த நால்வகை நெறிகளில் ஒழுகி நிற்பவர்கள் அடியார்கள் ஆவர். அடியார்களின் பெருமையைச் சொல்லி அவர்களைக் குமரகுருபரர் சிறப்பிக்கிறார்.

உடலோடு வாழும் காலத்திலேயே இறைவன் திருவடி இன்பத்தில் திளைத்திருப்போர் 'சீவன் முத்தர்' எனப்படுவர். அங்ஙனம் அநுபூதி பெற்ற அடியார்களுக்கு இறைவனின் திருவடிச் சிலம்பு ஓசை கேட்கும். இதைக் கழறிற்றறிவார் புராணம் வாயிலாக அறியலாம். இதனைக் குமரகுருபரர் 'பரநாதத்தொலி' என்பர். இக்கருத்து எடுத்துக்காட்டுடன் சொல்லப்பட்டுள்ளது.

முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில் இடம்பெறும் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பெரும்பாலும் ஒன்றுவிடாமல் இவண் ஆராயப்பட்டுள்ளன. எனினும், இது மேலும் தொடர்வதற்கும் வாய்ப்புண்டு.

சைவ சமயத்தில் தோன்றிய மற்றைய பிள்ளைத் தமிழ்களோடு சைவ சித்தாந்தத்தை இணைத்துப் பார்த்து ஆய்வு செய்யவும் வாய்ப்புண்டு. இங்குச் சொல்லப்பட்டுள்ள 'பதி இயல்' கருத்துக்கள், 'பசு இயல்' கருத்துக்கள், 'பாச இயல்' கருத்துக்கள் இவற்றைத் தனித்தனித் தலைப்பாகக் கொண்டும் ஆய்வு மேற்கொள்ளலாம்.

பதினான்கு சாத்திரங்களில் ஏதேனும் ஓர் சாத்திரத்தை மட்டும் எடுத்துக் கொண்டு அதில் சொல்லப்பட்ட கருத்துக்களோடு பிள்ளைத் தமிழ் ஆய்வை மேற்கொள்ளலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாகக் குமரகுருபரர் அருளிய ஒவ்வொரு பிரபந்தத்திலும் இடம்பெறும் சைவசித்தாந்தக் கருத்துக்களை ஒப்பிட்டு ஆராயவும் இடமுண்டு.

தோன்றாத் துணையென நிற்கும் இறைவனின் திருவடிகளை நினைந்து துதிக்கவும், திவ்வியம் பழுத்த சைவசித்தாந்தத்தின் வாயிலாக நீங்காத இன்பம் பயக்கும் பிறவாத நன்னெறியைப் பெற்றிடவும் இவ்வகை இலக்கியங்கள் உதவும்.

# 8. பின்னிணைப்பு

**முதன்மை ஆதாரம்**

சாமிநாத ஐயர், உ.வே., (உ.ஆ), ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள், நான்காம் பதிப்பு, 1961.

சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும், சைவசித்தாந்தப் பெருமன்றம், சென்னை, 1994.

மாணிக்கம், அ., குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2000.

**துணைமை ஆதாரங்கள்**

அருணகிரி நாதர், திருப்புகழ், திருமுருகன் திருப்புகழ் சபை, மதுரை, 1986.

அருணை வடிவேலு முதலியார், சி., சித்தாந்தத் தெளிவியல், தருமையாதீனம், 1968.

______________, சித்தாந்த வினா விடை, தருமபுர ஆதீனம், 1995.

______________, சிவஞானப் போதத் திருநெறியுரை, சத்வித்ய சன்மார்க்க சங்கம், பேரூர், 1992.

______________., (உ.ஆ), சிவஞான போத மாபாடியப் பொருள்நிலை விளக்கம், த.ப.க., தஞ்சாவூர், 1991.

______________., முப்பொருள் இயல்பு, சைவசித்தாந்தப் பெருமன்றம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1994.

ஆனந்தராசன், ஆ., (உ.ஆ), உண்மை விளக்கம், அ.அ. மன்றம், திருநெல்வேலி, இரண்டாம் பதிப்பு, 1998.

______________, (உ.ஆ), சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, அ.அ. மன்றம், திருநெல்வேலி, மூன்றாம் பதிப்பு, 2003.

______________, (உ.ஆ), திருவருட்பயன் வழித்துணை விளக்கவுரை, அ.அ. மன்றம், திருநெல்வேலி, 1999.

இராமசாமி, மு.பெரி.மு., திருக்குறள் மிக மிக எளிய உரை, ஸ்ரீ இந்து பப்ளிகேஷன் , சென்னை, 1991.

இராமசுப்பிரமணியம், வ.த., (உ.ஆ)., திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2002.

______________, (உ.ஆ)., திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2002.

இராமநாதபிள்ளை, ப., (உ.ஆ), திருமந்திரம், கழகம், சென்னை, 8–ஆம் பதிப்பு, 1996.

இராமநாதன், அரு., (ப.ஆ), சித்தர் பாடல்கள் (முதற்பாகம்), பிரேமா பிரசுரம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1995.

இராமன், ப., (உ.ஆ)., பாம்பன் சுவாமிகள் பாடியருளிய சண்முகாநந்த சிவம், எம்.கே. விஸ்வேஸ்வரன், சென்னை, 1996.

கங்காதரன், ச., சைவசித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும், அங்கயற்கண்ணி அகம், மதுரை, 1993.

கந்தசாமி, ஆ., குமரகுருபரர் கற்பனை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1999.

கல்யாண சுந்தரனார், திரு.வி., முருகன் அல்லது அழகு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2001.

காஞ்சிபுரம் சிதம்பர முனிவர், ஸ்ரீ சுப்ரமணியக் கடவுள் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ், சிறுவாபுரி முருகன் அபிஷேகக் குழு, சென்னை, 2004.

கிருஷ்ணசாமி, வே., தமிழில் தலபுராண இலக்கியம், அ. வேலுக்கோனார், முத்துசாமிபுரம், நெல்லை மாவட்டம், 1974.

கிருஷ்ணன், ஆர்., (தொ.ஆ)., வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய 'புலவர் புராணம்', இராமானந்த அடிகளார் அறக்கட்டளை, கோவை, 1994.

கிருபானந்த வாரியார் (உ.ஆ)., கந்தரலங்காரம், வானதி பதிப்பகம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1995.

————————, கந்தரனுபூதி, வானதி பதிப்பகம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1990.

குருஞானசம்பந்தர், சிவபோக சாரம் (சில பாடல்கள் மாத்திரம்), ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணி மன்றம், மதுரை, 1992.

கோமதி சூரியமூர்த்தி, திருஞானசம்பந்தர் தேவாரமும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும், மதுரை, 1994.

சண்முகம், செ.வை., (ப.ஆ)., சுவாமி நாதம், அ.ப.க., சிதம்பரம், 1975.

சாம்பசிவனார், ச., சிவஞான போதச் செம்பொருள், வளவன் வெளியீடு, மதுரை, 2001.

————————., சைவசித்தாந்தக் கலைச் சொல் அகராதி, வளவன் வெளியீடு, மதுரை, 2003.

————————., திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், வளவன் வெளியீடு, மதுரை, 1998.

————————, திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள், வளவன் வெளியீடு, மதுரை, 1997.

————————, பக்தித் நெறிப் பனுவல்கள், வளவன் வெளியீடு, மதுரை, 1992.

சிதம்பர சுவாமிகள், ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் அருளிச் செய்த திருப்போரூர்ச் சந்நிதி முறையும், பிற நூல்களும், கந்தசுவாமி தேவத்தானம், திருப்போரூர், 1967.

சித்பவானந்தர், (உ.ஆ)., திருவாசகம். ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த் துறை, ஐந்தாம் பதிப்பு, 1985.

சுப்பிரமணிய பிள்ளை, கா., குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், கழகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1975.

_____________, (உ.ஆ)., மெய்கண்டாரும் சிவஞான போதமும், கழகம், சென்னை, நான்காம் பதிப்பு, 1977.

சுப்பிரமணியன், ச.வே., இலக்கணத் தொகை (யாப்புப் பாட்டியல்), தமிழ்ப்பதிப்பகம், சென்னை, 1978.

_____________, கம்பன் இலக்கிய உத்திகள், மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி, 1982.

_____________, தொல்காப்பியம் தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.

சுப்பு ரெட்டியார், ந., சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம், கழகம், சென்னை, 2001.

_____________, தாயுமானவர், கலைஞன் பதிப்பகம், சென்னை, 2001.

ஜயராமன், ம.வே., தமிழ் மாமுனிவர் 'திருப்பெருந்திரு குமரகுருபர அடிகள் வரலாறு', வெங்கடேசா கல்விக் கழகம், பெங்களூர், 1989.

ஜெயராமன், ந.வீ., பாட்டியலும் இலக்கிய வகைகளும், இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1981.

சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)., புறப்பொருள் வெண்பாமாலை, கழகம், சென்னை, 2002.

தட்சிணாமூர்த்தி, வை., ஸ்ரீ நடராசத் தத்துவம், வானதி பதிப்பகம், சென்னை, 1996.

தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, பத்தொன்பதாம் பதிப்பு, 2003.

திருப்புள்ளிருக்கு வேளூர்த் திருப்பதிகங்கள், தருமை ஆதீனம், தருமபுரம், 2ஆம் பதிப்பு, 2000.

திருவிளங்கம், மு., (உ.ஆ)., சிவஞான சித்தியார் சுபக்கம், யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 2ஆம் பதிப்பு, 1971.

துரைசாமிப்பிள்ளை, சு., (உ.ஆ)., வாகீச முனிவர் அருளிச் செய்த ஞானாமிர்த மூலமும் பழைய உரையும், அ.ப.க., அண்ணாமலைநகர், 1987.

நாராயண வேலுப்பிள்ளை, எம்., (உ.ஆ)., சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் மூலமும் தெளிவுரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2002.

நீலாயதாட்சி, ச., சைவசித்தாந்த வினைக் கோட்பாடும் பக்தி நெறியும், மகாவீர் பதிப்பகம், தஞ்சாவூர், 2001.

பதினொன்றாந் திருமுறை, ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமை ஆதீனம், 1995.

பழநியாண்டி, எ ., முத்துவீரியம், (ஆண்டு, பதிப்பு)

பாம்பன் சுவாமிகள், காசியாத்திரை, வி.என். சௌந்தராசன், சென்னை, 1995.

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள், தகராலய ரகசியம் (சதானந்த சாகரம்), என். ஜெயராமன், குமரகுரு நூலகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1991.

______________., திருவலங்கற்றிரட்டு இரண்டாங் கண்டம், குமரகுரு நூலகம், சென்னை–33, மூன்றாம் பதிப்பு, 1991.

பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1991.

புள்ளிருக்கு வேளூர்த் தலவரலாறு, தருமை ஆதீனம், ஸ்ரீ வைத்திய நாதசுவாமி தேவ தானம், வைத்தீசுவரன் கோயில், 11ஆம் பதிப்பு, 2003.

பூவண்ணன், கம்பராமாயணம் மூலமும் தெளிவுரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2000.

மணி, சி.சு., (உ.ஆ)., சிவஞானசித்தியார் சுபக்கம், அ.அ. மன்றம், திருநெல்வேலி, 1998.

______________, (உ.ஆ)., சிவஞானசித்தியார் (பரபக்கமும் சுபக்கமும்), அ.அ. மன்றம், திருநெல்வேலி, 1995.

——————, (உ.ஆ)., சிவப்பிரகாசம், அ.அ. மன்றம், திருநெல்வேலி, இரண்டாம் பதிப்பு, 2001.

——————, (உ.ஆ)., திருவுந்தியார் திருக்களிற்றுப் படியார், அ.அ. மன்றம், திருநெல்வேலி, இரண்டாம் பதிப்பு 2000.

——————, (உ.ஆ)., மெய்கண்ட நூல்களுள் ஏழு, அ.அ. மன்றம், திருநெல்வேலி, இரண்டாம் பதிப்பு, 1999.

மறைமலையடிகள், சிவஞான போத ஆராய்ச்சி, கழகம், சென்னை, 1971.

மாணிக்கம், அ., கந்தபுராணம் மூலமும் தெளிவுரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 2000.

——————, திருவருட்பா மூலமும் உரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2002.

——————, (உ.ஆ), பதிற்றுப் பத்து மூலமும் உரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

——————, பெரியபுராணம் மூலமும் தெளிவுரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, நான்காம் பதிப்பு, 1999.

மீனாட்சி சுந்தரம் பிள்ளை, த.ச., (ப.ஆ), தணிகைப் புராணம் (குறிப்புரையுடன்), திருவாவடுதுறை ஆதீனம், 1960.

——————, திருப்பனந்தாள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரம், உ.வே.சா. நூலகம், சென்னை, 1976.

முத்துக்குமரன், பி.எல்., (ப.ஆ), முருகன் அருள் செல்வம், முல்லைப் பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1998.

முத்துக்குமார சுவாமிகள், ஆ., சிவஞான தத்துவ தீபம், அ. பொன்னுச்சாமி ஆச்சாரியார், பொள்ளாச்சி, 1927.

முத்துச்சாமி பிள்ளை, கோ.மு., திருப்புகழில் சைவசித்தாந்தம், சைவசித்தாந்தப் பெருமன்றம், சென்னை, 1988.

முத்துராசன், கு., பிள்ளைத்தமிழ் இலக்கியம், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1984.

முத்தையா பிள்ளை, பொ., (உ.ஆ.), சிவஞான போத சிற்றுரை விளக்கம், சைவசித்தாந்தப் பெருமன்றம், சென்னை, 1989.

வச்சிரவேலு முதலியார், க., சைவமும் வைணவமும், தமிழ்நாடு இந்து அறநிலைய ஆட்சித்துறை, சென்னை, 1976.

வரதராசன், மு., தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, பதினேழாம் பதிப்பு, 2002.

வெள்ளை வாரணன், க., (ப.ஆ), தொல்காப்பியம் புறத்திணையியல் உரைவளம், ம.கா. பல்கலைக்கழகம், மதுரை, 1983.

—————————., பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி, அ.ப.க., அண்ணாமலை நகர், 1962.

வைத்தீசுவரன் கோயில், வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம், பதிப்பு ஆண்டு

ராமானுஜா சாரி, ர., சைவசித்தாந்தம், அண்ணாமலைநகர், 1963.

ஸ்ரீசந்திரன், ஜெ., (உ.ஆ), சிலப்பதிகாரம் மூலமும் தெளிவுரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, எட்டாம் பதிப்பு, 2000.

**கலைக்களஞ்சியம், மலர்கள், இதழ்கள், ஆய்வுமாலை, ஆய்வேடுகள் முதலியன**

இரத்தினம் செட்டியார், முரு.பழ., முப்பொருளில் மூன்றாம் பொருள், ‘சக்தி’ ஆண்டுமலர், கோலாலம்பூர், 1994.

கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் மணிவிழா மலர், ஸ்ரீகாசி மடம், திருப்பனந்தாள், 1991.

கலைக்களஞ்சியம், தொகுதி.7, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1961.

சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, Asian Education Services, Madras, 1988.

தமிழ் மாருதம், திங்களிதழ், மதுரை.

பரமசிவம், த.கோ., மற்றும் பலர் ( ப.ஆ), குமரகுருபரர் ஆய்வுமாலை– மூன்று தொகுதிகள், குமரகுருபரர் இலக்கிய ஆய்வு விழா வெளியீடு, வாரணாசி, 1999.

ஸ்ரீகுமரகுருபரர், திங்களிதழ், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் கலைக் கல்லூரி, பொன்விழா மலர், 1996.

குமாரசாமித் தம்பிரான், குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்களில் மெய்கண்ட சாத்திரக் கருத்துக்கள், எம்.ஃபில் ஆய்வேடு, தமிழ்த்துறை, ஸ்ரீ கா.சு.சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள், 1994.

சாம்பசிவனார், ச., சுந்தரர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், (அச்சாகாத ஆய்வேடு)

தேவகி,எம்., மெய்கண்டார் வழங்கும் உயிர் விளக்கம், எம்.ஃபில்., ஆய்வேடு, சைவசித்தாந்தத் தத்துவத் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1994.

மாணிக்கம், ந., குமரகுருபரர் பாடல்கள் ஓர் ஆய்வு, பி.எச்டி ஆய்வேடு, தமிழ்த் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1976.

**ஆங்கிலக் கட்டுரைகள், நூல்கள்**

Devapoopathy Nadarajah., "The Svekasvatara Upanishad and Saiva Siddhanta" Proceedings of the 2nd International Saiva Siddhanta Seminar, Kualalumpur, 1986.

Krishnan, P. (Editor), Facets of Saiva Siddhanta, University of Madràs, Chennai 600 005, 2000.

Ramanujachari, R. 'Saiva Siddhanta', **Collected Lectures on Saiva Siddhanta,** Annamalai University, Annamalai Nagar, 1965.

Subramaniya Pillai, G., "Introduction and History of Saiva Siddhanta", **Collected Lectures on Saiva Siddhanta**, A.U. 1965.

Zvelebil. V. Kamil, Thiru Murugan, International Institute of Tamil Studies, Madras, 1981.

## பின்னிணைப்பு எண். 2

36 தத்துவங்கள்




[சான்று: சி. அருணை வடிவேலு முதலியார், சிவஞான போதத் திருநெறியுரை, பக். 261–262]

## பின்னிணைப்பு எண். 8

### "பரநாதத்தொலி"



Z

(சான்று: வை. தட்சிணாமூர்த்தி, ஸ்ரீ நடராசத்தத்துவம், ப.200)



ஸ்ரீலஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள்



ஸ்ரீலஸ்ரீ. அ.வே. சாந்திகுமார சுவாமிகள் (Sri-la-Sri A.V. Shanthikumara Swamigal) பத்ரிகா ஆஸ்ரம் துவாரகாபீடம் ஸ்ரீஸ்ரீஸ்ரீ வித்யநாராயணதீர்த்த சுவாமிகளால் (His Holiness SriSriSri Vidya Narayanatheertha Swaminaha) சாயிமார்க்கத்திற்கு ஆற்றுப்படுத்தப்பட்டவர். பொறியியல் (Engg.), தத்துவம் (Philosophy), சமயம் (Religion), உளவியல் (Psychology), வானியல் (Astronomy), கவிதை (Lyrics) என பல்வேறு துறைகளில் தடம் பதித்தவர். மெய்யியல் (Metaphysics) ஆய்வுகளுக்காக, தத்துவ மையம் (Shirdi Sai Institute of Mystical Sciences) ஒன்றை நிறுவியுள்ளார்.